*இன்னுமா உறக்கம் முதல் பகுதி அத்தியாயம் ஆறுடன் முடிவடைந்தது. இரண்டாம் பகுதி இதனுடன் தொடங்குகிறது.*

## அத்தியாயம் ஏழு

**அக்னீ வேத ரகசியம்**

**இந்துக்களுடைய வேதத்தில் ரிக் வேதத்துடைய முதல் மந்திரமே புகழைக் கொண்டுதான் துவங்குகிறது. 'அனைத்து வணக்கங்கள் இன்னும் புகழனைத்தும் 'அக்னி'க்குரியதாகும்.** – நூல்: ரிக்வேதம் 1-1-1.

இந்து மதத்தின் மிகப் பெரும் பிரிவுகளாகிய ஆரிய சமாஜும், சனாதன தர்மத்தின் அறிஞர்களும் **அக்னீ** என்னும் பதம் உண்மையில் **'அகிர்னீ'** என்பதுதான் என்பதில் ஒத்தக் கருத்துடையயோராகக் காணப்படுகின்றனர். இதற்குரிய விளக்கம் **'அனைத்துக்கும் முந்தைய'** அல்லது **'முதன் முதல்'** அல்லது எதற்கு முன் எதுவும் இல்லையோ அது என்பதாகும். ஆதலால் மேற்கண்ட மந்திரத்தை முஸ்லிமான ஒருவர் எப்போது பார்த்தாலும் அவர் அக்னீ என்பது வேதங்களில் இறைவனின் திருப்பெயர் என்றுதான் கூறுவார். ஆனால் அதேநேரம் வேதங்களை தொடர்ந்து வாசிப்பாராயின் அக்னீ என்பதற்குரிய விளக்கத்தை காண்பதில் நிச்சயம் குழம்பிப் போய் விடுவார். ஏனெனில் அக்னீ என்னும் பதம் வேதத்தில் சில இடங்களில் மனிதர்களையும் சில இடங்களில் இறைவனையும் குறிப்பிடுகிறது. உதாரணமாக...

अग्निं दूतं वृणीमहे

**'நாங்கள் அக்னியை திருத்தூதராக தேர்ந்தெடுத்திருக்கிறோம்'** –நூல்: ரிக்வேதம் 1-12-1.

त्वमग्ने प्रयतदक्षिणं नरं

**'அக்னீ அந்த மனிதர். அவர் வணக்கம் புரிவோர் மீது சந்தோஷம் அடைகிறார்.'**- ரிக்வேதம் 15-31-1

ஹகீகத்தே அஹ்மதீ என்பது என்ன என புரிந்து கொண்டோருக்கு இங்கே எத்தகைய சிரமமும் நேராது. காரணம் இறைவன் தனது ரவூ:ஃபுர் ரஹீம் என்னும் பண்புப் பெயரை தனது முதல் படைப்பாளருக்கு பெயராகத் தந்திருக்கிறான். முஸ்லிம் வேதமான குர்ஆனில் தனது முதல் படைப்பான ரவூ:ஃபுர் ரஹீம் எனக் கூறியிருப்பதை நாம் கவனிக்க வேண்டும். பின்னும் ஆன்ம லோகத்தில் அவரைத்தான் முதல் படைப்பாகப் படைத்தான்.

இனி இறைவன் தனது பண்புப் பெயரை தனது முதல் படைப்பாளருக்குத் தந்துள்ள செய்தி எல்லாப் பரிசுத்த வேதங்களிலும் கூறப்பட்டிருந்தது. இந்த உண்மை காலப் போக்கில் தடம்மாறி உலகிலுள்ள மதங்களுக்குள்ளே இணை வைத்தலையும், தேவர்களையும் ஏற்படுத்தக் காரணமாகிவிட்டது. இன்னும் இங்கிருந்துதான் இறைவனின் திருநாமங்களைக் கொண்டு பெயரிடப்பட்ட முதல் படைப்பாளரின் ரகசியங்களைத் தெரிந்து விட்டு அவதாரங்கள்

என்னும் உருவங்கள் தோன்றின. அதாவது இறைவனே மனித உருவில் பூமியில் தோன்றினான் என்னும் கொள்கையாகும். பின்னர் இது அறிவுக்கு விளங்காமல் போனதால் இறைவனுக்கு குமாரர்கள் கற்பிக்கப்பட்டனர். யூதர்கள் இதனை உஜைர் நபியின் மீதும், கிறிஸ்துவர்கள் ஈஸா நபியின் மீதும் கற்பித்தனர்.

அக்னீ அதாவது '**துவக்கமாக்குதல்**' இது இறைவனுக்குரிய பண்பாகும். இவ்வாறே முஹம்மத் நபியவர்கள் முதன் முதல் படைக்கப்பட்டதால் 'முதல் அடியார்' என்னும் பண்பு நிலையினைப் பெற்றனர். இது பின்னர் குழப்பத்திற்குரிய ஒன்றாக மாறிப் போய் விடும் என்பதும் இறைவனுக்குத் தெரிந்திருந்ததால் தான் அவனே வேதங்களில் பல்வேறு இடங்களில் அக்னியைப் பற்றிய இரகசியத்தை தேடுமாறு வலியுறுத்துகிறான். அதனால்தான்...

'**அந்த ரகசியத்தை அறிவின் வெளிச்சத்தைக் கொண்டு தேடுவார்கள்**.' –நூல்: ரிக் வேதம் 3-71-10.

எனக் கூறப்பட்டிருப்பதோடு **மிகத் தீவிரமாகத் தேடுவது கொண்டு** அக்னியின் ரகசியம் வெளியாகும்.' என்றும் முன்னறிவிப்பு செய்துள்ளான்.

'**அதில்தான் உனது வெற்றிக்குரிய அடித்தளமே அமைந்துள்ளது. அந்த இரகசியம் உனக்கு வெளியானபின் நீ இப்பூமியின் இமாமா(தலைவனா)வாய்**' என்றும், நூல்: ரிக் வேதம் 5-29-3

'**பாலைவனக் கூட்;டதார் (முஸ்லிம்கள்) அந்த ரகசியத்தைக் கண்டு பிடிப்பார்கள்.**' –நூல்: ரிக்வேதம் 3-3-5

'**அனைத்துக்கும் இறுதியாக உள்ள வெளிச்சத்திற்குரிய பொருளை (குர்ஆனை) அனைத்துக்கும் முந்தியதாக உள்ள வெளிச்சத்திற்குரிய பொருளின் (வேதத்தின்) மீது வைக்க வேண்டும். (அதாவது குர்ஆனுடைய வெளிச்சத்தைக் கொண்டு வேதங்கள் ஆய்வு செய்யப்பட்டால்) அப்போது அக்னியின் ரகசியம் வெளியாகும்.**' –நூல்: ரிக் வேதம் 3-29-3

ஹகீகத்தே அஹ்மதியைப் பற்றி மிகவும் விரிவாக ஒவ்வொரு பரிசுத்த வேதத்திலும் விளக்கப்பட்டதற்குரிய நோக்கம் என்னவெனில், ஒவ்வொரு கூட்டத்தாரும் தங்களிடம் வருகை தந்த ரஸூலை மட்டும் தமக்குரியவராக ஆக்கிக் கொண்டு மற்றவர்களை நிராகரிப்பார்கள். அப்போது உலகிலுள்ளோர் அனைவரையும் ஏகத்துவத்தில் இணைப்பதற்காக வேண்டி இறுதித் தூதரை இறுதியாக வந்த தூதர் என்றில்லாமல் அனைவருக்கும் முந்தைய முதல் திருத்தூதர் (அஹ்மத்) என்பதை அவர்கள் தெரிந்து வைத்திருந்தால் குழப்பமாகிப் போய்விட்ட ஹகீகத்தே அஹ்மதியை அவர்களுடைய வேதங்களில் குர்ஆனுடைய வெளிச்சத்தைக் கொண்டு கண்டுபிடித்து உலகமனைத்தையும் ஒரே திருத்தூதரின் அகமியத்தின் மீது இணைப்பதுதான் இதன் நோக்கமாகும்.

இந்துமத நூல்களில் அக்னியைப் பற்றி கூறப்பட்டுள்ளதாவது, அதைப் புரிந்தாலன்றி இந்துமத்தில் ஏகத்துவக் கொள்கையின் விளக்கமோ, நபித்துவத்தின் விளக்கமோ கிடைக்காது. ஏனெனில் இப்பதம் சில இடங்களில் இறைவனைக் குறித்தும், சில இடங்களில் அஹ்மத் நபியைக் குறித்தும் பேசுகிறது. ஆகையால் இதனுடைய விளக்கத்தை நாம் ஏகத்துவம், தூதுத்துவம் மற்றும் மறுமை சம்பந்தமான பிரிவுகளை விளக்கும் முன் அக்னியைக் குறித்து விளக்குவது மிகவும் அவசியம் எனக் கருதினோம்.

## அத்தியாயம் எட்டு

**பெயர்களின் ஒற்றுமை**

**மற்ற ஆய்வாளர்கள் கூறுவதென்ன?**

முன்னால் நாம் பல இடங்களில் 'வைதீக தர்மத்தில்' விண்ணின் வேத வாக்குகள் உண்டென்பதற்குரிய பல விளக்கமான ஆதாரங்களை தருவோமென குறிப்பிட்டிருந்தோம். ஆனால் அதற்குமுன் முஸ்லிம் அறிஷஞர்கள் இந்து சமூகம் மற்றும் இந்து மதம் பற்றி எப்படிப்பட்ட அபிப்பிராயங்களை கொண்டிருந்தனர் என்பதை முதலில் பார்ப்போம்.

**'இந்து மதத்தில் ஏகத்துவம் இல்லையென்பதை மறுக்க முடியாது. எனினும் இந்துமதம் எவ்வளவு பழமையாகிவிட்டதெனில் காலத்தின் மாற்றத்தால் அதில் தூய்மையான ஏகத்துவம் இல்லாமலாகிவிட்டது.'** –நூல்: மஆரி ஃப், பக்கம் 178.

'**அல்பெய்ரூனி**' என்னும் இந்து மத ஆய்வாளர் கூறுகிறார், இந்துக்களில் குறிப்பானவர்கள் மட்டுமே ஏகத்துவ வாதிகள் என்றும், பொது ஜனங்களை 'முஷ்ரிக்' (இணைவைப்பவர்கள்) என்றும் அவர் நம்புகிறார். '**கிதாபுல் ஹிந்த்**' என்னும் நூலின் பதினொன்றாவது அத்தியாயத்தில் அவர் இவ்வாறு கூறுகிறார்.

**'விக்கிரஹ வணக்கம் பொதுமக்களின் மதமாகும். ஆனால் குறிப்பானவர்களின் உள்ளங்கள் இறைவனல்லாதவைகளின் வணக்கத்தை விட தூய்மையாக உள்ளது. முஸ்லிம் தலைவர்களில் மீர்ஸா ஜானேஜான் என்பார் இந்துக்களின் விக்கிரஹ வணக்கத்திற்கு விளக்கம் தரப்படுவதை அங்கீகரிப்பதுடன் அவர்களை உண்மையான ஏகத்துவ வாதிகள் என்றும் நம்புகிறார்.'** –நூல்: மஆரி ஃப், பக்கம் 180, 181.

இறுதியாக நாம் ஷாஹ் அப்துல் அஜீஸ் முஹத்திஸ் தெஹ்லவி என்பாரின் கருத்தொன்றைத் தருகிறோம். அவர் எழுதுகிறார்....

**'முஸ்லிம் வேதமான குர்ஆனில் 'வ இன்மின் உம்மத்தின் இல்லா ஃகலா ஃபீஹா நதீர்' என்னும் வசனப்படி ஒவ்வொரு கூட்டத்தாரிலும் இறைவனை அஞ்சுவோர் இருந்துள்ளனர் என்னும்போது இந்துக்களின் அவதாரங்கள் என்பவை ஹக்குடைய மழ்ஹராக (இறைவனை வெளிப்படுத்தும் துறையாக) இருந்தன. ஆனால் இந்துக்களிலுள்ள பாமரர்கள் தங்களுடைய எண்ணத்தின் உதிப்பில் வெளியீட்டுக்கும் வெளியீட்டுத் துறைக்கும்**

**இடையேயுள்ள வித்தியாசத்தை உணரத் தவளி விட்டனர். இன்னும் அனைவரையும் வணக்கத்திற்குரியவர்களாக எண்ணி வழிகேட்டில் சிக்கிக் கொண்டனர்**.' –நூல்: பதாவா அஸீஸி, பாகம் 1 பக்கம் 133, 134.

**இந்து மதத்தின் இஸ்லாமியப் பெயர்**

இப்போது வாருங்கள். முதலில் '**இந்து மதம்**' என்னும் பெயரைக் கவனிப்போம். அந்த வைதீக தர்மத்தின்ட பெயர் இந்துமதம் அல்ல. மாறாக அதனுடைய உண்மையான பெயர் 'சனாதன தர்மம்' மற்றும் '**ஷாஷூத்து தர்மம்**' என்பதாகும். சனாதன என்பதன் அர்த்தம் '**சதா நேராக நடந்து வந்தது**' அல்லது '**பழமையானது**' என்பதாகும். இவ்வாறே ஷாஷூத்து என்பதன் அர்த்தம் '**விண்ணிலிருந்து மண்ணுக்கு நேராக வந்தது**' என்பதாகும். சனாதன தர்மம் மற்றும் ஷாஷூத்து தர்மம் என்பது **நேரான மார்க்கம்** அல்லது **நேராக்கப்பட்ட மார்க்கம்** என்னும் அர்த்தம் தரும் பதங்களாகும். கீதையில் இப்பதத்திற்குப் பதிலாக '**சிவ் தர்மம்**' மற்றும் '**சிவ்பாவனீத் தரம்**' என்னும் பதங்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனுடைய அர்த்தம் '**இயற்கையால் கற்பிக்கப்பட்ட**' மற்றும் '**தாய் தந்தையரால் கற்பிக்கப்பட்ட**' என்பதாகும்.

இனி முஸ்லிம் வேதமான குர்ஆன் இஸ்லாத்தை '**இறைவனுடைய மார்க்கம்**' என்றும், **நேரான மார்க்கம்** என்றும் '**இயற்கை மார்க்கம்**' என்றும் கூறுகிறது. இதில் நம்முடைய நம்பிக்கையும் கொள்கையும் என்னவெனில், ஒவ்வொரு நபியும் தமது கூட்டத்தாருக்கு இஸ்லாமிய மார்க்கத்தைதான் தந்தனர் என்பதாம். ஆதம் நபியும், நூஹ் நபியும், இஸ்லாமிய மார்க்கத்தை நிலைப்படுத்துவதற்காகத்தான் வந்தனர். ஆனால் காலம் செல்லச் செல்ல அவர்களுடைய வழிகாட்டல்கள் என்பது மறைந்து போய்விட்டன. உலகிலுள்ள மாற்று மதத்தை நம்பக்கூடிய கூட்டத்தார் தத்தம் தமது மதத்துக்கு பல்வேறு பெயர்களை வைத்துக் கொண்டனர். ஆயினும் இப்பழமையான கூட்டத்தார் மட்டும் இஸ்லாமிய மார்க்கத்துடைய பண்புப் பெயர்களின் உண்மையான பெயரை மாற்றிவிடாமல் அப்படியே வைத்துக் கொண்டுள்ளனர்.

**அல்லாஹ்வின் பெயர் எல்லா மதத்திலும்**

பெயர்களுடைய மாற்றத்தில அல்லாஹ்வுடைய பெயரும் தப்பவில்லை. எனினும் அல்லாஹ் என்னும் பெயருக்குரிய தனித்தன்மை எல்லா மதங்களிலும் காணப்படுகிறது. ஏக இறைவனை பல கூட்டத்தாரும் மதவாதிகளும் அல்லாஹ், பகவான், ஈஸ்வர், குதா, காட், என பல பெயர்களைக் கொண்டு அழைக்கின்றனர். இதில் அந்த ஏக இறைவனை எந்தப் பெயரைக் கொண்டு அழைக்கலாம் என்பதில் யாருக்கும் கருத்து வேறுபாடு என்பது கிடையாது. அன்றி மொழிகளுக்கிடையே காணப்படும் வித்தியாசத்தில் எந்தக் குற்றமும் இல்லை. முஸ்லிம் வேதமான குர்ஆனும் அல்லாஹ்வுக்கு கணக்கற்ற அழகழகான பண்புப் பெயர்கள் இருப்பதாகக் கூறுகிறது. எனினும் தாத்திய்யான (தன்மயத்திற்குரிய) பெயர் அல்லாஹ் என்பதாகும்.

**'இனி அல்லாஹ் என்னும் இப்பதம் 'அல்லாஹ்' என்பதாகும். இது சிறு சிறு மாற்றங்களோடு இன்றும் கூட கிட்டத்தட்ட எல்லா மதங்களிலும் காணப்படுகிறது**.

**மௌலானா உபைதுல்லாஹ் சிந்தீ என்பாரது ஆய்வு என்னவெனில், திபெத்துடைய தலைநகரத்தின் பெயர் 'லாஸஹ்' என்பதாகும். இது அஸலில் 'லாஹ்10ஸஹ்' என்பதாகும். அதாவது 'பைத்துல்லாஹ்(இறைவனின் வீடு) என்பதாகும். இந்த நகரம் ஆரியக் கூட்டத்தாரின் மதப்; புனிதத்திற்குரிய பழமையான தலைமை இடமாகும் என்று கூறுகின்றனர். இனி நமது இவ்வெண்ணத்தை மௌலானா ஹமீதுத்தீன் என்பாரிடம் சொன்னபோது அதற்கவர், இறைவனுடைய பெயருக்குரிய மூலப்பதமான இது உலகிலுள்ள மதங்களின் பழமையான பெயராகத் தெரிகிறது. இது எல்லா மதங்களிலும் சிற்சில மாற்றங்களோடு கையபாளப்படுகிறது என்று கூறினார்'**

உதாரணமாக ஈல், ஈலியா, இல்வஹ், இலூஹிம், இலாஹ், லாஹ், லாஹூத் போன்ற இவையனைத்தும் ஒரே மூலத்திலிருந்து பிரிந்த பதங்களாகும். இவை வணக்கத்திற்குரியவன் என்னும் அர்த்தத்தில் பல்வேறு மதங்களில் நமக்கு காணக் கிடைக்கின்றன. மௌலானா அபுல் கலாம் ஆஸாத்தும் இதனை ஆமோதிக்கிறார்.

**'அனைத்து கூட்டத்தாரிடையேயும் பார்க்கப்படாத அந்த ஒரே இறைவனின் நம்பிக்கை நிலைத்திருந்தது. இன்னும் அது இல், இலாஹ், அல்லது அல்லாஹ் என்று அழைக்கப்பட்டது அந்த இலாஹ்;தான். சிலர் அதை 'ஈல்' என்னும் தோற்றத்திற்கு மாற்றினர். வேறொரு இடத்தில் 'இலூஹ்' என்றும், இன்னும் சில இடங்களில் 'இலாஹிய்யா' என்றும் ஆயிற்று**.-நூல் தர்ஜுமானுல் குர்ஆன் பாகம் 1, பக்கம் 247.

பண்டித் சுந்தர்லால் என்பார் தமது '**கீதா அவ்ர் குர்ஆன்**' என்னும் நூலில்...

**'குர்ஆன் எல்லாவற்றுக்கும் மேலான உள்ளமைக்கு அல்லாஹ் என்னும் பெயரைக் கொண்டு பெயரிட்டுள்ளது. ரிக் வேதத்தில் ஈஸவருக்கு எந்தப் பெயர் வழங்கப்பட்டிருந்ததோ அதிலொன்று 'இலா' என்பதாகும். இதன் மூலம் 'இல்' 'ஈல்' என்பதாகும். இன்னும் இதனுடைய அர்த்தம் புகழுதல் அல்லது துதித்தல் அல்லது வணங்குதல் என்பதாகும். கிட்டத்தட்ட ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன் 'ஸுமையரிய்யா' மொழியில் ஈல் என்னும் பதம் இறைவனை குறிப்பதாயிருந்தது.**

**ஸுமைரீன் நகரம் பாபிலோன் என்னும் பதமாகும். உண்மையில் இது 'பாப் 10 ஈல்' என்றிருந்தது. அதாவது 'இறைவனின் வாசல்' என்பதாகும். இந்தப்பதம் தான் ஏதாவதொரு தோற்றத்தில் அப்ரானி மற்றும் சுர்யானி அல்லது கல்தானி மொழியில் இறைவனை குறிக்கின்ற பதமாக இருந்தது. இதனுடைய பொதுவான தோற்றம் 'ஈலியா' 'இல்வஹ்' என்றிருந்தது. ஆனால் மிகத் தெளிவான விளக்கம் என்னவெனில் ரிக் வேதத்துடைய காலத்திலிருந்து இன்றுவரை அல்லாஹ் என்னும் பதம் ஏதோவொரு தோற்றத்தில் இறைவனுக்குரிய பெயராகவே பயன்படுத்தப்பட்டு வந்துள்ளது.'** – நூல்: கீதா அவ்ர் குர்ஆன் பக்கம் 5.

ஆரிய சமாஜத்தை சேர்ந்த அறிஞர் ஸ்ரீகங்கா பிரசாத் உபாத்யாயா என்பார் கூறுகிறார்...

**'இஸ்லாமியர்கள் ஆதம் நபி என்னும் மனிதரை இப்பூமியின் முதல் தந்தையென்று கூறுகிறார்களே அவர் என்ன மொழி பேசினார்? அவர் எந்தப் பெயரை இறைவனைக் குறிக்க பயன்படுத்தினார் என்பதெல்லாம் எனக்குத் தெரியாது. ஆனால் ஒவ்வொரு வணக்கத்திற்குரிய பொருளையும் 'இலாஹ்' என்று கூறுகின்றனர். இதில் 'அல்' என்ற ஒரு வார்த்தை மட்டும் சேர்ந்து 'அல்லாஹ்' என அப்பரம்பொருளுக்கு மட்டும் உரிய ஒரு பெயராக குறிக்கப்பட்டுவிட்டது. இனி லட்சக்கணக்கான வருடங்களுக்கு முந்தைய முதல் வேதமென்று நம்பப்படும் ரிக் வேதத்தில் இறைவனுக்கு 'ஈலியா' என்னும் பதம் குறிக்கப்பட்டுள்ளது. ஈலிய்யா என்னும் பதத்திற்குரிய அகராதி அர்த்தமானது 'வணக்கத்திற்குரியது' என்பதாகும். வேதத்தில் இப்பதம் இறைவனுடைய தாத்தை மட்டும் குறிக்கக் கூடிய வகையில் பயன்படுத்தப்பட்டுள்ளது. வேதமந்திரம் (2-1-1)ன் தெளிவான அர்த்தமானது, அல்லாஹ் நீ புதிய மற்றும் பழைய, சிறிய மற்றும் பெரிய போன்ற அனைத்துக்கும் வணக்கத்திற்குரியவன். உன்னை அறிவுடையோரே அறிந்து கொள்வர் என்பதாகும்.'**

-நூல்: மஸாபீஹுல் இஸ்லாம் பக்கம் 14, 15.

அல்லாஹ் என்னும் இறைவனுடைய தனித்தன்மைக்கு மட்டுமே உரித்தான தத்சொரூபத்தின் பெயருக்குரிய ஒற்றுமையை இதுவரை பார்த்த நாம் இப்போது இறைவனுக்குரிய பண்புப் பெயர்களில் அவனை மட்டுமே குறிக்கின்ற **'ரஹ்மான்'** (கிருபையுள்ளவன்) என்னும் பெயரைப் பார்ப்போம். பிராமணீயத்தில் கிறிஸ்துவர்களின் திரியேகக் கொள்கையை (மூன்று கடவுள்) போன்று இறைவனுடைய தத்சொரூபத்தை மூன்று துண்டாகப் பிரித்து விட்;டனர். அதாவது '**பிரம்மா**'(படைக்கிறவன்) '**விஷ்ணு**' (வளர்க்கிறவன்) '**சிவன்**' (அழிக்கிறவன்) என்பதாகும். ஆனால் வேதங்களில் மிகவும் தெளிவான ஒரே இறைவன்தான் படைக்கிறான் வளர்க்கிறான், மரணத்தையும் தருகிறான் என்று கூறப்பட்டுள்ளது.

இனி இம்மூன்று பெயர்களையும் சொல்லத் துவங்கினால் முதலில் பிரம்மாவின் பெயரைத்தான் கூறப்படுகிறது. இதில் பிரம்மா அல்லது பிரம்மன் என்பதைக் கவனித்தால் சமஸ்கிருத மொழியில் கையாளப்படும் ஒரு முறை என்னவெனில் ஒரு வார்த்தையை எழுதினால் அவ்வார்த்தையின் கடைசியில் மேலே ஒரு புள்ளி(.) வைக்கப்படுகிறது. இது **'ம்'** அல்லது **'ன்'** என்னும் உச்சரிப்பை தரும். இவ்வாறே ஆங்கிலத்தில் பெரும்பான்மையான பெயர்களில் கடைசியில் ஒரு (அ)வை இணைத்து விடுவார்கள். இதைக் கொண்டு அசோக் என்பதை அசோகா என்றும் ராம் என்பதை ராமா என்றும் கூறுகின்றனர்.

ஆகவே சமஸ்கிருதத்தில் பிரம்மா என்னும் பதத்திற்கு மேலே ஒரு புள்ளியை வைப்பதன் மூலம் அப்பதம் '**பிரம்மான்**' என்றாகிறது. அது '**ரஹ்மான்**' அல்லது '**அல் ரஹ்மான்**' என்னும் ஒரே அர்த்தத்தைக் கொண்ட பதமாகிறது. இன்னும் 'ரஹ்ம்' என்ற பதத்துடைய பண்பின் துவக்க வெளிப்பாடு என்பதே படைப்பதிலிருந்துதான் துவங்குகிறது. இதனால்தான் படைக்கக் கூடிய இறைவனை இந்து மதத்தில் பிரம்மான் (அர்ரஹ்மான்) மற்றும் பராஹீம் (அர்ரஹீம்)என்றும் அழைக்கப் படுகிறது. மேலும் எவ்வாறு ரஹ்மான் என்னும் பெயர் முஸ்லிம் மதத்தில்

இறைவனுடைய தற்சொரூபத்திற்குரிய (தாத்திய்யத்தான) பெயராக இல்லாது பண்புக்குரிய மகத்தான பெயராகக் கருதப்படுகிறதோ அவ்வாறே இந்து மதத்திலும் பிரம்மான் என்னும் பெயர் பண்புக்குரிய பெயராகத்தான் பேசப்படுகிறது.

இங்கே நீங்கள் இதையும் கவனிக்க வேண்டும். அதாவது அரபியர் முஹம்மத் நபியவர்களின் வருகைக்கு முன்பு ரஹ்மான் என்னும் பெயரை மிகவும் வெறுத்து வந்தனர். அத்துடன் அப்பெயரை வேற்று மதத்தாரின் இறைவனென்றும் எண்ணிக் கொண்டிருந்தனர். வேற்று மதங்களென்னும் போது இந்து மதத்தில் இப்பெயர் இறைவனை குறிக்கப்பயன்படுத்தப்பட்டு வந்தது. கிறிஸ்துவ மதத்திலும் ரஹ்மான் என்னும் பதம் இறைவனை குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதற்குரிய ஆதாரமானது எமனிலுள்ள கிறிஸ்துவ தேவாலயங்களின் வாயில்களில் எழுதப்பட்டுள்ள வாக்கியங்களாகும். அதாவது...

**'ரஹ்மான் மஸீஹ் (கிருபையாளராகிய ஏசு) தனது பரிசுத்த ஆவியின் தத்துவம் மற்றும் பேரருளின் பெயரால் இந்த நினைவுச் சின்னத்திற்குரிய கல்லில் அப்ரஹா என்பான் கல்வெட்டை செதுக்கினான். இவன் கருப்பர் தேசத்து அரசனின் பிரதிநிதியாவான்.'** –நூல்: ஸீரத்துன் நபி பாகம் 1 பக்கம் 111.

எனவே இஸ்லாமிய மார்க்கத்தின் பெயர் இவ்விரு மதத்திலும் ஒரே பெயராக இருப்பதையும், அம்மார்க்க விதிகளின் படி வாழ வேண்டுமென ஆணை பிறப்பித்த அப்பரிசுத்தவானின் பெயரும் கூட இருமதத்திலும் ஒரே மாதிரியாக இருப்பதைப் பார்க்கிறோம். இவை எல்லாவற்றையும் விட விளங்குதல் மற்றும் புரிந்து கொள்ளல் போன்றவற்றில்தான் வித்தியாசம் ஏற்பட்டுவிட்டது. இப்போது பாருங்கள். இறைவனுடைய வேதத்தில் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் மறதியும், புழுதியும் படிந்து விட்ட இந்த நிலையிலும் கூட அதனுடைய அடிப்படை போதனைகள் இன்றும் எவ்வாறுள்ளது என்பதை பார்ப்போம். அவைகளை இந்துச் சமூக மக்கள் மறந்து அவ்வேதத்திலிருந்து தம்மை துண்டித்துக் கொண்டு விட்டதால் அவை அவர்களின் பார்வையை விட்டும் இப்போது மறைந்துள்ளன.

## அத்தியாயம் ஒன்பது

**வைதீக தர்மத்தில் ஏகத்துவம்**

**இந்துமதத்தில் ஏகத்துவக் கொள்கை**

இந்துமத வேதங்களில் ஏகத்துவம் என்னும் ஓரிறைக் கொள்கையை பார்க்குமுன் முதலில் இந்து மதத்திலுள்ள சில பிரபலமான எழுத்தாளர்கள் இதைப் பற்றி என்ன கூறுகிறார்கள் என்பதை முதலில் பார்ப்போம்.

**'ரிஷிகள்தான் சிலை வணக்கத்திற்குரிய முறைகளை உருவாக்கினர். ஏனெனில் இந்துக்கள் அச்சிலைகளை காரணப் பொருளாக்கி எல்லையற்ற (அப்பரம்பொருளை)வனை ஒரு**

**சரீரத்திற்குரிய வடிவத்தில் தமக்கு முன் காணவேண்டும் என்பதற்காக'** –நூல்: விஷ்ணு ரஹஸ்யா, பக்கம் 149. டாக்டர் சமன்லால் கௌதம்.

**'ஒரேயொரு மகத்தான சக்திமிக்க கடவுளை தம்முடைய அதிபனாக நம்பிக்கை கொண்டு சுயநலம் மற்றும் அகந்தையை நீக்கி தூய்மையான எண்ணத்தோடும் பயபக்தியோடும் உண்மையான பிரியத்தோடும் இடைவிடாமல் சிந்திப்பதுதான் பாவ அழுக்கைப் போக்கக் கூடிய வணக்கமாகும்.'** –நூல்: தப்ஸீர் கீதா பக்கம் 326.

**'கொஞ்சம் யோசித்தால் நேசிக்கக் கூடிய பெண்ணுக்கு ஒரே ஒரு கணவன் தான் இருக்க முடியும். இவ்வாறே விசுவாசம் கொண்டு பூஜிக்கிறானே அவனுக்கு ஒரே ஒரு கடவுள்தானிருக்க முடியும். வேறு கடவுள்களோடு நீ தேடாதே. வேறு கடவுள்களின் பெயர்களை அழைப்பது கூட மிகக் கெட்டதாகும்.'** –நூல்: இஸ்லாம்கா தஹ்தீப் பர் அஸர் பக்கம் 153, 154.

இப்போது கவனியுங்கள். இந்துமத நூல்களில் காணப்படும் எண்ணிலடங்கா ஆதாரங்களில் சில எடுத்துக்காட்டுகள் மையப்படுத்துகின்ற கருத்துக்களை கொண்டு அஸல் இந்து மதத்தில் ஓரிறைக் கொள்கை எவ்வாறு எடுத்துக் காட்டப்படுகிறது எனில் இஸ்லாம் எவ்வாறு ஓரிறைக் கொள்கையைப் போதிக்கிறதோ அதேபோன்றுதான் என்பதை நாம் உறுதியாகச் சொல்லலாம். இன்னும் இந்து வேதாந்தத்திலுள்ள **'பிரம்ம சூத்திரம்'** அதாவது கலிமாவைப் பாருங்கள்.

**'எக்கம் பிரம்மம் தோய்த்தியா நாஸ்த்தே நீஹா நா நாஸ்த்தே கன்சன்'**

ஒரே கடவுள்தான். வேறொன்று இல்லை. இல்லை. இல்லை. கொஞ்சமும் இல்லை. வேதாந்தத்தில் இறைவனை குறித்து சொல்லப்பட்டிருக்கும் வாக்கியமானது **'எக்கம் அய்வம் அவ்தைத்யம்'** இன்னொன்றின் துணையின்றி அவன் ஒருவன்தான் என்பதாகும்.

**'அவன் உயிரற்ற மற்றும் உயிரினங்களை கொண்டுள்ள உலகில் பெரும் மகத்துவத்தோடு ஆட்சி செய்து கொண்டிருக்கிறான். அவன்தான் மனிதர் மற்றும் விலங்கினங்களின் ரட்சகனாகும். (அவனை விட்டு) நாம் எந்தக் கடவுளை துதித்துக் கொண்டிருக்கிறோம்? காணிக்கைகளை சமர்ப்பித்துக் கொண்டிருக்கிறோம்?'**

-நூல் ரிக் வேதம் 3-121-10

**'இன்னும் அவன்தான் வானத்தில் உறுதியாகவும் பூமியில் ஆட்சியும் செய்து கொண்டிருக்கிறான். அவனைக் கொண்டுதான் பிரகாசத்தின் ராஜரீகமுள்ளது. இன்னும் வானம் வானவில்லின் தோற்றத்தில் நிலை பெற்றுள்ளது. அவற்றின் ஓட்டமும் அவனுக்காகவே உள்ளது. (அவனை விட்டு) நாம் எந்தக் கடவுளை துதிக்கிறோம்? காணிக்கைகளை சமர்ப்பிக்கிறோம்?** –நூல்: ரிக் வேதம் 5-121-10.

**'அப்பரம்பொருளுக்கு எவ்விதச் சிலையோ அல்லது உருவமோ கிடையாது. அவன் பெயரே முழுக்க முழுக்க 'புகழ்' என்பதாகும்.'** –நூல்: யஜூர் வேதம் 3-23

**'யார் பொய்யான உள்ளமையுடைய தேவி, தேவர்களை வணங்குகிறார்களோ அவர்கள் குருடாகி விடக்கூடிய ஆழ்ந்த இருளுக்குள் மூழ்கி விடுகின்றனர்.'** –நூல்: யஜூர் வேதம் 9-40.

**'கடவுளைத் தவிர வேறு யாரையும் பூஜிக்காதீர்கள்'** – நூல்: ரிக் வேதம் 1-1-8

**'அவன் ஒருவனே அவனையே வணங்குங்கள்'** –நூல்: ரிக் வேதம் 16-45-6.

**'அவன் ஒருவன்தான் மிகவும் பூஜிக்கப்படக் கூடிய வணங்கப்படக் கூடிய நிலைக்குத் தகுதியானவன் இரட்சகன்'** –நூல்: அதர்வண வேதம் 2-2-2.

**'ஈஸ்வர்தான் துவக்கமானவன், இன்னும் எல்லா சிருஷ்டிகளின் ஒரே அதிபதி. அவன்தான் வானங்கள் பூமிகளின் சக்கரவர்த்தியாகும். அவனை விட்டு நீங்கள் வேறு எந்தக் கடவுளை பூஜிக்கிறீர்கள்?** –நூல்: ரிக் வேதம் 1-121-10.

இந்து மதத்தில் எத்தனை கடவுள்களின் பெயர்கள் பேசப்படுகிறதோ அவைகளனைத்தும் ஒரே இறைவனுடைய பண்புப் பெயர்களாகும். அவன்தான் **'பிரம்மா' 'விஷ்ணு'** என்றும் அவனைத்தான் **'இந்தர்'** என்றும் அழைக்கப்படுகிறது. இன்னும் அவனுடைய பெயர்தான் **'சர்சூத்தி'** என்பதுமாகும். இதுபற்றிய ஆதாரங்கள் வேதங்களில் காணப்படுகின்றன.

**'ஏ! அக்னியே! நீதான் இதயங்களின் நல்ல நாட்டங்களை நிறைவேற்றி வைக்கும் இந்திரன். நீதான் வணங்கத் தகுதியுள்ளவன். நீதான் எண்ணற்ற மனிதர்களின் புகழுக்குத் தகுதியான விஷ்ணு. நீதான் பிரம்மா. பிரம்மஹத்தீ'** –நூல்: ரிக்வேதம் 31-2.

**'ஏ!அக்னியே! நீதான் வாக்குறுதியை நிறைவேற்றும் அரசன் 'வருண்'. நீயே புகழுக்குரிய 'மித்ரு'. நீதான் உண்மையான தலைவன் 'அர்யம்'.** –நூல்: ரிக்வேதம் 4-1-2.

**ஏ!அக்னியே! நீதான் 'ருதுர்' நீதான் 'யுஷா' விண்ணுலக பாதுகாவலன் 'சங்கர்' நீதான் பாலைவனக் கூட்டத்தாரது சக்திக்குரிய காரணப் பொருள். நீதான் இரணமளிக்கின்ற பேரொளியின் தேகம். காற்றைப்போல எல்லா இடங்களிலிருந்து பலனளிக்கின்றவன். இன்னும் உன்னை வணங்குவோரை பாதுகாப்பவன்.'** –நூல்: ரிக்வேதம் 6-1-2.

**'ஏ!அக்னியே! நீ செல்வத்தை வழங்கும் 'சவீத்தா' நீதான் 'வாயு' வணக்கவாளர்களது பாதுகாவலன்.'** –நூல்: ரிக் வேதம் 7-1-2.

**'ஏ!அக்னியே! நீதான் அனைத்துக்கும் முந்தியவன்.; நீதான் 'பாரதி'(நன்மைகளின் புதையல்) நீதான் 'இடா' நீதான் 'சர்ஸூத்தி'**.-நூல்: ரிக்வேதம் 11-1-2.

வேதங்களில் காணப்படும் மேற்கண்ட விளக்'கமான ஆதாரங்களைக் கொண்டு கணக்கற்ற பெயர்களை வைத்து பூஜிக்கப்படும் வௌ;வேறு தேவதைகள் என்னும் கொள்கை முழுவதும் அடிபட்டுப் போகிறது. மேலும் முன்பே நாம் அந்தக் கடவுளுக்கு எந்தவொரு சிலையும் உருவாக்கப்பட முடி யாது என்னும் ஆதாரத்தையும் குறிப்பிட்டுள்ளோம். இப்போது வேதமே

மிகத்தெளிவாக அவ்வெல்லா பண்புப் பெயர்களைக் கொண்டும் உலகலுள்ளோர் ஒரே இறைவனைத்தான் அழைக்கின்றனர் என்றும் கூறுகிறது.

**'இத்தர், மித்ரு, வருண், அக்னி, குரு, யம், வாயு, மாத்தரீஷ்வா போன்றவையனைத்தும் ஒரே சக்தியின் பலதரப்பட்ட பெயர்களாகும். இன்னும் அகப்பார்வை உடையோரும் அறிவாளர்களும் ஈஸவரை பண்பின் அடிப்படையில் பல்வேறு பெயர்களைக் கொண்டு அழைத்துள்ளனர்.**-நூல்: ரிக்வேதம் 5-114-10.

இது முழுக்க முழுக்க முஸ்லிம் வேதமான குர்ஆன் கூறும் வசனத்தைப் போன்றதுதான். அதாவது....

اللَّهُ لَا إِلَٰهَ إِلَّا هُوَ ۖ لَهُ الْأَسْمَاءُ الْحُسْنَىٰ

**'அல்லாஹ் அவனையன்றி வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை. நல்ல பெயர்களனைத்தும் அவனுக்குரியதே'** – அல்குர்ஆன் சூறா தாஹா வசனம் 8.

அதன்பின் வேதமும் முழுக்க முழுக்க முஸ்லிம் வேதமான குர்ஆன் கூறும் வகையிலேயே எந்தெந்த கடவுள்களை நீங்கள் அழைக்கிறீர்களோ அவை அனைத்தும் ஒரேயொரு கடவுளின் பெயர்தானென்று கூறுகிறது.

**'ஈஸ்வர்தான் தேகத்திற்கும் ஆன்மாவுக்கும் சக்தியை தருபவன். ஆதலால் அவனைத்தான் எல்லா தேவதை(வானவர்)களும் வணங்குகின்றன. அந்த ஈஸ்வரின் சந்தோஷம்தான் நிரந்தரமான வாழ்க்கையை நல்கும். இன்னும் மரணத்தையும் வெல்லக் கூடியது. அந்த ஈஸ்வரை விட்டு விட்டு நீங்கள் எந்த தேவதையை வணங்கிக் கொண்டிருக்கிறீர்கள்?'**

இதே போன்றதொரு முஸ்லிம் வேத வசனத்தைப் பாருங்கள்:

أُولَٰئِكَ الَّذِينَ يَدْعُونَ يَبْتَغُونَ إِلَىٰ رَبِّهِمُ الْوَسِيلَةَ أَيُّهُمْ أَقْرَبُ وَيَرْجُونَ رَحْمَتَهُ وَيَخَافُونَ عَذَابَهُ ۚ إِنَّ عَذَابَ رَبِّكَ كَانَ مَحْذُورًا

**'எவைகளை இவர்கள் அழைக்கிறார்களோ அவைகள் தமது ரட்சகன்பால் நெருங்குவதற்குரிய வஸீலாவைத் தேடுகின்றன. இன்னும் அவனுடைய கிருபையை ஆதரவு வைத்து அவனது வேதனையை அவைகள் அஞ்சுகின்றன. திடனாக உம து ரட்சகனின் வேதனை தவிர்த்துக் கொள்ளப்படுவதாக இருக்கிறது.'**

-அல்குர்ஆன் சூறா பனீ இஸ்றாயீல் வசனம் 57.

ஒரே இறைவனை குறித்து இத்துணை விரிவான விளக்கங்கள் எடுத்துக் காட்டப்பட்டிருந்தும் இவ்வளவு கடவுள்கள் எவ்வாறு தோன்றின? அடுத்து வரும் காரணங்கள் நமக்கு இதை விளக்கிக் காட்டுவதைப் பாருங்கள்.

**எழுத்து வடிவில் புலனாகவில்லை**

வேதம் என்பது மிக நீண்ட புராதன காலத்தை சேர்ந்ததாக இருந்தாலும் இன்னும் அது மனித நினைவுகளில் மட்டுமே பாதுகாக்கப்பட்டு வந்தாலும் பாமர மக்களுக்கு ஏற்'றவாறு மனிதர்கள் பேசும் மொழியைக்கொண்டு பிரித்துக் காட்டுவது சாத்தியமற்ற ஒன்றாக இருந்தது. இதனால் ஆயிரக்கணக்கான வருடங்களாக கேள்வி வழி மூலமாக மட்டுமே வந்துக்கொண்டிருந்த அவ்வேதம் எல்லா தரப்பினராலும் விளங்கிக் கொள்ள முடியாது என்பதற்காக உருவகப்படுத்தப்பட்ட '**தேவதை தர்மத்தை**' தர்மமென்று புரிந்து கொண்டனர். இதில் இருநூறு ஆண்டுகளுக்கு முன்னால் எழுத்து வடிவத்திற்கு கொண்டு வரப்பட்ட வேதத்தை பாதுகாப்பது பற்றித்தான் தற்போது சிந்திக்கப்பட்டு வருகிறது. ஆனால் ஒன்று திரட்டியவர்கள் வேதமென்னும் பெயரில் எதை ஒன்று திரட்டினார்களோ அது உண்மையான வேதம்தான் என்பதை அவர்களே வாதிக்கவில்லை. வேதங்களை திரட்டியவர்கள் மற்றும் அதனுடைய விரிவுரையாளர்களின் வாக்கியங்களை ஐந்தாம் அத்தியாயத்திலே நாம் பார்த்து விட்டோம். அதில் மாற்றப்பட்டுள்ளது என்பதை அவர்களே ஒப்புக் கொள்கின்றனர். இதுபற்றி காந்திஜி எழுதுகிறார்...

**'சாஸ்திரங்களுடைய அந்த அர்த்தங்களில் எது உண்மைக்கு மாற்றமாக இருக்கிறதோ அது சரியாக முடியாது. (அதாவது அது அஸல் வேதமல்ல)'**

நூல்: அஹிம்சா அவ்ர் சத்யா, பக்கம் 31, ஸ்ரீராம் நாத் சமன்.

காந்திஜி இன்னோர் இடத்தில் எழுதுகிறார்...

**'எழுகின்ற கேள்வி என்னவெனில் சில சுலோகங்கள் வேறு சில சுலோகங்களுக்கு மாற்றமாகவும், மனிதனுடைய இயற்கை பண்புக்கு விரோதமாகவும் காணப்படுகிறதே அந்த 'ஸ்மிருத்துக்களை' என்ன செய்யலாம்? நான் பலமுறை எழுதிக் காட்டி விட்டேன். அதாவது தர்ம கிரந்தங்கள் என்னும் பெயரில் என்னென்ன அச்சிடப்படுகிறதோ அவையனைத்தையும் வேத வாக்குகள் என்று எடுத்துக் கொள்ளக் கூடாது.'** –நூல்: ஸ்திரியோன் கே ஸமஸ்யாயேன் 1936, நவம்பர் 28 இதழ்-ஹரிஜன்.

**தவறான அர்த்தம் அல்லது விளக்கம்**

வேதங்களில் பெரும்பான்மையானவை சங்கேதாஸ்பதமான வாக்கியங்களைக் கொண்டே காணப்படுகின்றன. அதனால் அதை அறிவின் வெளிச்சத்தைக் கொண்டு அதற்குரிய உண்மையான அர்த்தத்தை கண்டெடுக்க முடியாது. எனவே இறைவனின் இறுதி வாக்காகிய உண்மையான வேதம் என்னும் முஸ்லிம்வேதமான குர்ஆனுடைய வெளிச்சத்தில்தான் அதனுடைய உண்மையான அர்த்தத்தை கண்டெடுக்க முடியும். இதுபற்றி முன்னால் நாம் விளக்கியிருக்கிறோம். அதாவது 'அஹ்மத்' என்னும் பதம் வேதத்தில் எவ்வாறு குறிப்பிடப்படுகிறது என்பதற்குரிய உதாரணங்களை தந்திருக்கிறோம்.

**இந்து பாமரர் வேதத்தில் தூரமாக உள்ளனர்.**

இந்து அறிஞர்கள் தமது பாமர மக்களை வேதத்திலிருந்து முழுமையாக வெட்டி விட்டுள்ளனர். இவர்கள் மட்டும் வேதத்தை விட்டும் வெட்டி விடப்படாது இருந்திருப்பார்களேயானால் கணக்கில்லா வழிகேடுகள் அகன்றிருக்கும். உதாரணமாக கணக்கற்ற தேவி தேவர்களின் வணக்கத்தையே எடுத்துக் கொள்ளுங்களேன். வேதங்களில் ஒரே கடவுளைத்தான் பல பெயர்களில் அழைக்கப்பட்டதாக சொல்லப்படுகிறது. இது தெரியாமல் போனதால்தான் அவர்கள் ஒவ்வொரு பெயருக்கும் ஒரு தேவதையை உருவாக்கி விட்டனர். அத்துடன் ஏகத்'துவத்தின் அடிப்படை கொள்கை முழுக்க முழுக்க முஸ்லிம் வேதமான குர்ஆன் கூறுவதைப் போன்றே சனாதன தர்மத்திலும் காணப்படுகிறது. ஆதலால் இதுவும் சிலை வணக்கத்திற்குரிய காரணங்களில் ஒன்றாகும்.

قُلْ يَا أَهْلَ الْكِتَابِ تَعَالَوْا إِلَىٰ كَلِمَةٍ سَوَاءٍ بَيْنَنَا وَبَيْنَكُمْ أَلَّا نَعْبُدَ إِلَّا اللَّهَ وَلَا نُشْرِكَ بِهِ شَيْئًا وَلَا يَتَّخِذَ بَعْضُنَا بَعْضًا أَرْبَابًا مِّن دُونِ اللَّهِ ۚ فَإِن تَوَلَّوْا فَقُولُوا اشْهَدُوا بِأَنَّا مُسْلِمُونَ

**'வேதக்காரர்களே! எங்களுக்கும் உங்களுக்குமிடையில் (விதர்ப்பமின்றி) சரியான வார்த்தையில் அல்லாஹ்வையன்றி (வேறுயாரையும்) நாம் வணங்கக் கூடாது. இன்னும் அவனுக்கு எந்த வஸ்துவையும் நாம் இணையாக்காது இருப்போம். இன்னும் நம்மில சிலர் சிலருக்கு அல்லாஹ்வையன்றி (வேறு யாரையும்) நாயன்மார்களாக ஆக்காதிருப்பதன்பால் வாருங்களென்று (நபியே!) நீர் கூறுவீராக! ஆகவே அவர்கள் பின்வாங்குவார்களேயாயின் திடனாக நாங்கள் முஸ்லிம்களென்று நீங்கள் சாட்சி சொல்லுங்கள் என்று நீர் கூறுவீராக'**
–அல் குர்ஆன் சூறா ஆலஇம்றான் வசனம் 63 ,64.

## அத்தியாயம் பத்து

**வைதீக தர்மமும் தூதுத்துவமும்.**

அக்னீ என்னும் பதத்தைப் போலவே பிரம்மா என்னும் பதத்திலும் இந்தக் குளறுபடிதான் நடந்துள்ளது. பிரம்மா அதாவது 'ரஹ்மான்' படைக்கின்ற கடவுளுக்காக பயன்படுத்தப்படும் வாக்கியம் இது. இதே பதம் '**ரூஹே அஹ்மத்**' மற்றும் ஆதம் நபிக்கும் பயன்படுத்தப்படுகிறது. மூன்று இடங்களிலும் உண்மையான அர்த்தத்தை கண்டுபிடிப்பதற்குப் பதிலாக திருத்தூதரே தேவதையாக மாறிவிடுகிறார். இவ்வாறே திருத்தூதர்களுக்குரிய இடத்தில் அவதாரங்கள் என கற்பனை செய்யப்பட்டுவிட்டன. இதில் நாம் நமது அறிவின் பார்வையை வைத்து அவர்களுடைய இந்த இணைவைத்தலுக்குரிய கற்பனையை அவர்களுக்கு விளக்கிக் காட்டியிருக்க முடியும். ஆனால் நமக்கு இணைவைப்போரது இணை வைத்தலுக்குரிய அடித்தளம் எதுவென்பதே தெரியாது. இனி பிரம்மா என்னும் பதம் ஆதம் நபியை குறிக்கும் வகையில் 'ஸ்ரீஹரீ வன்ஷ் புராணத்தில்' கூறப்பட்டுள்ளது.

**திருத்தூதர்கள் பற்றி...**

பிரம்மா தனது தேகத்தை இரு வகுப்பாக்கி ஒன்றைக் கொண்டு ஆணாகவும், மற்றொன்றைக் கொண்டு பெண்ணாகவும் ஆனான். இன்னும் இவ்வாறே எண்ணற்ற ஜீவராசிகள் தோற்றுவிக்கப்பட்டன. இதனை எந்த முஸ்லிமாவது பார்க்க நேர்ந்தால் அவர் ஆதம் நபியுடைய விலாப்புறத்தின் எலும்பை கொண்டு ஹவ்வாவையும் இவ்விருவரைக்கொண்டு மனித இனம் முழுவதும் தோன்றியதையும் தான் நினைத்துக் கொள்வார். ஆக இறைவனின் உண்மையான ஞானத்துடைய வெளிச்சத்தில் பழைய ஞானங்களின் பரிசுத்த தன்மைக்கு இவை சில உதாரணங்களாகும். நீங்கள் இப்போது இந்துமத நூல்களில் காணப்படும் திருத்தூதுத்துவம் மற்றும் திருத்தூதர்களை பற்றிய சில விளக்கமான வாக்கியங்களுக்குரிய உதாரணங்களைப் பாருங்கள்.

**'எப்போது நன்மைகள் குறைந்து தீமைகள் மிகைத்து விடுகிறதோ அப்போது 'ஹரி' அதாவது எல்லா கடவுள்களின் இறைவன் திடனாக வழிகாட்டுவதற்காக ஒரு ஆன்மாவைப் படைக்கிறான்.'**

-நூல்: ஸ்ரீமத் பகவத் புராணம் 56-24-9.

இதுதான் திருத்தூதர்கள் இப்பூமிக்கு அனுப்பப்படுவதற்குரிய நோக்கமாகும். இப்போது நூஹ் நபி மற்றும் நூஹ் நபியின் ஜலப்பிரளயம் பற்றிய சில குறிப்புக்களை பாருங்கள்......

'சுருங்கக் கூறின் ஒரு பிரபலமான மனிதர். அவர் இந்துக்களால் பரிசுத்தமானவரென்று மதிக்கப்படுகிறார். இன்னும் அவர்கள் அவரை '**மகாநூவு**' (MAHANVUV) என்னும் பெயரைக் கொண்டு தெரிந்துள்ளனர். ஒரு கப்பலின் மூலம் தப்பியவர். அக்கப்பலில் ஏழு பிரபலமான ரிஷிகள் இருந்தனர். இனி மாகாநூவு என்பது இரு பதமான '**மகா**' மற்றும் '**நூவு**' என்பதன் இணைப்பாகும். **மகா** என்பதற்கு '**மகத்தான**' என்பதும் '**நூவு**' என்பதற்கு சந்தேகமின்றி '**நூஹ்**' என்பதுமாகும்.'

-நூல்: Hindu Manners Customs and Ceremonies page 48.

**'இந்தியா. அப்பிரமாண்டமான நூஹுடைய ஜலப்பிரளயத்திற்குப் பின் உடனே மனிதன் வசிக்கும் இடமாகத் தலைத் தூக்கிற்று. அவ்வெள்ளப் பிரளயத்தால் உலகமே அழிந்து போன பின்னர் என்பதை புவியியல் ரீதியாக ஒப்புக்கொண்டுதான் ஆக வேண்டும்.'** - Hindu Manners Customs and Ceremonies page 100.

**'மார்க்கேண்டய புராணத்திலும் பகவத் கீதையிலும் இச்சம்பவத்தை பற்றிய அதிகமான விளக்கம் காணப்படுகிறது. இந்தச் சம்பவத்தில் மனித இனம் முழுவதுமே அழிந்து போய்விட்டது. ஏழு பிரபலமான ரிஷிகளாகிய வணக்கஸ்தர்களைத் தவிர. இவர்களைப் பற்றி நான் பல இடங்களில் குறிப்பிட்டிருக்கிறேன். இந்த ஏழு ரிஷிகளும் ஒரு கப்பலில் ஏறி உலகளாவிய அந்த அழிவிலிருந்து தப்பினர். அக்கப்பலை விஷ்ணுவே செலுத்திக்**

**கொண்டிருந்தார். இன்னொரு மகத்தான மனிதரும் அந்த அழிவிலிருந்து தப்பினார். அவர் 'மனூ'வாகும். அவர் நூஹைத் தவிர யாருமில்லை என்பதை பல இடங்களில் நான் நிரூபித்திருக்கிறேன்.'**

நூல்: Hindu Manners Customs and Ceremonies page 417.

**'அப்போது நூஹைப் பார்த்து நலலது. நீர் என்னை மிக நன்றாக அறிந்து கொண்டீர். ஏ! பூமியின் பாதுகாவலரே! சிறிது நேரத்தில் மலைகள் வனாந்திரம் என இப்பூமி தண்ணீரில் மூழ்கி விடும். ஆதலால் ஓ! பூமியின் தலைவரே! எல்லா உயிரினங்களையும் காக்கும் பொருட்டு எல்லா தேவதைகளைக் கொண்டும் இக்கப்பல் உருவாக்கப்பட்டுள்ளது. ஓ! வழிப்படுபவரே! எத்தனை வகையான ஜீவராசிகள் உள்ளனவோ அந்த நிராதரவானவர்கள் அனைவரையும் இக்கப்பலில் ஏற்றி அவர்களை நீர் பாதுகாப்பீராக'**.-நூல்: மித்ஸியா புராணம், சுலோகம் 29 முதல் 35 வரை.

**'அப்போது ஏழு கடல்களும் ஒன்றோடொன்று அலைபாய்ந்து இணைந்து விடும். இன்னும் மூன்று உலகங்களையும் நாம் ஒன்றாக்கி விடுவோம். ஓ வழிப்படுபவரே! அப்போது நீர் அவ்வேத ரூபமுள்ள கப்பலை கைப்பற்றி அதில் எல்லா உயிரினங்களையும் ஏற்றிக் கொள்ள வேண்டும்.**

-நூல்: மித்ஸியா புராணம், சுலோகம் 10, 11.

**'ஜலப்பிரளயத்தின் அழிவு வேளையில் எப்போது உலகம் முழுவதும் ஒரு கடலுக்குள் மூழ்கிவிடுமோ, அழிந்து போய்விடுமோ அதன்பின் உம்மைக் கொண்டு படைப்புக்கள் மீண்டும் வெளிப்படும். அப்போது நான் வேதங்களைக் கொண்டு மறுபடியும் அடித்தளமிடுவேன். அச்சமயம் மனுவும் அங்கிருந்து பகவானின் பேரருளால் வணக்கத்தையும் தெண்டிப்பையும் செய்ய வேண்டும். எதுவரை அந்த ஜலப்பிரளயத்தின் பேரழிவுக்குரிய முன்னறிவிப்பு வரவில்லையோ அதுவரை.'**

-நூல்: மித்ஸியா புராணம், சுலோகம் 14,15,16.

இதுவரை நாம் மேலே குறிப்பிட்டவை அனைத்தும் நூஹ் நபியைப் பற்றியதாகும். இப்போது நாம் பண்டித வேத பிரகாஷ் உபாத்யாயா அவர்களின் நூலிலிருந்து 'பவிஷ்ய புராணத்தின்' சில சுலோகங்களுக்குரிய அர்த்தங்களை தருகிறோம். அதில் மற்ற நபிமார்களைப் பற்றிய விளக்கமான விஷயங்கள் அவர்களுடைய உண்மைப் பெயரைக் கொண்டே விபரிக்கப்பட்டுள்ளன.(இந்த அர்த்தங்களை ஐளடயஅ வாந கசைளவ யனெ கு¡யெட சுநடபைழைn என்னும் நூலின் 8ம் மற்றும் 9ம் பக்கங்களிலிருந்து சுலோகங்களுக்குரிய அர்த்தங்களை நாம் எடுத்துள்ளோம்.)

**'ஆதமும் ஹவ்வாவும் விஷ்ணுவின் ஈரமான மண்ணைக் கொண்டு பிறந்தனர்.** சுவர்க்கத்தின் கிழக்குப் பகுதியில் பரமேஸ்வரனைக் கொண்டு உருவாக்கப்பட்ட அழகான**

**பனிரெண்டாயிரம் கஜ விஸ்தீரணமுள்ள ஒரு பெரும் வானமொன்று இருந்தது. பாவிகளுடைய மரத்திற்குக் கீழே சென்று தனது துணைவியைப் பார்க்கும் ஆவலோடு ஆதம் ஹவ்வாவிடம் சென்றனர். அப்போது பாம்பின் உருவெடுத்து சாத்தான் அங்கே வெளியானான். அத்தந்திரமுள்ள விரோதியால் ஆதமும் ஹவ்வாவும் ஏமாந்து போயினர். அத்துடன் விஷ்ணுவின் கட்டளையை முறித்துவிட்டனர். இன்னும் உலகுக்கு பாதை காட்டக்கூடிய அப்பழத்தை கணவர் தின்று விட்டார். அவ்விருவர் மூலம் 'கோலர்' என்னும் மரத்துடைய இலையைக் கொண்டு காற்றின் உணவு கண்டுபிடிக்கப்பட்டது. அப்போது அவ்விருவர் மூலம் நிறைய குழந்தைகள் பிறந்தன. அவர்களனைவரும் 'மிலேச்சியர்' என்றழைக்கப்பட்டனர். ஆதம் தொள்ளாயிரத்து முப்பது வருடங்கள் வரை வாழ்ந்தார்.'**

**குறிப்பு:** இந்த சுலோகங்களில் ஆதம் வருமிடத்தில் சமஸ்கிருத மொழியில் ஆதம் ஹவ்வா என்பதற்கு '**ஹவிய்யவதீ**' என்றும், சுவர்க்கம் என்பதற்கு '**பர்வான் நகர்**' என்றும் சாத்தான் என்பதற்கு '**கிலி**' என்றும் கூறப்பட்டுள்ளது.

**'அவர்களுக்கு நூஹ் என்றொரு மகன் பிறந்தார். அவர் ஐநூறு ஆண்டுகள் வரை ஆட்சி புரிந்தார்.** (**தௌராத் வேதக் கூற்றுப்படி வெள்ளப்பிரளயம் நிகழும் முன் நூஹ் நபியின் வயது அறுநூறாக இருந்தது.**) **அவருக்கு ஸீம், ஷாம், பாவு என்னும் பெயரில் மூன்று குழந்தைகள் பிறந்தன. விஷ்ணுவின் அடிமையான நூஹ் வஹ்தத்துல் உஜூதை** (**ஒரே மெய்ப்பபொருளை**) **சிந்தித்தவராக அதே நிலையில் தன்னை மறந்திருந்தார். ஒருமுறை விஷ்ணு கனவில் தோன்றி நூஹை நோக்கி, ஓ! பிரியமானவரே! கேள். ஏழாவது நாள் அழிவு துவங்கும். அப்போது உமது ஜனங்களோடு உடனே கப்பலில் ஏறிக் கொள்ளும். இந்தர் மூலம் நீர் உயிர் தப்புவீர். அதன்பின் மாபெரும் கீர்த்தி உமக்கு உண்டாகும். அதை நம்பி அவர் முன்னூறு முளம் நீளமும் ஐம்பது முழம் அகலமும் மூவாயிரம் முழம் ஆழமும் கொண்ட அழகானதொரு கப்பலை உருவாக்கினார். அதில் எல்லா உயிரினங்களிலும் ஒவ்வொரு ஜோடியை தனது குடும்பத்தாருடன் ஏற்றிக் கொண்டு மீண்டும் ஒரே மெய்ப்பொருளை சிந்திப்பதில் தன்னை மறந்து போனார். நாற்பது நாட்கள் வரை மிகக்கடுமையான மழை பெய்தது. பாரத தேசம் முழுவதும் தண்ணீரில் மூழ்கிப் போனது. இன்னும் நான்கு சமுத்திரங்களும் ஒன்றாக இணைந்து விட்டன. தேவதூதரான நூஹ் தனது குடும்பத்தாருடன் ஜலப்பிரளயத்திற்குப் பின் மீண்டும் பூமியில் அங்கே வாழத் துவங்கினர். நூஹுடைய மக்கள் ஸாம், ஹாம், யாகூத்து என்னும் பெயரில் பிரபலமாயினர்'.**

(இந்த இடத்தில் சமஸ்கிருத சுலோகத்தில் நூஹ் என்பதை '**நியூஹ்**' என்றும், ஸாம் என்பதை '**ஸீம்**' என்றும், ஹாம் என்பதை '**ஹாம்**' என்றும் யாகூத்து என்பதை '**யாகூத்து**' என்றும் குறிக்கப்பட்டுள்ளது) **இவர்களின் பிள்ளைகள் இப்றாஹீம், ஹனூர், ஹாரன் ஆகிய மூவரும் மிலேச்சிய வம்சத்தின் தலைவர்களாக விளங்கினர்.** (இங்கு சமஸ்கிருத மொழியில் இப்றாஹீம் 'இப்ராம்' என்று குறிக்கப்பட்டுள்ளது) மேலும் தௌராத் வேதத்தில் இப்றாஹீம் என்னும் பெயர் இப்ராம் என்றுதான் கூறப்பட்டிருந்தது. பின்பு இறைவன் அப்பெயரை

இப்றாஹீம் என மாற்றி வைத்து நீர் மனிதகுலத்தின் தலைவராவீர். ஆதலால்தான் இ ப்பெயரை உமக்கு நான் வைக்கிறேன் என்றும் கூறினான். இந்த ஆதாரங்கள் அனைத்தும் பவிஷ்ய புராணத்தில் முதல் காண்டம், நான்காவது அத்தியாயத்தின் சுலோகங்களில் காணப்படுபவைகளாகும்.)

**'ஒருமுறை ஷகாதீஷ் என்பார் இமயமலையைத் தாண்டி ஹோட் என்னும் தேசத்திற்கு சென்றான். அங்கே மலைகளுக்கிடையே சிவந்த நிறமுடைய வெள்ளை ஆடை தரித்த ஒருவரைக் கண்டு சந்தோஷமுற்றவனாக அவரை நெருங்கி நீங்கள் யார்? எனக் கேட்க, அதற்கவர், என் பெயர் ஈஸா, நான் கன்னித்தாயின் வயிற்றிலிருந்து பிறந்தவன். நான் சத்தியத்தை போதிக்கிறவன். மிலேச்சியருடைய தர்மத்தை பரப்புகிறவன் என்று சொல்ல, அது கேட்ட அரசன், தர்மங்களைப் பற்றிய தங்களின் அபிப்பிராயம் என்ன? என்று கேட்க, அதற்கு ஈஸா சத்தியம் மறைந்து மிலேச்ச தேசம் உண்மையை விட்டும் தூரமாகிப் போனதால்தான் நான் இங்கே வந்துள்ளேன். ஓ! அரசனே! என்னிடம் மிலேச்சியர் தரப்பில் நிலைநிறுத்தப்பட்ட மதத்தின் போதனைகளைக் கேளும். நீர் குளித்தாலும் சரி, குளிக்காவிட்டாலும் சரி. மனதை ஒருமுகப்படுத்தி இறைவனை வணங்கு. நீதம் மற்றும் உண்மையைக் கொண்டு மனதை ஒருமுகப்படுத்தி மனிதன் விண்ணின் கடவுளை உருக்கமாக தியானிக்க வேண்டும். அந்தக் கடவுள் மறையாதவன். ஈஸ்வரின் பரிசுத்தமான பலனளிக்கும் அஸல் தோற்றம். இவ்வாறு தினந்தோறும் தியானிப்பதன் மூலம் உள்ளத்தில் ஒளி தோன்றும். அதனால்தான் எனது பெயர் ஈஸா மஸீஹ் என்பதாகும் என்று சொல்ல, அதுகேட்ட அரசன் அவ்விடத்திலேயே ஈஸாவின் மீது நம்பிக்கை கொண்டவனாகிவிட்டான்.'** (இந்த மொழியாக்கம் பவிஷ்யப் புராணத்தின் எந்த சுலோகங்களிலிருந்து எடுக்கப்பட்டுள்ளதோ அவை பண்டித் வேதப்பிரகாஷ் உபாத்யாயா என்பாரின் 'பிரீத்தி சத்புறா' என்னும் நூலின் மூன்றாவது காண்டம், இரண்டாவது அத்தியாயம், இருபத்தி ஒன்றாவது சுலோகத்திலிருந்து துவங்குகிறது. அஸல் பவிஷ்ய புராணம் நம்மிடம் இல்லாததால் பண்டித் ஸ்ரீராம் சர்மாவின் எழுத்துக்களில் தவறு நிகழ்ந்திருப்பதாகத் தோன்றுகிறது. ஏனெனில் அஸல் சமஸ்கிருத மொழியில் **ஈஸா** என்றும் மஸீஹ் என்பது **'மஸ்ஸீ'** என்றும் குறிக்கப்பட்டுள்ளது. இதில் பண்டித் ஸ்ரீராம் சர்மா அவர்கள் ஹிம்துன்ங் என்பதற்கு இமயமலை என்பது அர்த்தமாகும் எனக் கூறுகிறார்)

**'அக்காலத்தில் மிலேச்சியரை சேர்ந்த முஹம்மத் எ ன்னும் பெயருடையவர் தம்மை பின்பற்றுவோருடன் வருவார். போஜராஜா அவரிடம் கூறுவான், ஏ! பாலைவனக்காரரே! சாத்தானை தோல்வியுறத் செய்பவரே! அற்புதங்களின் அதிபதியே! தீமைகளை நீக்கி பரிசுத்தமாக்கும் சத்தியத்தின் நிலைக் களனே! கடவுளின் பேரின்பக் காதலுடைய ஞானங்களின் தோற்றமே! உமக்கு நமஸ்காரம். நீர் என்ன! உம்மிடம் அபயம் தேடிவந்த அடிமையென்று நம்பும் என்று கூறுவான். அப்போது போஜராஜாவிடமுள்ள கல்லாலான ஒரு விக்ரஹத்தை குறித்து முஹம்மத் கூறுவார். அது எனது எச்சிலைத் திண்ணும் எனக் கூறி ஒரு அற்புதத்தை போஜராஜாவுக்கு காட்டுவார். அதைக் கொண்டு அவன் திகைப்புற்று ஆச்சரியமடைந்தவனாக மிலேச்சிய தர்மத்தை நம்புவான்.'** (இந்த சுலோகம் பவிஷ்ய்

புராணத்தின் பிரீத்தி சக்புரூ மூன்றாவது காண்டம், மூன்றாவது அத்தியாயத்தின் ஐந்திலிருந்து பதிமூன்றாம் வரையுள்ள சுலோகங்களாகும். இதில் 'முஹம்மத்' என்பதை சமஸ்கிருத மொழியில் 'மஹாமத்' எனக் கூறப்பட்டுள்ளது. இந்த இடத்தில் இன்னொன்றும் நமக்குத் தெளிவாகிறது. அதாவது 'மிலேச்' என்னும் பதம் ஆரியரல்லாத கூட்டத்தாருக்கு பயன்படுத்தப்பட்டு வந்த ஒரு பதமாகும் என்பதுதான் அது. எவ்வாறெனில் அரபியர் அரபியரல்லாதாரை குறிப்பிடும் போது 'அஜமி' என்றும், யூதர்கள் யூதரல்லாதாரை குறிப்பிடும்போது புநவெமைள என்னும் பதத்தை பயன்படுத்திவந்துள்ளதை நாம் கவனிக்க வேண்டும். ஆனால் இப்போது இந்த மிலேச் என்னும் பதம் கெட்ட அர்த்தத்தில் பயன்படுத்தப்பட்டு வருகிறது. ஆயினும் வேதமொழியில் இப்பதத்திற்கு தவறான அர்த்தம் கிடையாது)

**'மேற்கண்ட சுலோகங்களுக்குப் பின் கூறப்பட்டுள்ளது என்னவெனில் கடவுளின் தூதர் போஜராஜாவிடம் வந்து கூறுவார். விருத்த சேதனம் செய்பவரும், குடுமி வைக்காதவரும், தாடி வைப்பவரும், தூய்மையான பிராணிகளை உணவாக உட்கொள்பவரும், கடவுளுக்கு மிக நெருக்கமான அடிமையும் நான் தான் என்று கூறுவார்'**

இதுவரை பவிஷ்ய புராணத்தில் காணப்படும் எந்தெந்த ஆதாரங்களை நீங்கள் மேலே பார்த்தீர்களோ அவைகளை இந்து மதத்திலுள்ள சில வக்ரபுத்தியுடையவர்கள் இப்போது மறைக்கப் பார்க்கின்றனர். இன்னும் இந்து மதத்திலுள்ள ஆரியர்களின் ஒரு கூட்டம் இப்போது இந்த ஆதாரங்களனைத்தையும் முற்றிலுமாக மறுக்கவும் தலைப்பட்டுள்ளது. ஆனால் சனாதன தர்மத்தை சேர்ந்த ஓரிறைக் கொள்கையை உடையவர்கள் தமது மதத்தின் எந்தவொரு பகுதியையும் விட்டுக் கொடுக்கத் தயாராக இல்லை. இவர்கள் தான் இந்து மதத்தில் மிகுதமாகவும் இருக்கின்றனர். இவர்கள் அதை ஒரு ஆதாரமான மதக்கிரந்தமாகவும் நம்புகின்றனர். ஒரு காலமிருந்தது. அப்போது சமஸ்கிருத மொழியை பாமரர்கள் கற்றுக் கொள்வதற்கு அனுமதி அளிக்கப்பட்டிருக்கவில்லை. **'அல்பெய்ரூனி, கிர்ஃபத், மேக்ஸ்முல்லர்'** போன்ற ஆய்வாளர்கள் மிகுந்த எதிர்ப்புக்கிடையே பண்டிதர்களின் விரோதத்திற்கு இலக்கான நிலையில் பெரும் முயற்சி செய்து அம்மொழியைக் கற்றுக் கொண்டனர்.

ஆதலால் அன்றிருந்த சூழ்நிலையில் அந்த ஆதாரங்கள் பாமரர்களின் கையில் சிக்கிவிடும் என்னும் பயம் பண்டிதர்களுக்கு அப்போது இல்லை. ஆனால் இப்போது அரசே சமஸ்கிருத மொழியை அங்கீகரித்து அதைப் பரப்பத் தலைபட்டுவிட்டதால் இப்போது சமஸ்கிருதம் தெரிந்த ஒவ்வொருவரும் அந்த ஆதாரங்களை தாமே பார்க்க முடியும் என்பதால் பண்டிதர்கள் தங்களை குழப்பிவிடுவார்கள் என்ற அச்சமும் இப்போது நீங்கி விட்டது. ஏனெனில் முற்காலத்தில் வேதங்களை படிக்க பாமரர்களுக்கு அனுமதி வழங்கப்படவில்லை. அதனால் இப்போது இந்துக்களிலுள்ள சில கூட்டத்தார் அந்த ஆதாரங்களையெல்லாம் மறைக்க முயன்று வருகின்றனர். காரணம் அந்த ஆதாரங்களனைத்தும் உண்மையான பாதையை தெளிவாக்குவதோடு இஸ்லாமிய மார்க்கத்தை உண்மையாக்கி வைக்கின்றன என்பதால் அவைகளை இப்போது மறைக்கப் பார்க்கின்றனர்.

கோரக்பூரிலுள்ள **'கீதா பிரஸ்'** இதுதான் இந்துமத நூல்களை அச்சிடுகின்ற மிகப் பெரிய அச்சகம். இவர்கள் பவிஷ்ய புராணத்தை இப்போது புராணம் என்று ஏற்க மறுக்கின்றனர். ஆயினும் சனாதன தர்மத்தின் மிகப் பெரிய பண்டித் ஸ்ரீராம் சர்மா ஆச்சார்யா அவர்கள் (இவருடைய சீடர்கள் மட்டும் பத்து இலட்சமாகும்) இவர்கள் பவிஷ்ய புராணத்தை ஏற்றுக் கொள்கின்றனர். இவர்களால் வெளியிடப்பட்ட பவிஷ்ய புராணத்திலிருந்து தான் ஈஸா நபி இந்தியாவுக்கு வந்துள்ளனர் என்பதற்குரிய ஆதாரங்களை நாம் எடுத்துக் காட்டினோம்.

**பகவத் புராணத்தில் முஹம்மத் நபி**

பவிஷ்ய புராணத்தில் காணப்படும் முன்னறிவிப்புகளை பற்றி நாம் விளக்க வேண்டும் என்ற அவசியமில்லையென நினைக்கிறோம். இருப்பினும் வேறு இடங்களில் முஹம்மத் நபியுடைய தூதுத்துவம் சம்பந்தமான முன்னறிவிப்புக்களில் அவைகளின் அர்த்தங்கள் மாற்றப்பட்டுள்ளன. உதாரணமாக ஸ்ரீமத் பகவத் புராணத்தில் காணப்படும் கீழ்கண்ட சுலோகத்தைப் பாருங்கள்...

**'எப்போது எண்ணிலடங்கா உயிரினங்களுக்கு மத்தியில் கணக்கற்ற நன்மைகள் வெளியாகுமோ, எப்போது மனித குலத்திற்கு பரம் பொருளின் அனுக்கிரஹம் கிடைக்குமோ அது முஹம்மதின் மூலமாகத்தான் இருள் மறைந்து விவேகம் மற்றும் ஞானங்களின் ஒளி உதயமாகும்.'** –நூல்: ஸ்ரீமத் பகவத் புராணம் 2-72.

மேற்கண்ட சுலோகத்தில் முஹம்மத் என்னும் பதத்தை 'மூஹ் + மத்' எனப் பிரித்து அர்த்தம் சொல்லப்படுகிறது. அதாவது '**மூஹ்** मोह' என்றால் 'இச்சை' என்றும் '**மத**' என்றால் '**மத்**' என்றும் அர்த்தம் செய்யப்படுகிறது. அதாவது, '**மனிதகுலத்திற்கு பரம்பொருளின் அனுக்கிரஹம் எப்போது கிடைக்குமெனில் அது மதுவின் இச்சை என்னும் இருள் மறைந்து விவேகம் மற்றும் ஞானங்களின் ஒளி உதயமாகும் போது**' என அர்த்தம் செய்யப்படுகிறது.

இது புராணத்தில் காணப்படும் முன்னறிவிப்பாகும். இப்போது வேதங்களில் நூஹ் நபியை பற்றியும், முஹம்மத் நபியின் உயர் பண்புகளை பற்றியும் கூறப்பட்டுள்ளவைகளைப் பாருங்கள்.

ஆனால் அதற்கு முன் நூஹ் நபியைப் பற்றி வேதங்கள் '**மனூ**' मनु என்னும் பெயரில்தான் பேசுகின்றன என்பதையும், அக்னீ, பிரம்மா என்னும் பதங்களைப் போல மனூ என்னும் பதமும் பல நபர்களை குறித்து பேசுகின்றதென்பதையும் மொத்தம் பதினான்கு மனூக்களில் ஒரு மனூவைக் குறித்து பேசப்படும் விஷயங்கள் முழுவதுமே ஆதம் நபியைக் குறித்துள்ள விஷயங்களாகும்.ஆனால் புராணங்கள், வேதங்கள் போன்ற மற்ற மதக்கிரந்தங்களில் மிகவும் விரிவாக எந்த மனூவைக் குறித்து பேசப்பட்டுள்ளதோ அந்த மனூ நூஹ் நபிதான் என்பதில் கிஞ்சிற்றும் சந்தேகமில்லை.

இவ்வாறு முஹம்மத் நபியைக் குறித்து எங்கெல்லாம் பேசப்பட்டுள்ளதோ அங்கே வேதங்கள் அவர்களை 'நிராஷ்னஸ்' என்னும் பெயரில்தான் பேசுகின்றன. அதாவது தௌராத், ஜபூர்,

இன்ஜீல் போன்ற வேதங்கள் '**பார்கலீத்** (Paraclete) என்னும் பெயரைக் கொண்டு பேசுவதைப் போல. இதனுடைய அர்த்தம் '**புகழுக்குரியவர்**' என்பதாகும். (அரபி மொழியிலுள்ள முஹம்மத் என்னும் பதத்திற்கும் இதுதான் அர்த்தமாகும்.) இவ்வாறே வேதங்கள் '**நிராஷ்னஸ்**' என்னும் பெயரில் முஹம்மத் நபியைப் பற்றி பேசுகின்றன. இதனுடைய அர்த்தம் '**முடிவற்ற புகழுக்குரியவர்**' என்பதாகும். சமஸ்கிருதத்தில் இப்பதம் சரியாக முஹம்மத் என்னும் பதத்திற்குரிய அர்த்தத்தை அப்படியே வெளிப்படுத்துகிறது. ஆகையால் அடுத்து நாம் உங்களுக்கு எடுத்துக் காட்டப்போகும் வேத மந்திரங்களின் அர்த்தங்களில் மனூ என்னும் பதத்தை நூஹ் நபி என்றும், நிராஷ்னஸ் என்னும் பதத்தை முஹம்மத் நபி என்னும் பதத்தைக் கொண்டு பேசுவோம். முதலில் நூஹ் நபியைப் பற்றி சில விஷயங்களைப் பாருங்கள்.

**வேதங்களில் நூஹ் நபி**

'**ஏ! அக்னியே! மனூ(நூஹ்) உமது இறை தூதுத்துவத்தை உண்மையாக்கி வைப்பவராகும்**.' – நூல்: ரிக் வேதம் 4-13-1.

இந்த மந்திரத்தைக் குறித்து வேதங்களின் தொகுப்பாளர் கிர்.:பத் என்பார் தமது ஆங்கில மொழியாக்கத்தில் குறிப்பொன்றைத் தருகிறார். அதாவது, மனூ என்பார் ஒரு மகானும் மனித குலத்தின் வழி;காட்டியுமாவார். இன்னும் மனித ஜீவராசிகளனைத்தின் தந்தையும், (ஜலப்பிரளயத்திற்கு பின் இரண்டாம் ஆதம் என்னும் நிலையில்) முதல் ஷரீஅத்தை (வாழ்வியல் சட்டத்தை) துவக்கி வைப்பவராகவும் இருந்தார். பாருங்கள்:

'**ஏ! அக்னியே! நாங்கள் உன்னை மனூவைப் போன்றே மதத் தலைவராகவும், அழைப்பாளராகவும், மார்க்க ஞானங்களை கற்பிப்பவராகவும், எல்லையில்லா அறிவாளர் என்றும் நம்புகிறோம்.**' –நூல்: ரிக்வேதம் 11-44-1.

**ஏ! அக்னியே! மனூ உனது ஜோதியை மனிதகுலம் அனைத்திலும் பரப்பி விட்டான்.**' –நூல்: ரிக் வேதம் 19-36-1.

மேற்கண்ட மந்திரங்கள் அனைத்திலும் அக்னீ என்பது '**அஹ்மதின் ஆன்மா**'வைக் குறிக்கும் வகையில் பேசப்பட்டுள்ளது. நான்கு வேதங்களிலும் இவ்வாறே நூஹ் (மனூ) என்னும் பெயர் 75 இடங்களில் பேசப்படுகிறது. ரிக் வேதத்தில் 51 இடத்திலும், யஜூர் வேதத்தில் 2 இடத்திலும், அதர்வண வேதத்தில் 14 இடத்திலும் ஸாம வேதத்தில் 8 இடத்திலும் பேசப்பட்டுள்ளது. இப்போது முஹம்மத் நபியைப் பற்றி பார்ப்போம்.

**வேதங்களில் முஹம்மத் நபி**

'**ஏ! நேசத்திற்குரிய நிராஷ்னஸே! (முஹம்மதே!) இனிய மொழியால் பேசுபவரே! பலிகள் கொடுப்பவரே! நான் உமது பலியை வஸீலாவாக (இடைப் பொருளாக) ஆக்குகிறேன்.**' –நூல்: ரிக்வேதம் 3-13-1.

**'மகத்துவமிக்க நிராஷ்ணஸின் (முஹம்மதின்) சக்தியை விரிவுப்படுத்தும் வகையில் புஷானின் (மஹ்தியின்) மாபெரும் ஆட்சியுள்ளது. அவருக்காக நாங்கள் கவிதைகள் பாடுகிறோம். ஓ! முடிவற்ற கடவுளின் வள்ளலே! எங்களை எல்லாவகையான சோதனைகளிலிருந்தும் ஈடேற்றமாக்கி வையும். இன்னும் ஆபத்துக்கள் நிறைந்த பாதைகளிலிருந்து எங்களின் கப்பலை கரை சேர்ப்பீராக (கிர்ஃபத்)** –நூல்: ரிக் வேதம் 4-106-1.

மேற்கண்ட மந்திரங்களுக்குரிய அர்த்தத்தில் வேதத் தொகுப்பாளர் கிர்ஃபத், நிராஷ்னஸ்(முஹம்மத்) என்பது அக்னியின் முக்கியமானதோர் ரகசியப் பெயராகும் என்று கூறுகிறார். ரிக்வேதத்தில் நிராஷ்னஸ் (முஹம்மத்) என்னும் பெயர் 16 இடங்களிலும், யஜூர் வேதத்தில் 10 இடத்திலும், அதர்வண வேதத்தில் 4 இடத்திலும், ஸாம வேதத்தில் 1 இடத்திலும் ஆக நான்கு வேதங்களிலும் 31 இடத்தில் முஹம்மத் நபியைப் பற்றி பேசப்படுகிறது.

இங்கே இன்னொன்றையும் அவசியம் குறிப்பிட்டாக வேண்டும். அது ரகசியவான்களில் மிக முக்கியமானவராகக் கருதப்படும் '**பண்டிட் அமர்நாத் பாண்டே**' என்பார், '**ஹுருபே தஜல்லீ**'யை (திரும்பத் திரும்ப வரும் ஒரே வாக்கியம்) குறித்து ஆராய்ச்சி செய்தவர். அவர் கூறுகிறார் **'இந்து முப்பது முறை ஒரு விசயத்தை மறுப்பான். முப்பத்தொன்றாவது முறையும் திரும்பச் சொன்னால் மறுக்கமாட்டான்.'** என்று கூறுவதால், முஸ்லிம் வேதமான குர்ஆனில சூறா ரஹ்மானில் இறைவனின் வெகுமதியைக் குறித்து 31 முறை பேசப்படுகிறது. அதன்பின் இறைவன் வினாதொடுக்கும் வகையில், '**அன்றி நீங்கள் இருவரும் உங்களுடைய ரட்சகனின் வெகுமதிகளில் எதையெதை பொய்யாக்குவீர்கள்?**' என்று கேட்பதை கவனிக்க வேண்டும்.

அடுத்து அதர்வண வேதத்தில் இருபதாவது காண்டத்தின் 127வது சங்கத்தின் வாக்கியத்தில் நிராஷ்னஸ் (முஹம்மத்) பற்றி கூறப்பட்டுள்ளவை மிகவும் கவனிக்கத் தக்க ஒன்றாகும். அதாவது...

**'ஜனங்களே! கேளுங்கள். நிராஷ்னஸை (முஹம்மதை) மக்களிடையே வெளிப்படுத்தப்படும். அந்த முஹாஜிருக்கு நாம் 10000 மற்றும் 90 விரோதிகளிடமிருந்து பாதுகாப்புத் தருவோம். அவருடைய வாகனம் ஒட்டகமாகும். அதனுடன் இருபது ஆண் ஒட்டகங்கள் இணைந்திருக்கும். அவருடைய மகத்துவம் விண்ணையும் பணியச் செய்து விடும். அம்மகத்தான ரிஷிக்கு 100 தீனாரும், பத்து மாலைகளும், 300 குதிரைகளும், பத்தாயிரம் காளைகளும் அருளப்பட்டிருந்தது.'**-நூல்: அதர்வண வேதம் 3, 21, 1-127-20.

மேற்கண்ட மூன்று மந்திரங்களின் அர்த்தத்தைப் பற்றி '**பண்டித்வேதப் பிரகாஷ் உபாத்யாயா**' என்பார் தமது நூலில் பல அத்தியாயங்களை எழுதியுள்ளார். அதில் **பரிபாஷையில் சொல்லப்பட்டிருக்கும் நூறு தீனார் என்பது நூறு திண்ணை தோழர்களையும், பத்து மாலைகள் என்பது சுவர்க்கச் செய்தி வழங்கப்பட்ட பத்து தோழர்களையும், முன்னூறு குதிரை என்பது பத்ருடைய 313 வீரர்களையும், பத்தாயிரம் காளைகள் என்பது மக்கா வெற்றியில் இணைந்திருந்த பத்தாயிரம் தோழர்களையும் குறிக்கிறது.**' –நூல்: நிராஷ்னஸ் அவ்ர் அந்திம் ரிஷி.

இங்கே கவனிக்க வேண்டிய முக்கியமானதோர் விஷயம் என்னவெனில், புராணங்களிலும் மற்ற மதக் கிரந்தங்களிலும் பல நபிமார்களின் வரலாற்றுச் சம்பவங்கள் காணப்படுகின்றன. ஆனால இந்துமத வேதங்களில் ஆதம் நபி மற்றும் நூஹ் நபி பற்றிய குறிப்புகளும் இறுதித்தூதரான முஹம்மத் நபியின் வருகைக்குரிய முன்னறிவிப்பு மட்டும்தான் காணப்படுகிறது. அதையன்றி வேறு எந்த நபியைப் பற்றியும் குறிப்பும் காணப்படாததே அந்த வேதம் நூஹ் நபிக்கு அருளப்பட்ட ஜுபுருல் அவ்வலீன் (முந்தைய வேதச் சுவடி) ஆதிகிரந்தம் என்பதை ஆதாரப்படுத்துகிறது. இன்னும் இதுபற்றி பலவீனமான அறிவிப்பொன்றும் காணப்படுகிறது, அதாவது, நூஹ் நபிக்கு ஜலப்பிரளயத்திற்கு முன் ஒரு வேதச் சுவடியும் ஜலப்பிரளயத்திற்கு பின் ஒரு வேதச்சுவடியும் என இரு வேதச்சுவடிகள் கொடுக்கப்பட்டதால் தான் அதை முஸ்லிம் வேதமான குர்ஆன் ஜுபுருல் அவ்வல்; எனக் கூறாது **அவ்வலீன்** எனக் கூறுகிறதென்றும் சொல்லப்படுகிறது.

ரிக்வேதத்தில் இறுதித்தூதரைக் குறித்து, **'ஸமுத்ராதவத் அர்பன்'** எனக் கூறுகிறது. 1-163-1 விஷால் நாலந்தா சப்தசாகர் என்னும் அகராதி நூலைக் கொண்டு இவ்வாக்கியத்தை நாம் பிரித்துப் பார்ப்போமாயின் **'ஸ'..** என்பதற்கு **'உடன்'** என்றும் **'முத்ரா'** என்பதற்கு 'முத்திரை' என்றும் **'அரப்'** என்பதற்கு **'அரபு தேசம்'** என்றும் அர்த்தமாகும். இதில் **'ன்'** என்பது சமஸ்கிருதத்தில் அதிகப்படுத்தப்படும் ஒரு வாக்கியமாகும். அவ்வாறாயின் **'ஸமுத்ராதவத் அர்பன்'** என்பதற்குரிய அர்த்தமானது **'முத்திரையுடன் கூடிய அரபு தேசக்காரர்'** என்பதாகும். அரபி மொழியில் **'காத்தம்'** என்பது **'முத்திரை'**யை குறிக்கும். அதனால்தான் முஹம்மத் நபியை **'காத்தமுன் நபிய்யீன்'** என்பதாக முஸ்லிம் வேதமான குர்ஆனும் குறிப்பிடுகிறது. இதன் மூலம் முஹம்மத் நபியவர்கள் நபிமார்களின் வருகைக்கு முத்திரையிட்டு புதிய நபித்துவத்திற்கு முற்றுப் புள்ளி வைத்து விட்டனர்.

அடுத்து வேதங்களிலும் இந்துமத இதர நூல்களிலும் மற்ற விண்ணுலக வேதங்களிலும் முஹம்மத நபியுடைய நபித்துவம் குறித்து இன்னும் இரு முக்கியமான அஹ்மத் -மஹ்மூத் என்னும் பெயர்களும் விரிவாகப் பேசப்படுகின்றன. அவைகளை குறித்து பின்னால் நாம் பேசுவோம்.

## அத்தியாயம் பதினொன்று

### வைதீக தர்மமும் மறுமையும்

**மறுமை, புனர்ஜென்மம் பற்றி நம்பிக்கை**

மறுமை சம்பந்தமான நம்பிக்கை என்பது மதரீதியான நம்பிக்கைகளில் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாகும். இதில் எல்லா மதங்களும் அவர்களை தழுவி வாழுகின்ற கூட்டத்தாரும், ஓரிறைக் கொள்கையை நம்புகின்றவர்களாகவும், நபித்துவத்தை (தூதுத்துவம்) பற்றி தெரிந்தவர்களாகவும் தான் இருக்கின்றனர். இருப்பினும் இறுதித்தூதரான முஹம்மத் நபியை அவர்கள் ஏற்க மறுக்கின்றனர். எனினும் மதரீதியான அடிப்படை நம்பிக்கையில் மறுமை சம்பந்தமான நம்பிக்கை இப்போது மறைந்து விட்டது. இறுதிநாள், வெகுமதி, நரகம், சுவர்க்கம்

போன்ற விரிவான விளக்கங்கள் எதுவுமே அவர்களிடையே காணப்படவில்லை. ஆனால் சிலர் இப்போது மறுபிறப்பை நம்புகின்றனர். சிலர் இறுதிநாளை நம்புவதே இல்லை. இவ்வாறே சிலர் கேள்விகணக்கையும் மறுப்பதோடு ஈஸா நபி தம்மை சிலுவைக்குப் பலி கொடுத்து எல்லோருடைய பாவங்களையும் மன்னித்துவிட்டார்கள் எனக் கூறி வருகின்றனர். நவூதுபில்லாஹ்.

மேலும் இப்போதுள்ள தவ்ராத், ஜபூர், இன்ஜீல் போன்ற வேதங்களில் மறுமை பற்றிய விஷயங்கள் மிகவும் பூடகமாகத்தான் காணப்படுகின்றன. ஆனால் இந்துமத வேதங்களில் மிகவும் விரிவாக அடுத்து வரவிருக்கும் வாழ்க்கை, வெகுமதி, தண்டனை, நரகம், சுவர்க்கம் போன்றவைகளைப் பற்றி மிகத் தெளிவாகக் காணப்படுகிறது. மறுபிறப்பு சம்பந்தமான நம்பிக்கை இந்து மதத்தில் மிகவும் பிந்திய காலத்தில்தான் ஏற்பட்டது. இன்னும் வைதீக தர்மம் தோன்றுவதற்கு முன்னரே மறுபிறப்பை நம்புகிறவர்கள் இருந்துள்ளனர். ஆனால் இந்துக்களின் ஒட்டு மொத்தமான முழு சமுதாயமும் மறு ஜென்மத்தை நம்புவதென்பது பின்புதான் தோன்றிற்று.

இன்னும் இம்மறுபிறப்பு விசயத்தில் ஏதாவது ஒரு இந்து சகோதரரை சந்தித்து அவரிடம் நீங்கள் உங்களுடைய நன்மை தீமைக்குத் தக்கவாறு இப்பூமியில் திரும்பத் திரும்ப பல்வேறு சரீரத்தைக் கொண்டு பிறந்து கொண்டு இருப்பீர்களேயாயின் ஊங்களுடைய மத வேதங்களில் சுவர்க்கம், நரகம், பரலோகம், எமதூதன் எனக் கூறப்படும் வார்த்தைக்கெல்லாம் என்ன அர்த்தம் என்று கேட்பீர்களேயாயின் அவர் உங்களுக்கு எந்தப் பதிலும் தரமாட்டார். இதன்றி இந்துக்களிலுள்ள பல அறிஞர்களும் பல்வேறு தாறுமாறான விளக்கங்களைத்தான் மறுஜன்மம் குறித்து தருகின்றனர். விஷயம் என்னவெனில் இவர்கள் தமது வேதத்திலிருந்து தம்மை துண்டித்துக் கொண்டதன் விளைவுதான் இன்று இவர்கள் இம்மாதிரியான தாறுமாறான கொள்கைக்கு தம்மை பலியிட்டுக் கொண்டதற்குரிய காரணமாகும்.

மறுஜென்மம் என்பது எப்படி வந்தது? அதனுடைய உண்மைநிலை என்பதென்ன? இதைப் பற்றி நாம் வேதங்களில் மறுமை பற்றி கூறப்பட்டுள்ள ஆதாரங்களை விளக்கிக் காட்டியபின் விளக்குவோம். ஆனால் அதற்குமுன் '**புனர் ஜென்மம்**' 'पुनर्जन्म' என்னும் அவ்வாக்கியமே '**திரும்பத் திரும்ப பிறத்தல்**' என்பதை மறுக்கின்றதென்பதை மட்டும் புரிந்து கொள்ளுங்கள். ஏனெனில் சமஸ்கிருதத்தில் '**புனர்**' அல்லது '**புனஹ்**' पुनः என்பதற்கு '**மறுபடியும்**' அல்லது '**இரண்டாம் முறையாக**' என்பதுதான் அர்த்தமாகுமாதலால் புனர் ஜென்மம் என்பது மறுபடியும் அல்லது இரண்டாம் முறையாக பிறக்குதல் என்பதுதானே தவிர திரும்பத் திரும்ப பிறக்குதல் என்பது அல்ல. இதுபற்றிய சில இந்து அறிஞர்களின் கூற்றுக்களை இப்போது பார்ப்போம்.

**இந்து திடஞானிகள் அங்கீகரிக்கின்றனர்.**

'**ரிக் வேதத்தில் புனர்ஜென்மம் குறித்து சொல்லப்படவில்லை.**' –நூல்: உபநிஷத்தோன் கா பூமைக்கா, பக்கம் 42.

ஆனால் டாக்டர் ராதாகிருஷ்ணனின் பார்வையில் நிறையக் கூறப்பட்டுள்ளது. அதேநேரம் மேற்படி (நூலாசிரியரின்) பார்வையில் அவை படவில்லை போலும். வேதங்களில் புனர்ஜென்மம் (மீண்டும் பிறக்குதல்) பற்றி மட்டுமல்ல. திரும்பத் திரும்ப பிறப்பதையும் (மறுபிறப்பு) மறுக்கக் கூடிய வாக்கியங்களும் அவற்றில் காணப்படுகின்றன.

**'புனர்ஜென்மத்தை குறித்து சொல்லப்படும் ஒரு வாக்கியமானது 'பிரித்தியாபாவஹ்'** **प्रत्य भाव** **என்பதாகும். அது, இருக்கும் தேகத்தை விட்டும் பிரிந்து வேறொரு உலகில் சென்று திரும்பவும் பிறப்பதாகும்.'**

-நூல்: பர்லோக் அவ்ர் புனர்ஜனம், பக்கம் 164.

**'முன்பே நாம் கூறிவிட்டோம். அதாவது புனர் ஜென்மம் என்பதன் மறு பெயர் பரலோகம் என்பதாகும்'**-நூல்: பர்லோக் அவர் புனர்ஜனம் பக்கம் 165.

**'இறந்தவர்கள் பரலோகம் செல்வார்களென சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளது.'** -

நூல்: பர்லோக் அவ்ர் புனர்ஜனம், பக்கம் 165.

வேதங்கள் கூறும் இன்னொரு வாழ்க்கை என்பதன் கருத்து, எதை முஸ்லிம் வேதமான குர்ஆன் ஆகிரத் (இறுதிநாள், மறுமை) என்று குறிப்பிடுகிறதோ அதுதான். இனி மற்றோர் ஆராய்ச்சியாளரான 'ராகுல் சாகிருத்தியாயன்' என்பார் கூறுவதையும் பாருங்கள்...

'மிகவும் பழமை வாய்ந்த ஒழுக்கத்தில் '**சாந்தோகயா**'வினர் தான் முதன் முதல் புனர்ஜென்மம் அதாவது இன்னொரு உலகிலில்லை. இதே உலகில் தனது செய்கைக்குத் தக்கவாறு ஜீவராசிகளின் பிறப்பெடுப்பர் என்பதை பேசத்துவங்கினர். ஆனால் அப்போதிருந்;த போதனையாளர்கள், அவர்கள் எத்தகைய அடிப்படைக்குரிய விஷயத்தை போதித்தனர் எனில் அது பின்னர் எப்படிப்பட்ட விபரீத விளைவுகளை ஏற்படுத்தியது என்பதை அவர்கள் யோசித்துப் பார்க்கவில்லை.

டாக்டர் பிரீத்தா சௌஹானி என்பார் எழுதுகிறார், **வேதங்களில் புனர் ஜென்மம் பற்றி காணப்படுகிறது. ஆனால் அது இந்த ஜென்மத்திற்கு பின் வரும் ஒரேயொரு ஜென்மத்தைப் பற்றியதே தவிர ஆயிரக்கணக்கான ஜென்மங்களைப் பற்றியது அல்ல**. –நூல்: புனர்ஜனம் அவ்ர் வேத் பக்கம் 93.

'ஸ்ரீசத்திய பிரசாத் வைத்தியலிங்கம் என்பார் எழுதுகிறார், **வேதங்களில் மறுபிறப்பை பற்றிய அடிப்படையே இல்லை. இப்பிரச்சனையில் நான் இப்போதும் விளையாடத் தயாராக இருக்கிறேன்**.' –நூல்: மறுபிறப்பு, ஆவாகோன், பக்கம் 104.

'பண்டித் துர்கா சங்கர் கத்யார்த்தி என்பார் எழுதுகிறார், **வேதங்களில் மறுமையைப் பற்றி சொல்லப்பட்டிருக்கிறதா இல்லையா? இதோர் ஆச்சரியமான கேள்விதான். இதுமனித தேகத்தில் ஆன்மா இருக்கிறதா இல்லையா? என்னும் கேள்வியைப் போன்றதுதான்**

**இதுவுமென்று சொல்ல வேண்டும். வேதங்கள் முழுவதுமே மறுமையை அது உண்டென்பதை உறுதிப்படுத்துகின்றன. இறுதிநாள் என்பது விண்ணுலக மதங்களின் ஒரு அடிப்படையான நம்பிக்கையாகும். இன்னும் வேதங்களனைத்தும் இதனை ஆதாரப்படுத்துகின்றன. வேதங்களிலும் முஸ்லிம் வேதமான குர்ஆனைப் போன்று மூன்று கொள்கைகள் மதத்தின் அடிப்படை கொள்கையென நம்பப்படுகிறது. அவை, ஏகத்துவம்;, தூதுத்துவம், மறுமை என்னும் இறுதி நாளாகும்'** –நூல்: வேத் அவ்ர் புனர் ஜியூன், பக்கம் 31.

இதுவரை சிலஇந்து திடஞானிகளின் கூற்றுக்களை பார்த்த நீங்கள் இப்போது வேதங்கள், இறுதிநாள், சுவர்க்கம், நரகம் பற்றிக் கூறுவதைப் பாருங்கள்.

**வேதங்களில் மறுமை**

**'ஏ! அக்னியே! உனது ஈடேற்றத்தை வலப்பக்க சக்தியோடு புண்ணியவான்களின் வீட்டை சேகரித்துக் கொள்வாயாக!'** –ரிக்வேதம் 4-16-10.

**'ஏ!அக்னியே! அம்மரித்த மனிதனுக்கு மீண்டுமொரு வாழ்க்கை கிடைக்கும்'** –நூல்: ரிக்வேதம் 5-16-10.

வேதங்களில் மறுமை பற்றிய ஆதாரத்திற்கு மேற்கண்ட இரு உவமைகளுமே போதும். திரும்பத் திரும்ப பிறக்குதல் என்பது இல்லாமல் மீண்டும் ஒரு ஜீவியம் என்பதன் மூலமாக மறுமையைக் குறித்து வேதங்களில் வந்துள்ளன. அத்துடன் இதோர் பூடகமான வாக்கியமுமல்ல. மிகத் தெளிவாக நன்மை தீமை பற்றியும் சுவர்க்கம் நரகம் குறித்தும் விளக்கப்;படடுள்ள ஒன்றாகும். அவைகளில் சிலவற்றை நாம் கீழே தருகிறோம்.

**வேதங்களில் சுவர்க்கம்**

'நீ அங்கே உனது சத்தியத்தின் உதவியைக் கொண்டு அந்த இடத்தைப் பார்க்கவேண்டும். அது எல்லையற்ற விரிவான இடமாகும்.' –நூல்: ரிக்வேதம் 6-21-1.

மேற்கண்ட மந்திரத்தின் விளக்கக் குறிப்பில் கிர்ஃபத் என்பார் தமது ஆங்கில மொழியாக்கத்தில் எழுதும்போது **'ஸாயின் ஆச்சார்யாவின்'** விரிவுரைக்கொப்ப அந்த இடம் என்பது சுவர்க்கமாகும் என எழுதுகிறார். (ஸாயின் ஆச்சார்யாவின் விரிவுரையை வைத்துத்தான் மேக்ஸ் முல்லர் வேதத்தை முதன்முதல் பாமரர்களுக்கு முன் வெளிக் கொணர்ந்தார்.)

**'கணவன் மனைவியாகிய நீங்கள் இருவரும் என்' முன் கைக்கட்டி நில்லுங்கள். வழிப்படுவோர் தான் அந்த சுவர்க்கத்துடைய உலகத்தில் நுழைவார்கள்'** –நூல்: அதர்வண வேதம் 3-122-6.

**'உம்மை பின்பற்றுவோர் தமது தர்மத்தின் மூலம் கடவுளுக்கு சேவை செய்வர். இன்னும் அதன்றி நீங்கள் சுவர்க்கத்தில் சந்தோஷத்தைக் கொண்டு அதன்பக்கமாக ஒதுங்குவீர்கள்'** –நூல்: ரிக்வேதம் 18-95-10

**'யார் அறிவுள்ளவர்களோ அவர்கள் மற்றவர்களுக்கு முன் வாழ்வளிக்கக் கூடிய மூச்சைப் பெற்று இத்திரேகத்திலிருந்து வெளியேறி விண்ணுக்கு சென்று தனது நேசர்களனைவரோடும் சேர்ந்திருப்பர். எந்தப்பாதையில் தேவர்கள்** (வானவர்கள்) **பயணம் செய்தார்களோ அந்தப்பாதையை கடந்து சுவர்க்கத்தில் நுழைவார்கள்.'** –நூல்: அதர்வண வேதம் 5-34-2.

**'தூய்மையப்படுத்துவரைக் கொண்டு தூய்மையாகி எலும்புகளற்ற ஒரு தேகத்துடன் மணமுள்ளவர்களாக ஒளிமயமாகி ஜோதிகளின் உலகை சென்றடைவர். அவர்களின் ஒளிமயமான தேகத்தை நெருப்பு கரிக்காது. சுவர்க்கத்துடைய உலகில் அவர்களுக்கு மிகுந்த சுகமுண்டு.'** –நூல்: அதர்வண வேதம், 2-34-4.

**'தேனைக் கொண்டு வடிக்கப்பட்ட வெண்ணையால் உருவாக்கப்பட்ட ஓடைகள், அவை மதுவைவிட பாலைவிட தயிரை விட ருசியுள்ள விபரிக்கவியலா மணம் கொண்டவை. ஊற்றுக்கள் சுவர்க்க உலகில் உள்ளவரை வந்து சேரும். அன்றி நிலோபர் பூக்களால் நிரப்பப்பட்ட நதிகளும் உனக்கு முன்னால் வரும்'.**

-நூல்: அதர்வண வேதம் 6-34-4.

இவைதான் சுவர்க்கத்திலுள்ள வெகுமதிகளை குறித்து வேதங்களில் தரப்பட்டுள்ள சில வாக்குறுதிகளாகும். இப்போது நரகத்தைப் பற்றி பார்ப்போம்.

**வேதங்களில் நரகம்**

வேதங்களை பார்க்குமுன் ஸ்ரீமத் பகவத் புராணத்தில் சொல்லப்பட்டிருக்கும் நான்கு சுலோகங்களின் அர்த்தத்தை முதலில் பாருங்கள். இதில் நரகத்தைப் பற்றி கூறப்படுகின்ற விளக்கங்கள் முழுக்க முழுக்க முஸ்லிம் வேதமான குர்ஆனுடைய கருத்துக்கு ஒத்ததாக இருப்பதையும் நாம் பார்க்கலாம்.

**'அங்கே அவனுடைய தேகத்தை எரியக் கூடிய கட்டைகளுக்கு மத்தியில் வைத்து எரிக்கப்படும். இவ்வாறே வேறு இடத்தில் மற்றவர்களால் அவனையே துண்டு துண்டாக வெட்டி அவனுக்கு அவனுடைய தேகத்தையே உண்ணக் கொடுக்கப்படும்.'** –நூல்: ஸ்ரீமத் பகவத் புராணம் 25-30-3

**'மரண உகிலுள்ள நாய்கள் அல்லது கழுதைகளைக் கொண்டு வாழும் போதே அவனுடைய ஆன்மா இழுக்கப்படும். பாம்பு தேள் போன்ற கொட்டக் கூடிய உயிரினங்களைக் கொண்டு தேகத்தை துன்புறுத்தப்படும்.'** -ஸ்ரீமத் பகவத் புராணம் 26-30-3.

**'சரீரத்தை வெட்டி துண்டு துண்டாக்கப்படும். அவனை யானைகளை கொண்டு மிதிக்கப்படும். மலை உச்சியிலிருந்து தள்ளப்படும். இன்னும் தண்ணீர் அல்லது அண்டாவில் வைத்து அமிழ்த்தப்படும். இந்த வேதனைகள் அனைத்தும் 'அந்த்மிஸ்' மற்றும் 'ரோரவ்' என்னும் பெயருள்ள நரகங்களில் இன்னும் விபரிக்கவியலாத வேதனைகள்**

**ஆணாயினும் பெண்ணாயினும் அந்த ஆன்மாவுக்கு வாழும் காலத்தில் செய்த பாவங்களுக்காக அனுபவித்தேயாக வேண்டும்.'**

-நூல்: ஸ்ரீமத் பகவத் புராணம் 3-30-27,28.

இப்போது ரிக் வேதத்திலிருந்து ஒரு உவமானத்தைப் பாருங்கள்,

**'யார் பாவம் செய்தார்களோ அவர்களுக்காக அதள பாதாளத்திற்குரிய இடம் தோற்றமாக்கப்பட்டுள்ளது.'** –நூல்: ரிக்வேதம் 4-5-5.

இந்த மந்திரங்களின் விளக்கக் குறிப்பில் வேதங்களின் ஆங்கில மொழி பெயர்ப்பாளர் கிர்.:பத் என்பார் கூறும்போது ஸாயின் ஆச்சார்யாவிடத்தில் அந்த இடம் நரகமாகும் (HELL) என்று கூறுகிறார்.

இதுவரை வேதங்கள் மற்றும் புராணங்களில் விபரிக்கப்பட்டுள்ள மறுமை, நரகம், சுவர்க்கம் போன்றவைகளுக்குரிய ஆதாரங்களை பார்த்த நீங்கள் இவை முஸ்லிம் வேதமான குர்ஆன் மற்றும் நபி மொழியில் கூறப்பட்டுள்ள மறுமை, சுவர்;க்கம், நரகம் போன்றவைகளின் விளக்கங்களோடு எத்தனை ஒத்தக் கருத்துடையதாக இருக்கிறது என்பதை சற்று கவனித்துப் பாருங்கள். மேலும் ஆயிரக்கணக்கான வருடங்களுக்கு முன்பிருந்தே ஒரு வேதத்தின் வாக்கியங்கள், கருத்துக்கள் பல ஆயிரக்கணக்கான வருடங்களுக்குப் பின்வந்த குர்ஆனின் கருத்துக்களோடு ஒத்திருப்பதே அந்த வேதங்கள் விண்ணகத்தின் வேதங்கள்தான் என்பதை ஆதாரப்படுத்துகிறதா? இல்லையா? இன்னும் அந்த வாக்கியங்களும் அதனுடைய அர்த்தங்களும் மாற்றம் பெற்று ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக புழுதி மண்டிப்போன அந்த வேதச்சுவடிகளைப் பற்றி பொறுப்புள்ள இஸ்லாமிய அறிஞர்கள் தூசி தட்டி குர்ஆனுடைய வெளிச்சத்தைக் கொண்டு தூய்மைப் படுத்த வேண்டும். பின்னும் அவ்வேதங்களில் காணப்படும் வாழ்வியல் நெறிகளை குர்ஆனுடைய போதனா முறையைக் கொண்டு சரிப்படுத்த வேண்டும். அதன்பின் இந்து சமூகத்தாரிடம் அந்த வேதங்களின் வெளிச்சத்தைக் கொண்டு அவர்களுக்கு ஓரிறை கொள்கை, நபித்துவம், மறுமை குறித்த அழைப்பு விடுக்கப்பட்டால் அவர்களை தங்களின் உண்மையான மார்க்க நெறியின் பக்கமாக அழைப்பதற்கும் வழி திருத்துவதற்கும் எளிதாக இருக்குமல்லவா?

மேற்கூறப்பட்ட சுலோகங்கள் மற்றும் மந்திரங்களின் அர்த்தங்களை கொஞ்சம் கவனமாகப் பாருங்கள். திரும்பத் திரும்ப ஒரே தேகத்தைக் கொண்டு பிறக்கக் கூடிய வாக்கியங்கள் எங்காவது காணப்படுகிறதா? இல்லையென்றால் நாம் அந்த மந்திரங்களின் நேரடி அர்த்தத்தைதான் அப்படியே எடுத்துத் தந்திருக்கிறோம். அவைகளில் மறுமை, சுவர்க்கம், நரகம் பற்றிய விரிவான வினாக்கள் மட்டும்தான் பேசப்படுகின்றன. ஆகையால் வேதங்களின் எந்தப்பகுதியிலும் மறுபிறப்பு (திரும்பத் திரும்ப பிறக்குதல்) என்னும் ஒரு வார்த்தை கூட அறவே காணப்படவேயில்லை. இவை பின்னால் உருவாக்கப்பட்டதாகும் என்பதை பல்வேறு இந்து அறிஞர்களின் நமக்குப் புலப்படுத்துகின்றன.

பின்னும் மேற்கண்ட ஆதாரங்களனைத்தையும் நாம் சனாதன தர்மவான்களின் மொழியாக்கத்திலிருந்தும், ஆரிய சமாஜ்வாதிகளின் மொழியாக்கத்திலிருந்தும் மற்றும் ஆங்கில வரலாற்றுசிரியர் கிர்ஃபத் அவர்களின் ஆங்கில மொழியாக்கத்திலிருந்தும் தான் எடுத்து எழுதியுள்ளோம். இப்போது பண்டித் துர்கா சங்கர் கத்யார்த்தி அவர்களின் சில வாக்கியங்களை அவர் மறுமை பற்றி கூறியுள்ளதை உங்களின் பார்வைக்குத் தருகிறோம்.

**'அந்த மின்னொளிக்குரிய சவுக்கால் அடிப்பவர் சாத்தானை கொல்லக் கூடியவர், ஆயிரக்கணக்கான திகைப்படைந்துள்ள அச்சத்தால் நடுநடுங்கும் மனிதர்களின் நினைவை நிம்மதி பெறச் செய்பவர். இன்னும் கணக்கற்றோர் மீது இரக்கம் காட்டக் கூடியவர், அவர் நிழலிடுகிறவர். இறப்பவனுக்கு ஐந்து ஜென்மம் தருகிறவரல்ல. ஏ! இந்துக்களே! நீங்களனைவரும் மின்னொளியின் அதிபதிக்குரியவராகி விடுங்கள்.'**

-நூல்: கான்தி நாளிதழ், 1969 ஜூலை 8, ரிக்வேதம் 1-100-12.

**'திரும்பத் திரும்ப பிறக்குதல் என்னும் விஷயம் சாத்தானைப் போன்று பழமைவாதிகள் மீது சுமத்தப்பட்டுக்கொண்டுள்ளது. பாவிகளை போன்ற இம்மாதிரியான கொள்கையுடையோரை வீழ்த்துங்கள். இறப்போரின் தேவி வயதை எரித்துக் கொண்டிருக்கிறாள். (அதாவது விரைந்து செயலாற்றுங்கள். வாழ்க்கையின் தவணை குறைந்து கொண்டே வருகிறது)'**

-நூல்: கான்தி நாளிதழ், 1969 ஜூலை 8, ரிக்வேதம் 1-92-10.

**'அவர்கள் இறுதிநாளை மறந்து இன்னுமு; அறிவையும் ஞானத்தையும் தாழ்மையாக எண்ணிப் புறக்கணித்து நாம் குறித்துள்ள எல்லையை பிடிக்கின்றனர். (அதாவது துள்ளிக் குதிக்கின்றனர்.)'**-நூல்: கான்தி நாளிதழ், 1969 ஜூலை 8, ரிக்வேதம் 1-4-3.

**'தங்களின் உள்ளத்திற்காக இனிமையான வார்த்தைகளை கொண்டு நமது சுலோகங்களை எண்ணுகின்றனர். (அதாவது ஞானத்தைப் பெற்று தங்களின் பாவங்களைக் கணக்கிடுகின்றனர்) தேவர்களுக்கு நமஸ்காரம் செய்யக் கூடியவர்களுக்கு சொல்லுங்கள். உங்களுக்கு மீண்டுமொரு ஜீவியமும், நிரந்தரமாக வாழ்க்கையும் கிடைக்கும்.'** -நூல்: கான்தி நாளிதழ், 1969 ஜூலை 8, ரிக்வேதம் 1-44-6.

பண்டித் துர்கா சங்கர் சத்யார்த்தி அவர்கள் மேற்கண்ட மந்திரங்கள் மட்டுமின்றி இன்னும் பல்வேறு மந்திரங்களை எடுத்துக்காட்டி ஆதாரப்படுத்தி வேதங்'களில் மறுமை குறித்து விளக்கப்படும் மந்திரங்களின் வாக்கியங்களனைத்தும் முழுக்க முழுக்க முஸ்லிம் வேதக் கொள்கைக்கு இணக்கமாக அமைந்துள்ளது என்றும், மறுமை நாள், நன்மை தீமை, மீண்டுமொரு வாழ்க்கை என்பன போன்றவை குர்ஆனுடைய கருத்துக்களே என்பதையும் உறுதிப்படுத்துகிறார். அத்துடன் புனர் ஜென்மம் குறித்து வேதங்களில் எங்குமே சொல்லப்படவில்லை என்பதோடு அதை மறுப்பதுடன் அத்தகைய கொள்கையுடையோரை வீழ்த்த வேண்டுமென்றும் கூறுகிறார்.

இங்கே இன்னொன்றும் முக்கியமாக கவனிக்கப்பட வேண்டும். நாம் பண்டித் துர்கா சங்கர் சத்யார்த்தி அவர்களின் கூற்றுக்களைத்தான் இங்கே உங்களுடைய பார்வைக்கு தந்துள்ளோம். இதில் அவருடைய தொகுப்போடு இணைத்துப் பார்க்கும்போது ஒவ்வொரு வேத வாக்கியத்திற்கும் ஒவ்வொரு விதமான அர்த்தத்தை தருகின்றனர். இதுதான் அர்த்தம் செய்யப்பட்டதில் ஏற்பட்ட கோளாறாகும். இனி தொகுப்பாளர்களில் சிலர் விண்ணுலக வேதத்தின் அஸல் கருத்தை விட்டும் ஒதுங்க முற்பட்டபோது மறுமை பற்றிய உண்மையான கருத்தை மறைக்க முற்பட்டபோது அத்தொகுப்பாளர்களுக்குள் இருந்த ஒற்றுமை சிதறிப் போய் ஒவ்வொருவரும் அவரவர் விருப்பத்திற்குத் தக்கவாறு விளக்கங்களை எழுதி வைத்தனர்.

**புனர் ஜென்மம் என்பதன் அர்த்தம்**

வேதங்கள் மற்றுமு; இந்து ஆய்வாளர்களின் கூற்றுப்படி அஸல் இந்து மதத்தில் இவ்வுலக வாழ்க்கைக்குப் பின் நிரந்தரமான இன்னொரு வாழ்க்கை மட்டுமே உண்டென்பதை வேதங்கள் தெளிவுப்படுத்துகின்றன. ஆயினும் கற்பனை கதைகளுக்கும் வகைவகையான தெய்வ வழிபாட்டுக்கும், பொய்மையான கொள்கைகளுக்கும் ஏதாவதொரு பிண்ணனி இருக்கத்தான் வேண்டும். நம்முடைய ஆய்வில் புனர் ஜென்மம் என்பது அடிப்படையே இல்லாத ஒன்றல்ல. மாறாக சங்கேதாஸ்பதமான சிலவேத கருத்துக்கள் அவைகளின் உண்மையான அர்த்தங்கள் வெளியாவதற்கு முன்பே மனிதர்களில் சிலர் அவைகளை தம்முடைய அறிவால் வெளிப்படுத்த தலைப்பட்டதின் விளைவே புனர் ஜென்மம் என்னும் ஒரு கதையை தோற்றுவித்ததற்குரிய காரணமாகும். பின்னும் புனுர் ஜென்மம் என்னும் வார்த்தைக்குப் பின்னால் பல ரகசியங்கள் புதைந்து கிடக்கின்றன. அவையனைத்தும் சங்கேதாஸ்பதமான வேத வசனங்களை அடிப்படையாகக் கொண்டவைகளாகும். இவைகளை பாமர மக்களுக்கு விளக்குவது அவசியமெனக் கருதுகிறோம். அப்போதுதானே ஒரு பொய்யை நீக்க முடியும்? ஆதலால புனர் ஜென்மம் பற்றிய ரகசியத்தை உரித்துக் காட்டும் இரு உண்மைகளை மட்டும் தெளிவான வாக்கியங்களைக் கொண்டு விளக்குகிறோம். அவை புரியாமல் போனதால்தான் புனர்ஜென்மம் என்றொரு கொள்கையே இந்துச் சமூக மக்களிடையே தோன்றிற்று.

**ஒன்று:** மனித சரீரத்திற்குள் எண்ணிலடங்கா கோடிக்கணக்கான ஜீவராசிகள் குடியிருக்கின்றன. நமது தேகத்தில் ஓடிக் கொண்டுள்ள ரத்தத்திலும் கணக்கற்ற வெள்ளை மற்றும் சிவப்புக் கிருமிகள் இருக்கின்றன. அடுத்து நாம் உண்ணும் உணவுகளை காய்கறிகள், இலைதழைகள், இறைச்சி என்னும் உருவில் தின்று கொண்டிருக்கிறோம். அவற்றில் லட்சக்கணக்கான உயிர் கிருமிகள் (பாக்டீரியாக்கள்) உள்ளன. அக்கிருமிகளில் மிகுதமானவை காய்கறி மற்றும் இறைச்சி போன்றவை சமைக்கப்பட்ட பின்பும் கூட உயிரோடுதான் இருக்கின்றன. இனி பால், முட்டை, தேன் மற்றும் வேறு வகையான உணவுகளை நாம் உண்ணுகிறோமே அவைகளிலும் இதே நிலைதான் காணப்படுகிறது. சுருங்கக் கூறின், நாம் அருந்தும் நீரில் கூட லட்சக்கணக்கான கிருமிகள் உயிரினங்கள் நமது தேகத்திற்குள் நுழைகின்றன.

இனி இந்த உணவுகள் அனைத்தும் மனித தேகமென்னும் தொழிற்சாலைக்குள் புகுந்து பல்வேறு செயல்களின் மூலம் மாற்றமடைந்து ரத்தமாகவோ, அல்லது கண்ணீராகவோ

அல்லது சிறநீராகவோ அல்லது மலமாகவோ அல்லது வேறு உருவமாகவோ மாறி வெளியேறுகின்றன. இவற்றில் சில ஜீவக் கிருமிகள் ஒருங்கிணைந்து ஆணுடைய முதுகந்தண்டில் நிலை கொள்கின்றன. அவைகளிலும் சில பெண்ணுடைய வயிற்றுக்குள் நுழைந்து மதிமயங்கி ஒரு புதிய மனிதத் தோற்றத்தின் உருவத்தைப் பெறுகின்றன. இதில் மனித தேகத்திலிருந்து கண்ணீராக சிறுநீராக மலமாக வெளியேறிய உயிர்க்கிருமிகள் ஏதாவது கழிவுகளில் கலந்து பல்வேறு தாவரங்களின் சரீரத்திற்குள் நுழைந்து விடுகின்றன. அதன்பின் அவை விலங்குகளின் உணவென்னும் உருவில் அவைகளுடைய வயிற்றுக்குள் சென்று நுழைகின்றன. அவ்வாறு மாறியவை அவ்விலங்குகளின் குட்டிகளாக உருப்பெற்று வெளிப்படுகின்றன. பின்பு அவ்விலங்குகளின் கழிவுகளாகி அத்தோற்றத்தில் அக்கிருமிகள் மீண்டும் வெளிவருகின்றன. அதன்பின் அக்கிருமிகள் ஈ, எறும்பு, புழு, பூச்சிகளின் உணவென்னும் உருவில் அவைகளுடைய தேகத்திற்குள் நுழைகின்றன.

பலவிலங்குகள் (உயிரினங்கள்) பலவிலங்குகளை (உயிரினங்களை) திண்ணுகின்றன. உதாரணமாக, பகைவள் கழிவுகளை திண்ணும்போது அக்கழிவுகளுக்குள் இருக்கும் அக்கிருமிகள் அப்பறவைகளின் தேகத்திற்குள் இடம் பெயர்ந்து சிலகாலத்திற்குப் பின் அப்பறவைகளின் குஞ்சுகளாக உருவம் பெற்று வெளிவருகின்றன. அவைகளிலும் சில கிருமிகள் அக்குஞ்சுகளின் கழிவுகளாக வெளியேறி மண்ணில் கலந்து மறுபடியும் புற்பூண்டுகளுக்குள் நுழைகின்றன. அதன் மூலம் மீண்டும் அக்கிருமிகள் எங்காவது ஓரிடத்தில் மனிதனின் உணவாக மாறி மறுபடியும் மனிதனுக்குள் நுழைந்து விடுகின்றன. இவ்வாறே இதோர் முடிவற்ற நிலையில் தொடர்ந்து நிகழ்ந்து வரும் ஜீவராசிகளுடைய வரிசைத் தொடராகும். இது இறுதிநாள் வரை யுகமுடிவுவரை ஓய்வின்றி நடந்து கொண்டே இருக்கும்.

மேலும் இந்த ஜீவ அணுக்களின் வாழ்க்கை விதவிதமான தோற்றங்களில் வகைவகையான தேகங்களுக்குள் பயணம் செய்து கொண்டேயிருக்கும். இப்பயணத்தின் ஒவ்வொரு தடத்திலும் லட்சக்கணக்கான ஜீவ அணுக்களில் ஏதாவது ஒரு ஜீவ அணு மட்டும் யாராவது ஒரு மனிதன் அல்லது ஒரு விலங்கு அல்லது புற்பூண்டின் உருவத்தைக் கொண்டு தனது எல்லையை எட்டிப் பிடித்து விடுகிறது. அங்குதான் அதனுடைய பயணமும் முடிந்து போகிறது. மீதமுள்ள ஜீவ அணுக்கள் மறுபடியும் மனிதன், விலங்கு, தாவரம் என்று பயணம் செய்து கொண்டே இருக்கின்றன. எதுவரையெனில் அதனுடைய எல்லை எதுவரை வராதோ அதுவரை அதனுடைய பயணம் தொடர்ந்து நடந்து கொண்டே இருக்கும்.

இதை இப்படிப் புரிந்து கொள்ளுங்கள். ஒரு மனிதனுடைய முதுகந்தண்டிலிருந்து அங்குதான் ஒரேயொரு ஜீவ அணு மட்டும் தாயுடைய கர்ப்பத்திற்குள் போய் மனிதன் என்னும் உருவைப் பெற்று வெளிவருகிறது. இந்த ஜீவ அணு, தான் அடைய வேண்டிய எல்லையை இப்போது அடைந்து விட்டது. ஆனால் அதே நேரம் அந்த மனிதனுக்குள் இருந்து வெளிவரும் லட்சக்கணக்கான, கோடிக்கணக்கான ஜீவ அணுக்கள் பல்வேறு இடங்களில் பலவகை தோற்றங்களில் வெளிப்பட வேண்டுமாகையால் அம்மனிதனுக்குள்ளிருந்து கழிவுகளாகி வெளிப்பட்டு மண்ணில் கலந்து ஒரு தாவரத்திற்குள் கூட்டமாக நுழைந்தன. அதில் ஒன்று

மட்டும் அதற்குரிய இடம் வந்ததால் புற்பூண்டு என்னும் உருவில் தோற்றமானது. மற்ற ஜீவ அணுக்கள் அந்த தாவரத்துடைய இலைகள் மற்றும் காய்களின் தோற்'றத்தில் தங்கியுள்ளன. அவைகளுக்குரிய எல்லை இன்னும் வரவில்லை.

இப்போது அந்த இலை காய் என்னும் உருவிலுள்ள ஜீவ அணுக்கள் ஒரு ஆட்டின் உணவாக மாறி அந்த ஆட்டுக்குள் நுழைகின்றன. அவைகளில் ஒரேயொரு ஜீவ அணு மட்டும் அந்த ஆட்டின் குட்டியாக உருவம் பெற்று வெளிவருகிறது. மீதமுள்ள ஜீவ அணுக்கள் அந்த ஆட்டைத் திண்போரின் உணவாக மாறி அதைத் திண்பவர்களின் தேகத்திற்குள் நுழைந்துவிடுகின்றன. இங்கேயும் ஒரேயொரு ஜீவ அணுக்கு மட்டுமே உரிய எல்லை வந்தது. அது நின்று கொண்டது. மற்றவை இடம் மாறி போய்விட்டன. இவ்வாறே அந்த ஆட்டின்பாலை அருந்துவோரின் தேகத்திற்குள் அந்த ஜீவ அணுக்கள் நுழைந்தன. அவைகளில் ஒரு ஜீவ அணுவின் எல்லை வந்தது. அது நின்று கொண்டது. மற்றவை அம்மனிதனுடைய கழிவுகள் என்னும் உருவம்பெற்று இடம் பெயர்ந்து விட்டன. இதுபோன்றே இத்தொடரின் இயக்கம் நிகழ்ந்து கொண்டேயிருக்கின்றன.

எவ்வாறு நாம் ஒரு குறிப்பிட்ட ஊருக்கு செல்வதற்காக பல்வேறு வாகனங்களில் பயணம் செய்கிறோம்? ரிக்ஷா, ரயில், டாக்ஸி என்று எத்தனை வாகனங்களில் பயணம் செய்கிறோம். நாம் வரவேண்டிய எல்லை வந்ததும் அந்த வாகனத்தை விட்டு இறங்கி விடுகிறோம் அல்லவா? அத்துடன் அந்த வாகனங்களில் எதுவுமே நமது எல்லையுமில்லை. இதேபோல பல்வேறு ஜீவ அணுக்கள் பல உயிரினங்கள் என்னும் வாகனங்களான (Carriers) புற்பூண்டுகள், விலங்குகள், கழிவுப் பொருட்கள், புலி, சிங்கம், நரி, நாய், பன்றி, மாடு, ஆடு, மனிதன் என்னும் தோற்றங்களில் பயணிப்பதற்குப் பெயர்தான் 'புனர்ஜென்மமாகும்'. இதில் ஏதாவதொரு ஜீவ அணு லட்சக்கணக்கான தேகங்களை கடந்து தனது எல்லையை தெரிந்து அதற்குரிய தோற்றத்தில் வெளிப்படுகிறது. ஆனால் இன்னும் எவ்வளவு ஜீவ ஆன்மாக்கள் தனது எல்லையை வந்தடையாமல் எங்கெல்லாம் பயணித்துக் கொண்டு அலைந்து திரிகிறது என்பது யாருக்குத் தெரியும்?

மேலும் இறைவனடைய முறைப்படுத்தப்பட்ட ஜீவிய அறிவியல் முறையின் நுணக்கங்களை எத்தனைக்கெத்தனை ஆழ்ந்து ஆராய்கிறோமோ அத்தனைக்கத்தனை நம்முடைய அறிவு திகைப்பில் ஆழ்ந்து போய் விடுகிறது. அன்றி குர்ஆனின் எச்சரிக்கை ஒலிதான் நம்முடைய காதைப் பிளக்கின்றன. என்ன? நீங்கள் கவனிக்க மாட்டீர்களா? என்ன? நீங்கள் உணர்வு பெற மாட்டீர்களா? என்ன? நீங்கள் அகப்பார்வை கொண்டு பார்க்க மாட்டீர்களா? என்ன? நீங்கள் எண்ணிப் பார்க்க மாட்டீர்களா? என்பவைகள்தான் அவை.

மேலும் எப்போது ஜீவ அணுக்களின் வாழ்வியல் நிலைகள் வகுக்கப்பட்டதற்கொப்ப ஒரு மனித உருவில் ஒரு ஜீவ அணு தனது எல்லையை வந்தடைந்து விட்டதோ அப்போதே அதனுடைய பயணம் முடிவு பெற்று விட்டதென்பதுதான் அதற்குரிய அர்த்தமாகும். இப்போது அந்த மனிதன் தனது அதிபதியின் வழிகாட்டலுக்கு ஒப்ப தனது வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டும். அதன்பின் அவனுடைய இறப்புக்குப் பின்னர் அடுத்துவரும் வாழ்க்கை அவனது

நிரந்தரத்திற்குரிய நன்மைக்குரியதாகவோ அல்லது தீமைக்குரியதாகவோ அமையும். அதன்பின் இனியொரு உருவத் தோற்றத்தில் மீண்டும் இப்பூமியில் பிறக்க வேண்டுமென்ற அவசியமில்லை.

இருப்பினும் அம்மனித தேகத்தில் சுற்றிக் கொண்டுள்ள மற்ற ஜீவ அணுக்களின் பயணம் இன்னும் நிறைவு பெறாததால் அவைகள் தொடர்ந்து பயணம் செய்து கொண்டே இருக்கும். இந்த உதாரணத்தை இறுதித் தூதரான முஹம்மத் நபியின் பொன்மொழி ஒன்றைக் கொண்டு நீங்கள் புரிந்து கொள்ளலாம்.

**'முஹம்மத் நபியவர்களின் தோழர்களில் ஒருவரான அபூஹுறைறா என்பார் முஹம்மத் நபியவர்கள் கூறியதாக அறிவிக்கிறார், என்னை ஒருவர் பின் ஒருவராக ஆதம் நபியுடைய கூட்டத்தார் அனைவரின் மேலான கூட்டத்தாரில் மாற்றப்பட்டு வந்தேன். எதுவரை எனில் இப்போதுள்ள கூட்டத்தாரில் நான் பிறக்க வைக்கப்பட்டேன்.'** –நூல்: புகாரி, மிஷ்காத்.

அதாவது முஹம்மத் நபியின் ஜீவ அணு ஆதம் நபியிலிருந்து அவர்களுடைய பிறப்புவரை ஒவ்வவொரு காலக்கட்டத்திலும் மிகவுயர்ந்;த மனிதர்களின் தேகத்தின் வழியாக நகர்ந்து நகர்ந்து இறுதியில் தனது பொன்மேனியுடன் (உருவில்) வெளிப்பட்டனர் என்பதாம்.

அடுத்து ஜீவ அணு என்னும் பதம் வாசகர்களாகிய உங்களின் விளக்கத்திற்காக நாம் பயன்படுத்திய ஒரு பெயராகும். இதுபற்றி விஞ்ஞானத்தில் எந்த ஆதாரமுமில்லை. எனினும் விஞ்ஞானத்தில் மூலப்பொருட்களின் வளர்ச்சியையோ (Theory of Evolution) அல்லது பாரம்பரியத்தின் வளர்ச்சியையோ (Genetic Theory) இன்றுவரை கண்டு கொள்ளக் கூடிய விஷயத்தில் விஞ்ஞானம் முழுமை பெறவில்லை. இன்னும் விஞ்ஞானமே அது ஒரு தியரி என்பதை ஒப்புக் கொள்கிறது. முன்னால் நாம் விளக்கிக் காட்டியுள்ள விஷயங்களை உறுதிப்படுத்துகின்ற நபிமொழிகளை இப்போது பாருங்கள்.

**'இப்னு அப்பாஸ் என்னும் நபித்தோழர் அறிவிக்கிறார், அரபாவின் நாளன்று நுஃமான் என்னுமிடத்தில் ஜீவ அணுக்களான ஆன்மாக்கள் அனைத்தையும் ஆதமுடைய முதுகந்தண்டிலிருந்து வெளிப்படுத்தி அவற்றை அணுக்களைப் போல பரவச் செய்யப்பட்டது. அதுபோது அவைகளை நோக்கி சொல்லுங்கள், என்ன! நான் உங்களுடைய ரட்சகனல்லவா? எனக் கேட்க, அதற்கு அவைகள், ஆம் நிச்சயமாக என்று கூறின.'** –நூல்: தப்ஸீர் இப்னு கதீர், பாகம் 2, பக்கம் 43.

**'அதா என்பார் கூறுகிறார், மீதாக்குடைய (வாக்குறுதிப் பெறப்பட்ட) நாளன்று ஜீவ அணுக்களான ஆதமுடை;ய முதுகந்தண்டிலிருந்து வெளியாக்கப்பட்டு பின்னர் மீண்டும் முதுகந்தண்டுக்கே திருப்பப்பட்டன. இதில் ழஹ்ஹாக் என்பார் கூறுகிறார், இறைவன் எப்போது ஆதமைப் படைத்தானோ அப்போதே அவருடைய முதுகந்தண்டில் இறுதிநாள் வரை வெளிவரவிருக்கும் எல்லா ஆன்மாக்களையும் எறும்பைப் போன்று வெளியாக்கி**

**அவைகளிடம் தனது நாயகத்தனத்தை குறித்து வாக்குறுதி பெற்று அவ்வாக்குறுதிக்கு வானவர்களை சாட்சியாக்கினான்.'**

-நூல்: ரூஹோன்ஸே மிலியே, பக்கம் 253.

மேற்கண்ட இரு நபிமொழிகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதமாக பல்வேறு நபித்தோழர்களின் வாயிலாக விபரிக்கப்படுகிறது. இனி அவ்விரு நபிமொழிகளும் மறுமை நாள் வரை வரவிருக்கும் ஜீவ அணுக்களனைத்தும் கிருமிகளைப் போன்று (பாக்டீரியாவின் உருவில்) ஆதமுடைய முதுகுந்தண்டில் குடியிருந்தன என்பதை அணுக்களைப் போன்று, எறும்பைப் போன்று என்னும் வாக்கியங்கள் மூலம் நமக்கு விளக்கிக் காட்டப்படுகிறது. அந்த பெயரைத்தான் நாம் வழக்கச் சொல்லில் ஜீவ அணு என்பதாகக் குறிப்பிடுகிறோம். இன்னும் அந்த ஜீவ அணுக்கள் பல்வேறு படித்தரங்களில் பயணம் செய்வதை குறித்து எந்த நபிமொழி கூறுகிறதோ அதை நாம் முன்னால் கூறியுள்ளோம். இருப்பினும் திரும்பவும் ஒருமுறை பாருங்கள்.

'என்னை ஒருவர் பின் ஒருவராக ஒவ்வொரு காலக்கட்டத்திலும் ஆதமுடைய மக்களில் மிகவுயர்ந்த கூட்டத்தில் புரட்டப்பட்டு வந்தேன். எதுவரை எனில் இப்போதுள்ள காலத்தில் நான் பிறக்க வைக்கப்பட்டேன்.' என்னும் இந்த நபிமொழியில் **'ஆதமுடைய மக்களின் கூட்டம்'** என்னும் வாக்கியத்தைக் கொண்டு முஹம்மத் நபியை ஆதமுயைட மக்களில் மிகவுயர்ந்த கூட்டத்தில் புரட்டப்பட்டு வந்தனர் என்றால் மற்ற ஜீவ அணுக்கள் ஆதமுடைய மக்களின் கூட்டமல்லாத வேறு கூட்டங்களில் புரட்டப்பட்டு வந்திருக்கலாமல்லவா! இறைவனே மிகவும் அறிந்தவன்.

இன்றைய விஞ்ஞான உலகத்தில் பிறப்புக்கு முன்பே வேதங்களிலுள்ள சங்கேதாஸ்பதமான வசனங்களுக்குரிய அகமிய கருத்துக்களை திறந்து பார்க்க முயற்சித்ததன் விளைவுதான் புனர் ஜென்மம் என்னும் கொள்கையை வெளிக் கொணர்ந்தது. ஒவ்வொரு விண்ணுலக வேதத்திலும் இருவகையான அறிவுகள் வைக்கப்பட்டன. அதிலொன்று, '**முஹ்க்கமாத்**' என்னும் தெளிவான கட்டளைகள். மற்றொன்று, '**முத்தஷாபிஹாத்**' என்னும் சங்கேதாஸ்பதமான கட்டளைகள். இதில் முத்தஷாபிஹாத் என்னும் கட்டளைக்குரிய சங்கேதத்திற்குரிய வசனங்கள் வேறொரு காலத்திற்காக கொண்டு வரப்பட்டவைகளாகும். ஆனால் அக்காலம் வரும் முன்னரே அதைத் திறந்து பார்த்திருக்க கூடாது. அதாவது முஹம்மத் நபியின் தேக வாழ்க்கைக்குப் பின், ஆயிரத்து நானூறு ஆண்டுகளுக்குப் பின் கஃபா என்னும் ஆலயத்தில் நிகழ்ந்திட்ட அசம்பாவிதத்திற்குப் பின்னரே அந்த இரண்டாவது யுகம் என்பது தோன்றி அந்த யுகத்தில்தான் அச்சங்கேத நிலைகளைக் கொண்ட வசனங்கள் சிறிது சிறிதாக திறக்கப்பட வேண்டியிருந்தது. இதில் இரண்டாவது யுகம் என்பதை எங்கிருந்து நாம் எடுத்தோம் என்பதற்குரிய ஆதாரங்களை குர்ஆன் மற்றும் நபிமொழியின் வெளிச்சத்தில் வேறொரு இடத்தில் இறைவன் நாடினால் நாம் விளக்குவோம். ஆனால் இப்போது இதை மட்டும் நீங்கள் தெரிந்து கொள்ளுங்கள். அதாவது மனித அறிவும் அவனது கற்பனை வளமும் விஞ்ஞான அறிவு வரும்வரை முதிர்ச்சி பெறவில்லை. அதுவரை பொறுமை காக்க முடியாத மனிதனுடைய அறிவுக் கற்பனை

முத்தஷாபிஹாத் என்னும் சங்கேத வசனங்களை திறந்து பார்க்க முற்பட்டதன் விளைவுதான் புனர் ஜென்மம் போன்ற திசைமாறும் வழிகெட்ட கொள்கையை தோற்றுவித்துவிட்டன. இஸ்லாமிய மார்க்கத்திற்கு முந்தைய உலகிலுள்ள மதங்களனைத்திலும் காணப்படும் வழிகேடுகளுக்கும், தீய கொள்கைகளுக்கும், தேவிகளின் வழிபாட்டுக்கும் பின்னால் இந்த ரகசியம்தான் ஒளிந்து கொண்டிருக்கிறது.

**புனர் ஜென்மத்தின் மற்றொரு ரகசியம்.**

புனர்ஜென்மம் என்னும் மனித வாழ்க்கயை தடம் மாற்ச செ;யயும் வழிகெட்ட கொள்கைக்குப் பின்னால் எந்த உண்மை மறைந்திருக்கிறதோ அதைப் புரிந்து கொள்ளாமல் போனதால்தான் இந்த வழிகெட்ட கொள்கைள் தோன்றிற்று என்பதையும், அதில் ஒரு உண்மை பற்றிய விளக்கத்தையும் விரிவாக நாம் எடுத்துக் காட்டினோம். இப்போது புனர் ஜென்மம் என்பதில் மறைந்துள்ள இன்னொரு உண்மையை நாம் உங்களுக்கு எடுத்துக் காட்டுகிறோம். இன்னும் எத்தனை தூய்மையான ஒரு கொள்கை அறிவுக்குப் புலனாகாமல் போனதால் வழிகேட்டின் பக்கமாக அது திரும்பி விட்டதெனன்பதையும் நீங்கள் புரிந்து யோசித்துப் பார்க்க வேண்டும். சில அறிவிப்புக்களை பாருங்கள். அவை கண்டிப்பாக உங்களுக்கு உண்மையைக் காட்டித்தரும்.

**'சனாதன தர்மத்தின் சங்கேத வாக்கியங்களை பற்றி ரிக்வேதம் 8-6-21 முன்பே நம்மை தெளிவுபடுத்தியுள்ளது. அதாவது, நான் புகழை காரணமாக்கி சம்பவங்களை சங்கேத வாக்கியங்களால் விபரிக்கிறேன்.'**

-நூல்: மார்க்கதீப், இதழ் 77 ஏப்ரல் பக்கம் 8.

**'கஹ்ட் மமாய்னீ மற்றும் கப்ஸ்டல் போன்றவை வேதங்களின் நிலைகளில் நூற்றியொரு மரணம் பற்றிய விஷயங்களாகும். அவைகளின் உணர்வுகளின் மரணம், மடமைத்தனத்தின் மரணம், வியாதி மற்றும் கவலைகளால் பொறுமையின்மையின் மரணம் இன்னும் இச்சை கோபம் போன்ற நூறு மரணங்களாகும்.'** –நூல்: பர்லோக் புனர்ஜனம் அங்க், பக்கம் 16.

**'வேதங்களின் அறிவைப் பெறாது போவதால் நற்கிரியைகளை விட்டு விடுவதால், சோம்பலால் தடை செய்யப்பட்ட உணவுகளை உண்பதாலும் பிராமணனுடைய மரணம் நிச்சயிக்கப்பட்டு விடுகிறது.'**

-நூல்: மந்திர் மகாவிங்கியான், பக்கம் 98.

**'தெளிவானதோர் விஷயம் யாதெனில், வியாதியோ அல்லது பாவமோ மடமைத்தனமோ அல்லது சோம்பலோ அதைக் கொண்டு மனிதன் உண்மையாக இறந்து போவதில்லை. ஆனால் வியாதி அவனது மாதிரி சுகத்திற்குரிய தேகத்தின் மரணம் என்பது மட்டும் நிச்சயம். இன்னும் பாவம் அவனது மாதிரி மனிதப் பண்பின் மரணம்தான். அவனது (ஆன்மாவின்) மரணமாகும். மடமைத்தனம் அவனது அறிவு விளக்கத்தின் விவேக உணர்வுகளின் மரணம்தான். இன்னும் சோம்பேறித்தனம் அவனது அறிவு விளக்கத்தின் விவேக உணர்வுகளின் மரணம்தான். இவையனைத்தும் ஆத்மாவின் மரணமாகும்.**

**எனினும் வைத்தியம், சரீரத்திற்கும் தெளிவான அறிவு மூளைக்கும், பாவமன்னிப்பு, அவனது ஆத்மாவுக்கும் இவ்வுலகிலேயே அவனுக்கு இன்னொரு வாழ்க்கையை (புனர் ஜென்மத்தை) அருள் புரிந்திடும்.'** –நூல்: மார்க்கதீப் இதழ், பக்கம் 8.

**'பாவங்களின் காரணமாக உள்ளுக்குள்ளேயே நமது மனிதத்துவம் திரும்பத் திரும்ப இறக்கின்றது. இன்னும் ஆத்மா மிருகமாகவும் மாறுகிறது. ஒருவன் பேராசை பிடித்தவனாக தனது கூட்டத்தாரை கொள்ளையடிப்பவனாக இருப்பானாயின் கடவுளின் பார்வையின் அக்குற்றங்கள் அவனது ஆன்மாவிற்கு நாயின் உருவத்தை தந்து விடுகிறது. உயிரோடு இருக்கும்போதே இவ்வுலகில் அத்தோற்றம் ஆன்மாவுக்கு வந்து விடுகிறது. இது இறைப்பண்பிற்கு மாற்றமான அருவறுக்கத்தக்க ஒரு பண்பின் தோற்றமாகும். இச்சை கொண்டவனின் ஆன்மா பன்றியின் உருவமாக மாற்றப்பட்டு விடுகிறது. இதுபோன்றே மடமைத் தனத்திற்கு கழுதையின் உருவத்தையும், சாத்தானியம் பாம்பின் உருவத்தையும், அடுத்தவனைத் துன்புறுத்திபவன் தேளின் உருவத்தையும் கொடுக்கப்பட்டு விடுகிறான். எனினும் ஆன்மாவின் அவ்வுரவ மாற்றம் கடவுள் மூலம் இவனுக்கு வழங்கப்படும் இறுதித் தண்டனையல்ல. அது பரலோகத்தில் கெட்டவர்களுடைய குற்றங்கள் முழுமையாக நிரூபிக்கப்பட்ட பின் கொடுக்கப்படும்.**'-நூல்: மார்க்கதீப் இதழ், பக்கம் 10, 11.

இதுதான் புனர்ஜென்மம் பற்றிய இன்னொரு உண்மையாகும். வேதங்களிலோ மிகத்தெளிவாக ஒரேயொரு முறை மட்டும்தான் மீண்டும் பிறக்கக் கூடிய நித்திய ஜீவியத்தைக் குறித்த வார்த்தைகள் காணப்படுகின்றன. அதை நாம் முன்பே இந்து ஆய்வாளர்கள் மற்றும் வேதங்களின் வாக்கியங்களைக்கொண்டு விளக்கிவிட்டோம். எனினும் வேதங்களின் சில கிளைகளில் பல மரணங்களைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. அந்தவகை மரணம் என்பது இவ்வுலகிலேயே ஒரே தேகத்தில் திரும்பத் திரும்ப ஆன்மரீதியாக பல்வேறு விலங்குகளின் பண்புகளின் காரணமாக ஆன்ம விலங்குகளின் தோற்றமாக மாறுதல் அடைவதைக் குறித்த மரணமாகும். இந்த உண்மையை விளங்கிக் கொள்ளாது இவ்வுலகிலேயே திரும்பத் திரும்ப வெள;வேறு தேகத்துடன் இறந்து இறந்து மீண்டும் மீண்டும் பிறப்பதாக தவறான முறையில் எண்ணிக் கொண்டுள்ளனர். (ஆன்மாவின் அகத்தோற்றம் விலங்காக உருமாறுவதை ஆன்மாவின் புறத்தோற்றமான சரீரத்திற்கு திருப்பியதுதான் புனர்ஜென்மம் என்றாகிப் போய்விட்டது. இன்னும் நாம் தந்துள்ள ஆதாரங்களை இந்து சகோதரர்களுக்கு விளக்கி காட்டுவதோடு அவர்களுடைய அஸல் வேதங்களிலுள்ள தெளிவான போதனைகளின் பக்கமாகவும் அவர்களை திருப்புவதன் மூலம் அவர்களின் தீய கொள்கைகளை விட்டும் அவர்களை நேரான பாதைக்கு நாம் திருப்ப இந்த ஆதாரங்கள் துணை புரியும் என்பதில் அறவே சந்தேகமில்லை.

## அத்தியாயம் பனிரெண்டு

**வேதங்களின் இதர கட்டளைகள்**

**சூது பற்றி...**

**'சூது விளையாடுபவனின் மூச்சு அவனை சபிக்கிறது. அவனுடைய மனைவியும் அவனை விட்டுவிடுகிறாள். சூதாடிக்கு யாரும் ஒரு சல்லிக்காசு கூட கடன் கொடுக்க மாட்டான்.'** - நூல்: ரிக் வேதம் 10-34-3

இதன்பின் மூன்றாவது மந்திரத்திலிருந்து பதிமூன்றாவது மந்திரம் வரை சூதினால் விளையும் சமூக ரீதியான, வாழ்வியல் ரீதியான தீமைகளை கணக்கிட்டு பதிமூன்றாவது மந்திரத்தில் சொல்லப்படுகிறது...

**'ஏ! சூதாடியே! சூது விளையாடுவதை விட்டுவிட்டு விவசாயம் செய். அதில் கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு நிம்மதியாயிரு.'**-நூல்: ரிக் வேதம் 1034-13.

**மதுவைப் பற்றி...**

**'மது அருந்திய பின் அதன் போதை மது அருந்தியவனின் மனதில் தனக்கொரு இடத்தைப் பிடிப்பதற்காக போராடுகிறது.'** –நூல்: ரிக் வேதம் 8-2-12

**'ஏ! கடவுளே! (உனது பாதையில்) முயற்சி செய்யாத மனிதன் மதுவருந்தி போதையால் கேட்டையடைந்து விடுகிறான். இன்னும் அவன் உன்னை துன்புறுத்துவதன் பக்கமாகவும் திரும்பி விடுகிறான். இதனால் நீ அத்தகையோருக்கு செல்வம் கிடைப்பதில் துணை புரிவதில்லை.'** –நூல்: ரிக் வேதம் 8-21-14

**வட்டியைப் பற்றி...**

**'அதிகமான செல்வத்தை ஈட்டுவதற்காக செல்வத்தை வட்டிக்கு கொடுப்போரது பணத்தை ஓ! ஈஸ்வரரே! நீ பிடுங்கிக்கொள்கிறாய்.'** –நூல்: ரிக் வேதம் 3-53-14.

**திருமணங்களில் எளிமை...**

**'எந்தப் பாதையில் நமது சிநேகிதன் பெண்ணின் தந்தையை சென்றடைகிறானோ அந்தப் பாதையை முட்களை விட்டும் தூய்மைப்படுத்தி லேசாக்கி வையுங்கள்.'** –ரிக் வேதம் 10-85-23

**ஆண் பெண்கள் உடையணிதல் ....**

**'அன்றி கணவன் மனைவியின் உடையை உடுத்துவானேயாயின் அவன் மீது சூனிய சக்திகளின் வேதனை நிகழ்கிறது.'** –ரிக் வேம் 10-85-30

**பெண்கள் வீடுகளில் வாழுதல்...**

**'அங்கே நீ எல்லா பெண்களிலும் நல்ல வீட்டுக்குரியவளாக இரு. இன்னும் கணவன் வீட்டிலிருந்தவாறே அங்குள்ள வேலைக்காரர்கள் மீது ஆட்சி செய். ஏ! பெண்ணே! கணவன் வீட்டில் தாயாகி சுகத்தைப் பெறு. கணவன் மீது நேச உறவை நிலைப்படுத்து. இன்னும் விருத்தாப்பிய வயது வரை உனது வீட்டில் ஆட்சி செய்து வா.'** –நூல்: ரிக்வேதம் 10-85-25, 26, 27.

**பெண்களின் வெட்கம் பற்றி...**

**'பிரம்மம் உங்களை பெண்ணாக சமைத்திருப்பதால் நீங்கள் உங்களின் பார்வையை தாழ்த்திக் கொள்ளுங்கள். மேலே அல்ல. உங்களுடைய பாதங்களை சுருக்கி வையுங்கள். (நடங்கள்) யாரும் உங்களின் மேனியை பார்க்காத வகை கொண்ட உடையை உடுத்துங்கள்.'** –ரிக்வேதம் 8-33-19.

## அத்தியாயம் பதிமூன்று

**நபிமொழிக்கும் புராணங்களுக்குமமிடையே உள்ள ஒற்றுமை**

பல்வேறு புராணங்களில் கலியுகத்தின் (தற்போதைய காலம்) முடிவு நெருங்கும் போது உலகில் பரவக் கூடிய தீமைகள் பற்றிய விளக்கங்கள் விபரிக்கப்பட்டுள்ளன. நாம் 'ஹரீவன்ஷ் புராணம்' மற்றும் 'விஷ்ணு புராணத்'திலிருந்து சிலவற்றை இங்கே தருவதன் மூலம் நபிமொழியில் இறுதி காலத்தின் நிலைகுறித்த சில முன்னறிவிப்புகளையும் தருகிறோம். இரண்டும் எத்தனைக்கெத்தனை ஒத்தக் கருத்துடையவைகளாக இருக்கின்றன என்பதைப் பாருங்கள்.

| ஹரீவன்ஷ் புராணம், விஷ்ணு புராணம். | நபிமொழிகள் |
|---|---|
| 'அவசியமின்றியே ஜனங்கள் பொய்யாக வாக்களிப்பார்கள். இன்னும் சத்தியமும் செய்வார்கள்.'<br><br>'கலியுகத்தில் அரசன் தனது பெண்களின் அடிமையாகி பிரஜைகளை பற்றிய பாதுகாப்பை கவனிக்காது போய் விடுவர். வீரர்களின் ஆட்சி அதிகாரம் நிலைத்திருக்காது. ஆட்சி செய்பவர்கள் ஈனர்களின் வாழ்க்கையை மேற்கொள்வர். உலகிலுள்ள எல்லா மனிதர்களிடையேயும் திருட்டு மிகுந்து காணப்படும். ஒருவன் இன்னொருவனின் சொத்தை அடித்து பணக்காரனாக நினைப்பான். தாழ்ந்தவர்கள் மட்டுமல்ல. உயர்ந்தவர்கள் கூட கடனை வாங்கி வாயில் போட்டுக் கொள்வர். அப்போது பணத்தை தான் பூஜிக்கப்;படும். மேன்மக்கள் தாழ்ந்தவர்களாக மதிக்கப்படுவர். ஈனர்களை யாரும் கண்டிக்க மாட்டார்கள். | 'முஹம்மத் நபி நவின்றதாக ஜாபிர் அறிவிக்கிறார். மறுமைநாள் வருமுன்னரே பொய்யர்களின் பிறப்பு அதிகரித்து விடும். அவர்களை விட்டும் நீங்கள் தப்பித்துக் கொள்ளுங்கள்'-நூல்: முஸ்லிம்.<br><br>'நபித்தோழர் அபூஹுறைறா அறிவிக்கிறார், முஹம்மத் நபி கூறினர், எப்போது அமானிதம் மோசம் செய்யப்படுகிறதோ அப்போது இறுதிநாளை எதிர்பாருங்கள். அமானிதம் எப்படி மோசம் செய்யப்படும்? என்க கேட்கப்பட, அதிகாரம் தரமற்றவர்களின் கைகளுக்கு வந்து சேருவதைக் கண்டால் மறுமையை எதிர்பாருங்கள் என்றனர்' –நூல்: புகாரி.<br><br>'நபித்தோழர் அபூஹுறைறா அறிவிக்கிறார் முஹம்மத் நபி; நவின்றனர், எப்போது போரில் கிடைத்த பொருட்கள் செல்வமென்று எண்ணப்படுமோ, எப்போது கணவன் மனைவிக்கு வழிப்படுகிறானோ எப்போது ஒரு |

இந்த யுகத்தின் இறுதியில் அறிஞன் தர்மத்தை விற்கக் கூடியவனாகி விடுவான். பெரியவர்களும் அறிஞர்களும் மதத்தின் பெயரால் வழிகெட்ட பாதைகளை உருவாக்குவர். கலியுகத்தில் அறிஞன் தனது வணக்கங்களை விலைபேசுவான். பெண்கள் தமது அழகை விற்கத் துவங்கி விடுவர். பூமி முழுவதும் தீய பெண்களால் நிரம்பி விடும். பெண்கள் ஏழை கணவனை கைவிட்டு பணக்கார கணவனையே மணமுடிப்பர். இனத்தின் இயற்கை நிலைமாறி ஐந்து அல்லது ஏழு வயதுப் பெண் அல்லது பத்து வயது ஆணுக்கு குழந்தை பிறக்கும். தாழ்ந்தவர்கள் இறைச்சி மதுவை விட்டு விட்டதாக பாசாங்கு பண்ணி தங்களை ஞானிகளாகக் காட்ட முயலுவர். எனினும் அஸல் வேதத்திற்குப் புறம்பான வாழ்க்கை தான் வாழுவர். பெண்களின் எண்ணிக்கை ஆண்களின் எண்ணிக்கையை விட அதிகமாகி விடும்.'

**குறிப்பு:** ஹரீவன்ஷ் மற்றும் விஷ்ணு புராணத்தின் இவ்வாக்கியங்களை நாம் பண்டித் ஸ்ரீராம் சர்மா அவர்களால் எழுதப்பட்ட 'பூமைக்கா' என்னும் நூலிலிருந்து எடுத்து தந்துள்ளோம்.

கூட்டத்திற்கு அக்கூட்டத்திலுள்ள தரமற்றவன் தலைவனாகிறானோ, இன்னும் எப்போது ஒரு மனிதனுக்கு அவனுடைய போக்கிரித்தனத்தையும் அழிச்சாட்டியத்தையும் கண்டு கண்ணியமளிக்கப்படுமோ அப்போது என்றனர்'-நூல்: திர்மிதி.

'நபித்தோழர் அனஸ் அறிவிக்கிறார், முஹம்மத் நபி அவர்கள் நவின்றனர், சந்தேகமின்றி மறுமையின் அடையாளங்ளில் ஒன்று அறிவு உயர்த்தப்படும். மடமைத்தனம் மிகைத்துப் போய்விடும். மது அதிகமாக அருந்தப்படும். ஆண்களின் எண்ணிக்கை குறைந்து பெண்களின் எண்ணிக்கை அதிகமாகிவிடும். எதுவரை எனில் ஐம்பது பெண்களின் செய்திகளை அறிய ஒரு ஆண் மட்டுமே இருப்பான்'-நூல்: புகாரி, முஸ்லிம்.

**வேதங்களில் மகாமல் மஹ்மூத்**

முஹம்மத் நபியின் விண்ணுலகப் பெயர் 'அஹ்மத்' என்பதும், இம்மண்ணுலகப்பெயர் '**முஹம்மத்**' என்பதுமாகும். இப்பூமியின் வாழ்க்கைக்குப்பின் அவர்களை '**மகாமல் மஹ்மூத்**;' என்னும் நிலைக்கு உயர்த்தப்படும். இதை இஸ்லாமியர்கள் தொழுகைக்கு அழைக்கப்படும் பாங்கு முடிந்தபின் பிரார்த்தனை ரீதியில் ஓதி வருகின்றனர். இந்து மத வேதங்களில் இம்மூன்று நிலைகளும் விபரிக்கப்பட்டுள்ளது.

**'அக்னியின் விசாலமான விபரிக்கவியலாத எந்தத் தோற்றமிருக்கிறதோ அது எப்போதும் அழியாது. அதை தேகமில்லாத ஆன்மாவென்று கூறப்படும். (இதுதான் மகாமெ அஹ்மதியாகும்) அடுத்து ஒரு தேகத்திலிருந்தால் அப்போது அதை 'ஆஸுர்' (இறுதியாக வருகை தருபவர்) என்றும், 'நிராஷ்னஸ்' (முஹம்மத்) என்றும் கூறப்படும். இனி அகிலத்தை அது பிரகாசப்படுத்துமாயின் அப்போது அது 'மாத்ரீஷ்வா'வாகும். அது போது அது காற்றைப் (ரூஹானியைப்) போன்று இருக்கும்.'** –நூல்: ரிக்வேதம் 3-29-11.;

மேற்கண்ட மந்திரத்தில் '**மாத்ரீஷ்வா**' என்பது அவர்களின் மூன்றாவது படித்தரமாகும். அதாவது அதுதான் மகாமல் மஹ்மூதாகும். வேதங்களின் ஆங்கில மொழிப்பெயர்ப்பாளர் கிர்ஃபத் என்பார் '**இது மிகவும் ரகசியமான பெயராகும்**' என்று கூறுகிறார். இன்னும் வேறொரு மந்திரத்தில் இம்மூன்று பெயர்களும் கூறப்பட்டிருப்பதைப் பாருங்கள்.

**'அக்னியின் முதல் வெளிப்பாடு சுவர்க்க லோகத்தில் மின்னலின் (ஜோதியின்) உருவிலாயிற்று. அதனுடைய இரண்டாவது வெளிப்பாடு நமது மனிதர்களின் மத்தியில் தோற்றமாயிற்று. அப்போது அது ஜாத் வேதம் பிறக்கும்போதே கல் ஞானமுடைய உம்மீ) என்று அழைக்கப்பட்டது. அதனுடைய மூன்றாவது வெளிப்பாடு ஜல்லா (ரூஹானியா)க இருக்கும். (வேதங்களில் ஜல் என்பதை ரூஹானிக்குச் சொல்லப்படுகிறது) மனித குல வெற்றிக்குரிய காரியங்களை செய்பவர் எப்போதுமே பிரகாசிக்கின்றனர். இன்னும் அவரை புகழ்ந்து பாடுவோர்தான் அவருக்கு வழிப்படுகின்றனர்.'** –நூல: ரிக் வேதம் 10-45-1

**'ஏ! அக்னியே! உனது மூன்று தோற்றங்களையும் இன்னும் எங்கெங்கே உனது தங்குமிடமுள்ளதோ அதையும் நாங்கள் புரிந்திருக்கிறோம். இன்னும் நாங்கள் உனது மறைவான பெயரையும், நீ பிடிக்கப் போகும் இடத்தையும், நீ எங்கேயிருந்து வந்தாய் என்பதையும் தெரிந்திருக்கிறோம்'**.- நூல்: ரிக் வேதம் 10-45-2.

## அத்தியாயம் பதினைந்து

**வைதீக தர்மத்தில் தஜ்ஜால்**

இறுதி காலத்தின் அடையாளங்களில் தஜ்ஜால் வெளிப்படுவதும் ஒன்றகும். பல்வேறு நபிமொழிகளில் சாத்தான் மனித உருவில் தஜ்ஜால் என்னும் பெயரில் வெளிப்படுவான் என்றும், அவன் பெரும் சக்தியுடையவனாகவும், அவனை எதிர்த்து எவராலும் நிற்க முடியாதென்றும், அவன் பூமி முழுவதையும் வெற்றி கொள்வான் என்றும், தன்னை கடவுளென வாதிப்பான் என்றும், அவனை விட்டுத் தப்பியவர்கள் மட்டுமே தமது இறைநம்பிக்கையில் வலுப்பெற்று சுவர்க்கத்தை அடைவார்கள் என்றும், கூறப்பட்டுள்ளது. அதன் பின் ஈஸா நபி வெளிவந்து அவர்களின் அனுக்கிரகத்தை மஹ்தீ என்பார் n பற்று அவர் தஜ்ஜாலை வீழ்த்துவார் என்றும் கூறப்படுகிறது.

முஹம்மத் நபியவர்கள் தனது கூட்டத்தாரை தஜ்ஜாலுடைய குழப்பத்தை குறித்து எச்சரித்துள்ளனர். இதில் முஹம்மத் நபியவர்கள் கூறியதை போல வேறெந்த நபியும் தஜ்ஜாலை குறித்து இத்தனை விளக்கமாக எச்சரிக்கை செய்யவில்லை. அத்துடன் தஜ்ஜால் மக்கா மதீனா போன்ற புனித மண்ணில் கால்வைக்க சக்தி பெறமாட்டான் என்றும் முஹம்மத் நபியவர்கள் கூறியுள்ளனர்.

இன்னும் தஜ்ஜாலை குறித்த தெளிவான விளக்கம் பைபிளிலும் காணப்படுகிறது. அதில் அவனை மிருகம் (Beast) என்றும், பொய்யான நபி (False Prophet) என்றும், மஸீஹின் விரோதி (Anti Christ) என்றும் கூறப்பட்டுள்ளது.

இதுபோன்றே இந்து மதத்தில் தஜ்ஜால் '**ஒற்றைக் கண்ணன்**' என்பதைத் தெளிவாகக் குறிப்பிடாது மறைவாக கூறப்பட்டுள்ளது. இருப்பினும் அவன் ஒற்றைக் கண்ணனாதற்குரிய காரணங்கள் முழுவதும் காணப்படுகின்றன. அதில் அவனை अन्धकासुर ' **'அந்தக் ஆஸுர்'** எனக் கூறப்படுகிறது. அதாவது, '**ஆஸுர்**' என்பதற்கு '**பின்னால் வருபவன்**' என்பதும், '**அந்தக்**' என்பதற்கு '**குருடனைப் போன்ற**' என்பதும் அர்த்தமாகும். '**ஹரீவன்ஷ் புராணத்தில்**' அந்தக் ஆஸுரைப் பற்றி அதாவது தஜ்ஜாலைப் பற்றி தரப்பட்டுள்ள விளக்கத்தை நாம் கீழே தருகிறோம். புராணங்களின் பழைய அவதாரங்களைப் போலவே இதுவும் ஒரு அவதார ஸ்தானத்தை பிடித்துக் கொண்டுள்ளது.

**'அவனுக்கு ஆயிரம் கைகயும் (அதாவது மிகுந்த சக்தியுடையவன்) ஆயிரம் தலைகளும் (அதாவது மிகச் சிறந்த புத்திசாலி) இரண்டாயிரம் கால்களும் (அதாவது பூமியின் எல்லாப் பகுதிக்கும் விரைவாக செல்பவன்) இரண்டாயிரம் கண்களும் (அதாவது அகலப் பார்வையுடையவன்) இருந்தும் அந்த சாத்தான் தனது 'நான்' என்னும் அகம்பாவத்தின் காரணமாக குருடனைப் போல் நடப்பான். இதனாலேயே அவன் குருடனைப் போன்றவன் என்னும் பெயரில் பிரபலமாவான்.'**

-நூல்: ஹரீவன்ஷ் புராணம் பாகம் 1, பக்கம் 492.

**'இவ்வாறு பூமி குழப்பத்தில் நிறைந்து போனபின் அனைவரும் ஒன்றுகூடி அவனை ஒழிக்கும் விஷயத்தில ஒருங்கிணைந்து அதற்குரிய வழியைத் தேடுவார்கள். நாரதர் சொன்னார், அதாவது** मन्दार पर्वत 'மந்தார் பர்வத்தில்' **(அதாவது மக்காவின் மலைகளி;ல்) 'தாம்தாம்' என்னும் பரிசுத்த தோட்டமொன்று உள்ளது. அது சங்கரால் (கடவுளால்) உருவாக்கப்பட்டதாகும். சிவனின் அனுமதியின்றி அங்கே யாரும் செல்ல முடியாது. சிவனின் அருளால் அம்முந்திய கூட்டத்தாரை யாராலும் அழிக்க முடியாது.'** –நூல்: ஹரீவன்ஷ் புராணம் பாகம் 1, பக்கம் 497, 498.

**'இன்னும்** मन्दार वृक्ष **.'மந்தார் விருட்சத்தின்' (கஃபாவின்) மகத்துவம் என்னவெனில் அப்படிப்பட்ட ஓர்சுகம் வேறு எந்த இடத்திலும் கிடைக்காது'**. – நூல்: ஹரீவன்ஷ் புராணம் பாகம் 1, பக்கம் 498, 499.

अन्धकासुर ' **.'அந்தக் ஆஸுர் (ஒற்றைக் கண்ணன் தஜ்ஜால்) மந்தார் பர்வத்திற்கு (மக்காவின் மலைப்பகுதிக்குச்) செல்ல எண்ணி முடிவெடுத்து தன்னோடு நிறைய சாத்தான்களை அழைத்துக் கொண்டு சிவனுடைய இருப்பிடத்தை (கஃபாவை) நோக்கி கர்வத்தோடு செல்வான். அவன் மந்தார் பர்வத்தை (மக்காவிலுள்ள மலைகளை) நோக்கி, நான் எனது பிதாவின் கரத்தாலன்றி வேறு யாராலும் எனக்கு மரணம் நிகழாதென்னும் வரம் பெற்றவன். (இறைவன் சாத்தானுக்கு இறுதிநாள் வரை வாழ்க்கையைத் தந்துள்ளான்.) நான் இப்போதே உன்னை n பாடிப் பொடியாக்கி விடுகிறேன் பார் எனக்**

**கூறிக் கொண்டே மலையின் ஒரு பகுதியை பெயர்த்தெடுப்பான். அது அவனது கூட்டத்தாரின் மீது விழ்ந்து அவர்களை அழிக்கும். அதைக் கண்ட அந்தக் ஆஸுர் (தஜ்ஜால்) மிகுந்த கோபத்துடன் உக்கிரமடைந்து நான் இன்றைய அரசனை (वन நாடு; அல்லது நகரத்துடைய மன்னன்) போருக்கு அழைக்கிறேன் என்று கூறுவான். அதைக் கேட்டு போதீஸ்வர் பகவான் திசூலத்தை எடுத்துக் கொண்டு (திரிசூலத்தின் வடிவம் الله அல்லாஹ் என்னும் எழுத்தைப் போன்றுள்ளது. அதாவது அல்லாஹ்வின் உதவியைக் கொண்டு) அந்தக் ஆஸுரை (தஜ்ஜாலை) அழிப்பதற்காக முந்திய பிந்திய கூட்டத்தாரோடு அவன்முன் வருவார்'.**

-நூல்: ஹரீவன்ஷ் புராணம் பக்கம் 502, 503.

**'அவர் அக்னியின் வடிவிலுள்ள திரிசூல்தை அந்தக் ஆஸுரின் (தஜ்ஜாலின்) மீது செலுத்த அது சாத்தான்களின் அரசனுடைய மார்பில் பாயும். மந்தார் சல்லின் (மக்காவின்) மகத்துவம் மீண்டும் திரும்பி வரும்.'** –நூல்: ஹரீவன்ஷ் புராணம் பக்கம் 504.

## அத்தியாயம் பதினாறு

**இந்த ரகசியம் ஏன் ரகசியமாகவே உள்ளது?**

**இந்துக்களிடையே நடந்து வரும் சில ரகசியம்.**

நாம் நம்மை முஹம்மத் நபியைப் பின்பற்றுவோர் எனக் கூறிக் கொள்கிறோம். நாம் இப்பூமியில் அறியாமையை அகற்றுவதற்காகத் தோன்றியவர்கள். இன்னும் இவ்வுலகில் இறையாட்சியை உருவாக்குவதுதான் நமது லட்சியமும் கூட. கொஞ்சம் யோசியுங்கள். இப்போது அதற்குரிய தகுதி நம்மிடம் இருக்கிறதா? அறியாமையின் இருளை அகற்றுகின்றவர்கள் என மார்தட்டிக் கொள்ளக் கூடிய நாம் இன்று எத்தகைய அறியாமைக்கு பலியாகியிருக்கிறோம்.? மேலும் நாம் உங்கள் முன் எதை மிகப்பெரும் ஆதாரத்துடன் விளக்கிக்காட்ட முயன்று கொண்டுள்ளோமோ அதை நம்புகின்ற விஷயத்தில் கூட உங்களுக்கு மிகுந்த கஷ்டம் நேருகிறது என்ற ஒன்றே இதற்குரிய உதாரணம் என்று சொல்லலாம். ஆனால் இவையனைத்தையும் இந்துச் சமூக மக்கள் மிக நன்றாகப் புரிந்துள்ளனர்.

இந்துக்கள் மிகப் பெரிய தீர்த்த ஸ்தலமென்று எதை அவர்கள் '**ஆதி புஷ்கர் தீர்த்**' என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்களோ அது மக்காவிலுள்ளது என்பதை அவர்கள் மிக நன்றாகத் தெரிந்துள்ளனர். இன்னும் அவர்களின் அஸல் '**சிவலிங்கம்**' என்பது முஸ்லிம்களின் '**ஹஜ்ருல் அஸ்வத்**'தாகும். சிவலிங்கம் என்பது ஒரு அசிங்கமான பொருளின் பெயரல்ல. இவ்வாறே லிங்கம் என்பதற்கு சின்னம் என்பது அர்த்தமாகும். அதாவது '**இறைவனின் சின்னம்**' என்பதாம்.

இதுவும் இந்துக்களிடையே இஸ்லாமியர்களுக்குத் தெரியாமல் மிக ரகசியமாகப் பாதுகாக்கப்பட்டு வரும் ஒன்றாகும். அதாவது இறப்புத் தருவாயின் போது மரணவேதனை

எளிதாக்கப்படுவதற்காக இறப்போரின் காதில் ரகசியமாக சொல்லப்படும் 'அன்கஹீ' என்னும் மந்திரமாகும். ஒருவர் இறந்து விடுவாரென்று தெரிந்தால் அவரை கட்டிலிலிருந்து தூக்கித் தரையில் கிடத்தி விடுவார்கள். அதன்பின் அவருடைய மரண வேதனையை எளிதாக்குவதற்காக வேண்டி அவருடைய காதில் ரகசியமாக '**அன்கஹீ**'யை சொல்லிக் கொடுப்பார்கள். இந்த அன்கஹீ என்னும் மந்திரம் சாமானிய இந்துக்களுக்குத் தெரியாது. இருப்பினும் அக்பருடைய ஆட்சிக்காலத்தில் இதை ஒரு பிராமணர் வெளிப்படுத்தி விட்டார். இது அதர்வண வேதத்திலும் இருக்கிறதென்று கூறப்படுகிறது. உதாரணமாக 'தபிஸ்தானுல் மதாஹிப்' என்னும் நூலில் காணப்படுவதாவது....

**லாஇலாஹ ஹர்னீ பாப்பன் இல்லா லம்பா பரமபதம்**

**ஜனம் பைகண்ட் பிராப் ஹோத்தீதோ ஜபே நாமே முஹம்மதம்**

என்பதாகும். இதனுடைய அர்த்தமானது '**லாஇலாஹ என்று கூறுவதால் பாவங்கள் அழிந்து போகின்றன. இல்லல்லாஹ் என்று சொல்வதால் பரமபதம் கிடைக்கும். ஒருவேளை நிரந்தரமான சுவர்க்கம் வேண்டுமாயின் முஹம்மதின் நாமத்தை ஜபி**' என்பதாகும். இதுதான் அன்கஹீ என்னும் மந்திரம். இறக்கும்போது இதை காலங்காலமாக இறப்பவரின் காதில் சொல்லப்படுகிறது. –நூல்: அக்பார் கௌமீஜங்க் பக்கம் 4.

· இந்துக்களில் சில குறிப்பானவர்களின் நம்பிக்கையானது ஒருநாள் இந்துச் சமூகம் முழுவதுமே குர்ஆனை நம்பும். விசுவாசிக்கும் என்பதாம். இதையும் பாமர இந்துக்களிடமிருந்தும் குறிப்பாக முஸ்லிம்களிடமிருந்தும் மிக ரகசியமாக பாதுகாத்து மறைத்து வைக்கப்பட்டுள்ளது.

· இனியொரு பிராணமன் தனது பிள்ளைகளை தனக்கு வாரிசாக ஆக்குவானேயாயின் அப்போது அப்பிள்ளைகளின் முகம் கிழக்குப் பக்கமாக இருக்கும் வகையில் உட்கார வைப்பான். தந்தையின் முகம் மேற்குப் பக்கமாக இருக்கும் வண்ணம் அமர்ந்து அவர்களுடைய காதில் ரகசியமாக, மகனே! நினைவில் வைத்துக் கொள். இறைவன் ஒருவன். அவன்தான் படைப்பவன். வளர்ப்பவன், காப்பாற்றுகிறவன், அவனையே வணங்க வேண்டும் என்று கூறியபின் இது மிகவும் ரகசியமான ஒன்றாகும். இதை நீ வெளியில் சொன்னால் உனது சந்தோசத்திற்குரிய நாட்கள் மறைந்து போய்விடும் என்று கூறுவான். – நூல்: Hindu Manners Customs and Ceremonies, Page 166.

· ஜல்பிரளயத்தின் மனுவை '**ஹஜ்ரத் நூஹ்**' என்னும் பெயரில் இந்துக்கள் மிக நன்றாகத் தெரிந்து வைத்துள்ளனர். இன்னும் கதைகளில் குழந்தைகளுக்கும் சொல்லிக் கொடுக்கின்றனர். உதாரணமாக, 'டங்கல்' என்னும் பத்திரிக்கையில வெளிவந்த கட்டுரையொன்றைப் பாருங்கள்....

**என் இனிய நண்பர்களே! ஒருமுறை மிகப் பெரும் ஜலப்பிரளயமொன்று வந்தது . அப்போது எல்லா மலைகளும் மூழ்கி விட்டன. இந்தக் கதையை பலர் பலவிதமாகக் கூறியுள்ளனர். வேதங்களிலும் மித்ஸியா புராணத்திலும் இச்சம்பவம் காணப்படுகிறது. ஈஸ்வர் 'ஹஜ்ரத்**

**நூஹி;டம்' சொன்னார். பெரும் கப்பலொன்றை செய்து அதில் உமது பரிவாரங்கள் மட்டுமின்றி இரண்டிரண்டு பழைய ஜீ:வராசிகளையும் ஏற்றிக் கொள்ளும் என்று சொல்ல, நூஹும் அவ்வாறே செய்தார்.அதன் பின் நாற்பதுநாட்கள் வரை இரவு பகலாக மழை பெய்தது. அதில் 'நூஹும்' அவரது கப்பலில் ஏற்றப்பட்டிருந்தவர்கள் மட்டுமே தப்பித்தனர். இச்சம்பவத்தில் 'நூஹ்' மற்றும் ஜலப்பிரளயத்தில் நமக்கொரு படிப்பினை உள்ளது. எப்படியிருக்கிறது கதை உங்களின் ஆனந்த் சாச்சா.** –நூல்: பச்சோன் கா ரிஸாலா பக்கம் 15.

மேற்கண்ட ஆதாரத்தின் வாக்கியங்களில் நூஹ் என்பதற்கு முன் ஹஜ்ரத்' என்னும் பதத்தை எழுதுபவர் நூஹ் நபியை முஸ்லிம்களின் திருத்தூதர் என்பதையும் புரிந்துதான் எழுதியுள்ளார் என்பதை காட்டித் தந்தாலும் அவர் இறுதியில் பைபிளைத்தான் ஆதாரமாகக் காட்டுகிறாரேயன்றி முஸ்லிம்களையோ அவர்களின் குர்ஆனையோ காட்டவில்லை.

சில இந்து அறிஞர்கள் அஸல் அயோத்தியா எது என்பதைத் தெரிந்துதான் வைத்துள்ளனர். இன்னும் சிலர் தமக்கு வேண்டியவர்களிடம் நமது அஸல் அயோத்தியா முஸ்லிம்களது வசமுள்ளது என்றும், கூறியுள்ளனர். இந்திய முஸ்லிம்களின் பார்வை பாபர் மஸ்ஜிதிலுள்ள அயோத்தியாவை விட்டும் தாண்டவே இல்லை. ஆனால்சில குறிப்பிட்ட இந்துக்களின் இதயத்தில் என்றாவது ஒரு நாள் தங்களின் அஸல் அயோத்தியாவை முஸ்லிம்களுடைய பிடியிலிருந்து மீட்போம் என்ற எண்ணம் மட்டும் நீரு பூத்த நெருப்பாக இன்றும் கனன்று கொண்டுள்ளது.இது அவர்கள் தங்கள் உள்ளத்தில் மறைத்து வைத்துள்ள இன்னொரு ரகசியமாகும். சிலருடைய நாவிலிருந்தும் இது வெளிப்பட்டுள்ளது.

ஸாஜித் ரஷீத் என்பாருக்கு பேட்டியளித்த சிவசேனாவின் தலைவர் பால்தாக்கரேயின் நாவிலிருந்து இது வெளியானபோது அதை அவர் மறைத்துக் கொண்டார். பேட்டி எடுத்தவரும் மேற்கொண்டு அதைக் கிளற வில்லை. இன்னும் பால்தக்கரே ஒரு கேள்விக்கு பதிலளிக்கும் போது...

**'இதோ பாருங்கள். நீங்கள் இத்தனை பின்னால் போக வேண்டாம். இப்போதுள்ள நிலையை மட்டும் பேசுங்கள். அன்றி வரலாற்றுக்குப் பின்னால் நீங்கள் வெகுதூரம் போவீர்களாயின் நான் உங்களுக்கு நிறைய மஸ்ஜிதுகளைக் காட்டுவேன். முன்பு அவைகள் கோவில்களாக இருந்தன. அதனுடைய அடையாளங்கள் இப்போதும் கூட இருக்கின்றன். அவற்றை நீங்கள் இந்துக்களுக்கு தரத்தயாரா? நான் சொல்ல விரும்பவில்லை. மேலும் சொல்லுகின்ற அதிகாரமும் எனக்கு இருப்பதாக நான் நினைக்கவில்லை. உங்களுடைய கேள்வியை வதை;துச் சொல்கிறேன். நீங்கள் வரலாற்றில் மிக நீண்ட தூரம் பின்னால் செல்வீர்களாயின் உங்களின் மக்கா இருக்கிறதே! அதில் முன்பு சிலைகள்தான் இருந்தன. இப்போது நான் அந்த இடத்தை எங்களுக்குத் திருப்பித் தாருங்கள் என்று கேட்டால் ஒப்புக் கொள்வீர்களா? எனவே இப்போதுள்ள பிரச்சனையை மட்டும் பேசுங்கள். பின்னால் போக வேண்டாம்.**' –நூல்: உர்தூ வாரஇதழ் பக்கம் 14, 15.

இதுபோன்ற இன்னும் பல உதாரணங்கள் இருக்கின்றன. நாம் மிகவும் சந்தோஷமாக அவர்களுக்கு அவர்களின் பழைய வணக்க ஸ்தலத்தை திருப்பித் தருவோம். ஆனால் எப்போது தெரியுமா? எப்போது அவர்கள் தமது வேதங்களை குர்ஆன் மற்றும் நபிமொழியின் வெளிச்சத்தைக் கொண்டு அவர்களுடைய உண்மையான மார்க்கத்தை அவர்கள் பெறுவார்களோ அப்போது கண்டிப்பாகத் திருப்பித் தருவோம்.

**நமது மறதி**

இன்னும் பாமர இந்துக்கள் இந்த உண்மைகளனைத்தையும் தெரிந்து கொள்ளாமல் இருக்கின்றனர். இந்த உண்மைகளனைத்தையும் அவர்களுடைய நூலின் முழுமையான ஆதாரங்களைக் கொண்டு அவர்களுக்கு எடுத்துக் காட்டப்படுமாயின் இப்போதுள்ள ராமனின் தோற்றமோ அல்லது ராமஜென்ம பூமியின் தோற்றமோ இருந்த இடம் தெரியாமல் மறைந்து போய்விடும். இன்னும் சரித்திரம் 360 சிலைகளைக் கொண்டிருந்த க:பாவில் ஆயிரத்து நானூறு ஆண்டுகளுக்கு முன் எவ்வாறு திரும்பியதோ அவ்வாறு இந்துக்களின் கற்பனை சரித்திரங்களும் உண்மையின் பக்கமாகத் திரும்பி விடும் என்பதில் அறவே சந்தேகம் இல்லை.

சுருங்கக் கூறின் இந்த ரகசியங்களனைத்தையும் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இந்துக்களிடையேயுள்ள குறிப்பிட்ட சிலர் ஒரு உள்ளத்திலிருந்து இன்னொரு உள்ளத்திற்கு முஸ்லிம்களுக்கும் பாமர இந்துக்களுக்கும் தெரியாமலேயே மாற்றி வருகின்றனர். இப்போது அந்த ரகசியம் குறிப்பிட்ட அச்சிலரிடமிருந்து பாமர இந்துக்கள் வரை வரத்துவங்கி விட்டது. ஆனால் மக்களை நல்வழிப் படுத்தும் முஸ்லிம்களுக்குத்தான் இதைப்பற்றி இன்னும் எதுவுமே தெரியவில்லை.

மேலும் மாற்றத்திற்குரிய காலம் நெருங்கிவிட்டதென்பதையும் இந்து அறிஞர்களில் பலர் இன்று புரிந்து கொண்டு விட்டனர். எனினும் (தமது நான் என்னும் கர்வத்தின் காரணமாக தமது கூட்டத்தாரிடம் சத்தியத்தை எடுத்துக் கூறும் விஷயத்தில் தாமதம் காட்டி வருகின்றனர்.) முஸ்லிம்களிடம் அதற்குரிய வலுவான ஆதாரங்களை எடுத்துக்காட்ட வேண்டியுள்ளது. இருந்தும் அவர்கள் என்ன கூறுகிறார்களெனில் இவையனைத்தும் மூடலான அறிவிப்புக்களின் மீது அமைந்துவிட்ட ஒரு கற்பனை கதையாகும். அத்துடன் மேற்கூறப்பட்ட ரகசியங்களனைத்துக்கும் எழுத்துப் பூர்வமான எந்த ஆதாரமுமில்லை. காரணம் அது மறைப்பதற்கே முயற்சிக்கப்பட்டு வந்துள்ளது. ஆகையால் வாய்வழிச் செய்திகள்;தான் இதுபற்றிக் கிடைக்கின்றன. எனினும் இந்த உதிப்புக்களனைத்தையும் நாம் ஆதாரப்படுத்திக் காட்ட முடியும். அதேநேரம் நாம் அதை ஆதாரப்படுத்த வேண்டுமென்ற அவசியமுமில்லை. நீங்கள் காபிர்கள் எனக் கூறி அவர்களை வெறுப்பதற்குப் பதிலாக அவர்களின் அருகே சென்று பாருங்கள். உங்களுக்கு ஆதாரம் கிடைத்துவிடும்.

குர்ஆன், ரஸூல், க:பா போன்றவைகளின் எதார்த்தத்தை புரிந்து கொள்ள வேண்டியவர்கள் புரிந்து கொண்டே மறைக்கின்றனர். இதை குர்ஆன் இப்படிச் சொல்லிக் காட்டுகிறது...

**'தங்களின் புதல்வர்களை அறிந்திருப்பதைப்போல அவர்கள் அவரை அறிந்துள்ளனர்.'** – அல்குர்ஆன்

இன்னும் இந்திய தேசத்திலுள்ள இந்துக் கூட்டத்தாரின் அறிஞர்களும், குறிப்பாக இவ்வுண்மைகளைத் தங்கள் கிரந்தம் மற்றும் வரலாற்றின் சான்றுகளைக் கொண்டு அறிந்துள்ளனர். ஆதலால் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக நம்மோடிருக்கும் அண்டை வீட்டாரின் சிந்தனை, எண்ணம் போன்றவைகளின் உண்மைநிலை என்னவென்பது எதுவரை நமக்குத் தெரியவில்லையோ அதுவரை அவர்களின் விருப்பங்களை நம்மால் கண்டுபிடிக்கவே முடியாது. மேலும் அவர்களின் விருப்பம் எதுவென்று தெரியாதவரை அவர்களை உண்மையான நல்வழியின் பக்கமாக நம்மால் அழைக்கவும் முடியாது. இது நம்முடைய அறியாமையின் குற்றம் இல்லையா? இந்த அறியாமையின் குற்றத்தோடு நமதுஇறைவனின் திருமுன் நிற்பதற்கு நாம் அஞ்சவேண்டாமா? இப்போதாவது நாம் விழுந்து எழும் நேரம் இன்னுமா வரவில்லை? **இன்னுமா உறக்கம்?**

## அத்தியாயம் பதினேழு

### முந்தைய வேதங்களின் மீது விசுவாசம்

### ஒரு தவறான எண்ணத்தின் விளக்கம்

ஆங்கிலத்தில் ஒரு பழமொழி கூறுவதுண்டு. ளுநநiபெ ளை டிநடநைஎiபெ அதாவது பார்த்தபின் ஏன் நம்பக் கூடாது என்பதே. முன்னால் சில அத்தியாயங்களில் நாம் வேதங்களில் காண்ப்படும் குர்ஆனின் நெறிமுறைகள் சிலவற்றின் உதாரணங்களை எடுத்துக் காட்டினோம். (இன்னும் அத்தகைய விளக்கமான நெறிமுறை பற்றிய விஷயங்கள் வேதங்களில் கணக்கின்றி காணப்படுகின்றன) அவைகளையெல்லாம் கண்டபின் சந்தேகம் என்பது எப்படி மீதமிருக்க முடியும்? இன்னும் வேதம் என்பது தொலைந்துபோய்விட்ட வண்ணுலகச் சுவடிகள் என்பது பொதுப் பெயராகும். இது ஆதம் நபி மற்றும் நூஹ் நபியுடன் தொடர்பு படுத்தப்பட்டவைகளாகும். மேலும் இது பண்பாடு அல்லது சமூக நல்லிணக்கத்தைப் பற்றிய தொடர்புடையதல்ல. அப்படியிருந்தால் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னால் ஒரு சிந்தனை வாதி இதனை உருவாக்கினாரென்று சொல்லலாம். ஆனால் இது மார்க்கத்தின் அடிப்படை பற்றி விளக்கிக் காட்டும் முன்னறிவிப்பை கொண்டிருந்த ஒன்றாகும். இதை ஒவ்வொரு நபியும் காலங்காலமாக அறிவித்து வந்துள்ளனர். பின்னும் வேதங்களில் ஹகீகத்தே அஹ்மதீ என்பது திரும்பத் திரும்ப பேசப்படும் முக்கியமான ஓர் தலைப்புக்குரிய விஷயமாகும்.

இங்கே சிலருடைய சிந்தனையில் சந்தேகம் தோன்றலாம். நாம் இஸ்லாத்தையும் இந்துமதத்தையும் ஒன்றுதான் என ஆதாரப்படுத்த முயலுகிறோம் என்றோ, அல்லது இரு மதங்களையும் இணைத்து ஒரு புதிதான மார்க்கத்தை உருவாக்கப்பார்க்கிறோம் என்றோ அல்லது இஸ்லாத்தின் மாண்பையும் மகத்துவத்தையும் சிதைக்கப் பார்க்கிறோம் என்றோ

யோசிக்கலாம். இவ்வாறான சிந்தனை கூட நமக்குள் எழாதிருப்பதற்காக நாம் அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடுகிறோம். இன்னும் உண்மையான மார்க்கத்தை மக்களிடையே பரப்புவதில் சூழ்ச்சிக்காரர்களின் சூழ்ச்சியை விட்டும் அல்லாஹ்வின் உதவி ஒன்றையே பெரிதாக நினைக்கிறோம்.

**மார்க்கம் இஸ்லாம் மட்டுமே. ஆனால்....**

முஸ்லிம் வேதமான குர்ஆனில் இறைவன் இரு இடங்களில் மிகவும் தெளிவாக இஸ்லாத்தைத் தவிர வேறு எந்த மார்க்கமும் அங்கீகரிக்கப்பட் மாட்டாது என்றும், ஒவ்வொரு நபியும் தமது கூட்டத்தாருக்கு இஸ்லாத்தைத் தான் போதித்தனர் என்றும் கூறுகிறான்.

قُلْ آمَنَّا بِاللَّهِ وَمَا أُنزِلَ عَلَيْنَا وَمَا أُنزِلَ عَلَىٰ إِبْرَاهِيمَ وَإِسْمَاعِيلَ وَإِسْحَاقَ وَيَعْقُوبَ وَالْأَسْبَاطِ وَمَا أُوتِيَ مُوسَىٰ وَعِيسَىٰ وَالنَّبِيُّونَ مِن رَّبِّهِمْ لَا نُفَرِّقُ بَيْنَ أَحَدٍ مِّنْهُمْ وَنَحْنُ لَهُ مُسْلِمُونَ

وَمَن يَبْتَغِ غَيْرَ الْإِسْلَامِ دِينًا فَلَن يُقْبَلَ مِنْهُ وَهُوَ فِي الْآخِرَةِ مِنَ الْخَاسِرِينَ

**'(நபியே! அந்த யூதர்களுக்கும் கிறஸ்துவர்களுக்கும்) சொல்லும் அல்லாஹ்வையும், எங்களுக்கு இறக்கப்பட்டதையும் இப்றாஹீமுக்கும், இஸ்மாயீலுக்கும், இஸ்ஹாக்குக்கும், யஃகூபுக்கும், (அவர்களுடைய) புதல்வர்களுக்கு இறக்கப்பட்டதையும், மூஸாவுக்கும் ஈஸாவுக்கும் (மற்ற) நபிமார்களுக்கும் அவர்களுடைய இரட்சகனிடமிருந்து கொடுக்கப்பட்;டதையும் நாங்கள் விசுவாசம் கொண்டோம். அவர்களில் நின்றும் ஒருவருக்கிடையிலும் நாங்கள் பிரிக்க மாட்;டோம். இன்னும் அவனுக்கு நாங்கள் வழிப்பட்டவர்கள். இன்னும் யார் இஸ்லாமல்லாத (தமக்குரிய) மார்க்கத்தை தேடுகிறாரோ அவரில் நின்றும் (அது) ஒப்புக் கொள்ளப்பட மாட்டாது. இன்னும் அவர் மறுமையில் நஷ்டவாளர்களில் நின்றுமிருப்பார்.'**

-அல்குர்ஆன், சூறா ஆல இம்ரான் வசனம் 84, 85.

பார்த்தீர்களா! எல்லா நபிமார்களுடைய வழிகாட்டலின் மீதும் விசுவாசம் கொள்வதென்பதன் கருத்து இதுதான். அதாவது அவர்களனைவருமே இஸ்லாமிய மார்க்கத்தைத்தான் போதித்தனர் என்பதாம். இப்போது இன்னொரு வசனத்தைப் பாருங்கள்...

إِنَّ الدِّينَ عِندَ اللَّهِ الْإِسْلَامُ ۗ وَمَا اخْتَلَفَ الَّذِينَ أُوتُوا الْكِتَابَ إِلَّا مِن بَعْدِ مَا جَاءَهُمُ الْعِلْمُ بَغْيًا بَيْنَهُمْ ۗ وَمَن يَكْفُرْ بِآيَاتِ اللَّهِ فَإِنَّ اللَّهَ سَرِيعُ الْحِسَابِ

**'நிச்சயமாக அல்லாஹ்விடம் (அங்கீகரிக்கப்பட்ட) மார்க்கமானது இஸ்லாமாகும். இன்னும் வேதத்தை கொடுக்கப்பட்டவர்கள் தமக்கிடையேயுள்ள பொறாமையால் தங்களுக்கு அறிவு வந்த பின்னரேயன்றி விதர்ப்பமடையவில்லை. இன்னும் யார் அல்லாஹ்வுடைய அத்தாட்சிகளை ;மறைக்கிறாரோ திடனாக அவரிடம் அல்லாஹ் கணக்கு வாங்குவதில் தீவிரமானவன்'.** –அல்குர்ஆன்,சூறா ஆலஇம்ரான் வசனம் 18.19.

இந்த வசனத்தில் வேதக்காரர்களுக்கு வழங்கப்பட்ட மார்க்கமும் இஸ்லாம்தான் என்பது தெளிவாக்கப்படுகிறது. இருப்பினும் பின்னால் அதனை அவர்கள் மாற்றி விட்டனர். இதே வார்த்தையை குர்ஆன் வேறுவகையாகக் கூறுவதைப் பாருங்கள்...

وَمَا كَانَ النَّاسُ إِلَّآ أُمَّةً وَاحِدَةً فَاخْتَلَفُوا

**'இன்னும் மனிதர்கள் ஒரே சமூகமாகத்தான் இருந்தனர். பின்னர் வேறுபட்டனர்.'** – அல்குர்ஆன், சூறா யூனுஸ் வசனம் 19.

**எந்தப் பரிசுத்த வேதமும் மாற்றப்படவில்லை**

முஸ்லிம் வேதமான குர்ஆன் பல்வேறு இடங்களில் மிகச்சரியாக உண்மையான மார்க்கம் இஸ்லாம்தான் என்றும் உலகில் ஒவ்வொரு காலக்கட்டத்திலும் இஸ்லாமாகத்தான் இருந்ததென்றும் கூறுகிறது. இவ்வாறே எல்லா வேதச்சுவடிகளிலும் வேதங்களிலும் இஸ்லாமியப் போதனைகள்தான் இருந்தது. ஆனால் இன்று தவறானதொரு கருத்து முஸ்லிம்களிடையே என்னவெனில் முஹம்மத் நபியவர்களின் வருகைக்குப் பின் மற்ற நபிமார்கள் அனைவரும் கொண்டு வந்த மார்க்கம் மாற்றப்பட்டு விட்டது. இன்னும் குர்ஆன் வந்தபின் இதற்குமுன் அருளப்பட்ட எல்லா நபிமார்களின் வேதங்களும் வந்து விட்டன என்னும் கருத்து நிலவுகிறது.

இறைவன் நம்மனைவரையும் மன்னிப்பானாக. இந்த வார்த்தை நமது அடிப்படை நம்பிக்கைக்கே விரோதமான ஒன்றாகும். ஏனெனில் எல்லா நபிமார்கயும் அவர்களால் கொண்டுவரப்பட்ட வேதங்களனைத்தையும் விசுவாசிக்காமல் நாம் முஸ்லிமாகவே முடியாது. மேலும் எல்லா நபிமார்களுமே இஸ்லாமிய மார்க்கத்தை தான் கொண்டு வந்தனர் எனில், அது மாற்றப்பட்டு விட்டது என்று நாம் கூறுவதன் கருத்தென்ன? குர்ஆன் இறைவனுடைய எந்த வேதத்தையும் மாற்றவில்லை. மாறாக ஒவ்வொரு இடத்திலும் குர்ஆன் அந்த வேதங்களை உண்மையாக்கி வைக்கிறது. இன்னும் இத்தவறான கருத்துக்கு இரு காரணங்களை நாம் கூறலாம்.

எல்லா நபிமார்களின் மார்க்கமும் இஸ்லாம்தான். ஆனால் அவர்களால் நடைமுறைப்படுத்தப்பட்ட ஷரீஅத்துக்கள் (வாழ்வியல் நடைமுறைச் சட்டங்கள்) தான் வௌ;வேறு. இதுபற்றிய குர்ஆனின் வாக்கியமொன்றைப் பாருங்கள்.

لِكُلٍّ جَعَلْنَا مِنكُمْ شِرْعَةً وَمِنْهَاجًا

**'உங்களில் ஒவ்வொருவருக்கும் நாம் ஒரு ஷரீஅத்தையும் பாதைகளையும் வைத்தோம்.' –** அல்குர்ஆன் சூறா மாயிதா வசனம் 48.

மார்க்கத்திற்கும் நடைமுறை சட்டங்களுக்கும் இடையே வித்தியாசமுண்டு. இதில் மார்க்கம் என்பது **அடிப்படை நம்பிக்கைக்குரிய தொகுப்புக்கு சொல்லப்படும். அதாவது ஏகத்துவம்,** நபித்துவம், மறுமை, வானவர், வேதம், விதி போன்றவற்றை விசுவாசம் கொள்வதை குறிப்பிடலாம். இதில் எல்லா நபிமார்களுக்கும் அருளப்பட்ட வேதங்களில் ஒரே இஸ்லாமிய மார்க்கத்தின் போதனைகள் தான் இருந்தன. ஆனால் ஷரீஅத் ஒவ்வொரு நபிக்கும் ஒவ்வொரு விதமாக அமைந்திருந்தது. அதாவது மார்க்கத்தில் நடைமுறைப்படுத்தப்படும் வணக்க வழிபாடுகள், திருட்டு, விபச்சாரம் போன்ற நடைமுறை சட்டங்களுக்குரிய தண்டனைகள் போன்றவற்றை தான் ஷரீஅத்தென்று சொல்லப்படும். பின்னும் ஒரு ரஸூல் ஷரீஅத்தொன்றை கொண்டு வரும்போது அதற்கு முன் கொண்டுவரப்பட்டிருந்த ஷரீஅத்துகள் மாற்றப்;பட்டுவிடும். இதில் முஹம்மத் நபியின் ஷரீஅத்துடைய வருகைக்குப் பின் இதற்கு முன்னிருந்த எல்லா ஷரீஅத்துகளும் மாற்றப்பட்டு போய் அவை நடைமுறைகளுக்கு சாத்தியமற்றவைகளாக ஆக்கப்பட்டு விட்டன. மார்க்கம் மற்றும் ஷரீஅத் என்பதை விளங்கிக் கொள்வதில் ஏற்பட்ட கோளாறுதான் இப்படிப் பட்ட தவறான எண்ணத்திற்குக் காரணமாக அமைந்து விட்டது.

ஆதலால் முஸ்லிம் அல்லாதோரை நாம் அழைக்கும்முன் அவர்களுக்கு அவர்களின் உண்மையான மார்க்கத்தின் பக்கமாக அழைப்புக் கொடுக்க வேண்டும். எதை அவர்கள் விட்டுவிட்டார்களோ அதன் பக்கமாக அவர்களை நாம் அழைக்க வேண்டும். அதன்பின்பு தான் அவர்களை முஹம்மத் நபியின் ஷரீஅத்தின் படி செயலாற்ற அறிவுறுத்த வேண்டும். அதாவது முதலில் அவர்களுடைய மார்க்க நம்பிக்கையை, மாறுபட்டுள்ள கொள்;கையை செம்மைபடுத்த வேண்டும். அதன்பின் அவர்களின் வாழ்வியல் நடைமுறைகளை திருத்தியமைக்க முயல வேண்டும். முஹம்மத் நபியவர்களும் மக்காவில் முதன்முதலாக முஷ்ரிக்கீன்களான விக்ரஹ ஆராதனைவாதிகளிடம் நான் உங்களிடம் ஒரு புதிய மார்க்கம் எதையும் கொண்டு வரவில்லை. மாறாக இப்றாஹீம் நபியவர்களின் அஸல் மார்க்கத்தை தான் கொண்டு வந்துள்ளேன். எந்த மார்க்கத்தில் நீங்கள் இருப்பதாகக் கூறிக் கொண்டிருக்கிறீர்களோ அந்த மார்க்கத்தை தானென்று கூறினர்.

இனி இந்திய வேதங்களனைத்தும் மாற்றப்பட்டு விட்டன என்'பது இரண்டாவது குற்றச்சாட்டாகும். இப்பலமான சந்தேகத்திற்குரிய காரணம் என்ன வென்றால் இன்று இப்பரிசுத்த வேதங்களனைத்தும் அவைகளுடைய உண்மையான அஸல் நிலையில் இல்லாதிருப்பதுதான். இதற்குரிய விளக்கத்தைர வேதங்களின் தலைப்பில் **'பரிசுத்தம் எவ்வாறு?'** என்னும் பெயரில் முன்னால் பேசியிருக்கிறோம். அங்கே பாருங்கள்.

அடுத்து வேதங்களில் சத்தியமும் அசத்தியமும் கலந்து போய்விட்ட நிலையிலும் நாம் அதில் கலந்துவிட்ட அவ்விரண்டையும் தனித்தனியாக பாலுக்குப் பால் நீருக்கு நீர் என்பதை விளக்கிக் காட்டிடும் பொறுப்பும் கடமையும் நமக்குத்தான் இருக்கிறது. அதை நாம்தான் செய்ய வேண்டும்.

**முந்தைய வேதங்கள் மீது ஈமான் கொள்ளலின் கருத்து**

முஸ்லிம் வேதமான குர்ஆனில் வேதக்காரர்களை அரவரர் வேதப்பிரகாரம் செயலாற்ற வேண்டுமென அழைப்பு விடுக்கப்பட்டுள்ளது. இன்னும் அவ்வாறு செயல்படாதிருப்பதைக் குறித்து எச்சரிக்கையும் விடுக்கப்பட்டுள்ளது. எடுத்துக்காட்டாக...

وَكَيْفَ يُحَكِّمُونَكَ وَعِندَهُمُ التَّوْرَاةُ فِيهَا حُكْمُ اللَّهِ ثُمَّ يَتَوَلَّوْنَ مِن بَعْدِ ذَٰلِكَ ۚ وَمَا أُولَٰئِكَ بِالْمُؤْمِنِينَ

**'இன்னும் அவர்களிடம் தௌராத் இருக்கிறது. அதில் அல்லாஹ்வுடைய கட்டளையும் இருக்கிறது. இத்தகைய நிலையில் உம்மிடம் எவ்வாறு மத்தியஸ்துக்கு வந்து அதற்குப்பின் (உமது தீர்;ப்பை விட்டு அவர்கள்) பின் வாங்குகின்றனர்? மேலும் அவர்கள் விசுவாசிகளல்ல'**.

-அல்குர்;ஆன் சூறா மாயிதா வசனம் 43.

قُلْ يَا أَهْلَ الْكِتَابِ لَسْتُمْ عَلَىٰ شَيْءٍ حَتَّىٰ تُقِيمُوا التَّوْرَاةَ وَالْإِنجِيلَ وَمَا أُنزِلَ إِلَيْكُم مِّن رَّبِّكُمْ

**'வேதக்காரர்களே! தௌராத்தையம் இன்ஜீலையும் உங்களுடைய ரட்சகனிடமிநருந்து உங்களுக்கு இறக்கப்பட்டதையும் நீங்கள் நிலைநிறுத்தும் வரை அஸல் பக்கமாக நீங்கள் இல்லை.'**

-அல்குர்ஆன் சூறா மாயிதா வசனம் 68.

மேற்கண்ட வசனம் வேதக்காரர்களை அவர்களுடைய வேதக்கட்டளைப் படி செயலாற்ற வேண்டுமெனக் கூறுகிறதா இல்லையா? அவ்வாறு இல்லையாயின் இவ்விரு வசனத்திற்கும் வேறு என்ன கருத்தை நீங்கள் தருவீர்கள்? மேலும் தவ்ராத்திலும் இன்ஜீலிலும் கூறப்பட்டுள்ள எதை அவர்கள் நிலைநிறுத்த (செயல்படுத்த) வேண்டுமெனக் கட்டளையிடப்படுகிறதோ அதில் அவர்கள் உண்மையாகவே விசுவாசம் கொண்டு அவர்களால் இட்டுக்கட்டப்பட்டவைகளை விட்டுவிட்டு உண்மையான வேதவாக்கியங்களை மட்டும் செயல்படுத்துவார்களேயாயின் அவர்கள் விசுவாசிகளாக ஆகிவிடுவதோடு இப்போதுதான் இஸ்லாத்தையும், குர்ஆனையும் முஹம்மத் நபியையும் அவர்களால் ஏற்றுக் கொள்ளாமல் இருக்க முடியாது.

அடுத்து இப்போது எழுகின்ற கேள்வி என்னவென்றால் அந்த வேதங்களை எவ்வாறு சரிப்படுத்துவது என்பதுதான். ஏனெனில் அதில் எவையெவை உண்மையான இறைவாக்கு எவைஎவை புனையப்பட்டவை என்பதை நாம் பிரித்தெடுத்தாக வேண்டும். இதற்காக நாம்

கடுமையாக உழைக்க வேண்டும். நாம் முன்னர் கூறியது போல குர்ஆனுடைய வெளிச்சத்தில் அதிலுள்ள இறைவாக்குகளை பிரித்தெடுத்து அதன்பின் அவைகளை விசுவாசிக்குமாறு நாம் வேதக்காரர்களை அழைக்க வேண்டும். இன்னும் குர்ஆனில் வேதக்காரர்களை மட்டுமல்ல. திரும்பத் திரும்ப முந்தைய வேதங்களையும் விசுவாசிக்க வேண்டுமென கட்டளையிடப்பட்டுள்ளதையும் நாம் எண்ணிப் பார்க்க வேண்டும்.

كُلٌّ آمَنَ بِاللَّهِ وَمَلَائِكَتِهِ وَكُتُبِهِ وَرُسُلِهِ

**'இந்த விசுவாசிகளனைவரும் அல்லாஹ்வையும் அவனுடைய வானவர்களையும் வேதங்களையும் நபிமார்களையும் விசுவாசிக்கின்றனர்.'**

-அல்குர்ஆன் சூறா பகரா வசனம் 285.

கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். முந்தைய வேதங்களை விசுவாசித்தல் என்பதன் கருத்தென்ன? அன்றி அந்த வேதங்கள் மாற்றப்பட்டு விட்டன என்பதை குர்ஆன் மட்டும் குறிப்பிடவில்லை. மாறாக மாற்றியவர்களே அதை ஒப்புக் கொள்கின்றனர்.

மேலும் வேதங்கள் அனைத்தும் இறைவனால் இறக்கி அருளப்பட்டவை என நம்புதல்தான் வேதங்களை விசுவாசித்தல் என்பதாக இன்றுள்ளோர் எண்ணிக் கொண்டிருக்கின்றனர். முஸ்லிம் வேதமான குர்ஆன் இந்த வேதங்களனைத்தும் இறைவனால் அருளப்பட்டவை எனக் கூறப்பட்டிருந்தாலே அவைகளை விசுவாசிக்க வேண்டும் என்பது நம்மீது கடமையாகி இருக்கும். ஆனால் அதற்கு மாறாக திரும்பத் திரும்ப அவ்வேதங்களை விசுவாசிக்க வேண்டும் என குர்ஆன் கூறுவதன் கருத்தென்ன? இன்னும் அவைகளை நாம் விசுவாசிக்காத வரைநாம் விசுவாசிகளாகவும் முடியாதொனக் கூறப்படுவதன் கருத்து என்ன என்பதை நாம் யோசிப்போமாயின் அந்த வேதங்களிலுள்ள எந்தெந்தப் பகுதியை குர்ஆன் உண்மையாக்கி வைக்கின்றதோ அந்தப் பகுதியை நாம் விசுவாசிக்க வேண்டும் என்பதுதான் இதனுடைய கருத்தாகும். அப்போதுதானே அதன்படி செயலாற்றுங்கள் என வேதக்காரர்களுக்கு நாம் சொல்ல முடியும். இது இஸ்லாமியர்கள் மீது பர்ளுல் கிபாயா (சிலர்மீது மட்டும் கடமையா)கும். இன்னும் இதை நாம் செய்தால்தான் வேதக்காரர்களை உண்மையான இஸ்லாமிய மார்க்கத்தின் பக்கமாக நம்மால் அழைக்கவும் முடியும். இதுதான் குர்ஆன் மற்றும் முஹம்மத் நபியவர்கள் நமக்கு காட்டித் தரும் பாதையாகும்.

**கருத்து மோதல் ஏன்?**

குர்ஆன் வேதக்காரர்களை அவர்களுடைய வேத வாக்குப்படி நடக்காததைக் குற்றமென கூறுகிறது.

குர்ஆன் வேதக்காரர்களை தௌராத்', இன்ஜீல், போன்ற மற்றுமுள்ள முந்தைய வேதங்கள் அனைத்தையும் நிலைநிறுத்த வேண்டுமென அறிவுறுத்துகின்றது.

இன்னும் குர்ஆனே அவ்வேதங்கள் இட்டுக் கட்டப்பட்டு விட்டதாகவும் கூறுகிறது.

يُحَرِّفُونَ الْكَلِمَ مِن بَعْدِ مَوَاضِعِهِ

**'வேதத்தை அதனுடைய சரியான நிலையிலிருந்து மாற்றிக் கொண்டே இருக்கின்றனர்.'**

-அல்குர்ஆன் சூறா மாயிதா வசனம் 41 .

பின்னர் குர்ஆனே அவ்வேதங்களை உண்மையாக்கி வைக்கவும் சொல்கிறது.

نَزَّلَ عَلَيْكَ الْكِتَابَ بِالْحَقِّ مُصَدِّقًا لِّمَا بَيْنَ يَدَيْهِ وَأَنزَلَ التَّوْرَاةَ وَالْإِنجِيلَ

'(நபியே!) இவ்வேதத்தை அதற்கு முன்னாலுள்ள (வேதத்)தை உண்மையாக்கி வைக்கின்ற நிலையில் உம்மீது இறக்கி வைத்தான். இன்னும் (இதற்கு) முன் தௌராத்தையும் இன்ஜீலையும் ஜனங்களுக்கு நேர்வழி காட்டியாக இறக்கினான்.' –அல்குர்ஆன் சூறா ஆல இம்றான் வசனம் 3

قُولُوا آمَنَّا بِاللَّهِ وَمَا أُنزِلَ إِلَيْنَا وَمَا أُنزِلَ إِلَىٰ إِبْرَاهِيمَ وَإِسْمَاعِيلَ وَإِسْحَاقَ وَيَعْقُوبَ وَالْأَسْبَاطِ وَمَا أُوتِيَ مُوسَىٰ وَعِيسَىٰ وَمَا أُوتِيَ

النَّبِيُّونَ مِن رَّبِّهِمْ لَا نُفَرِّقُ بَيْنَ أَحَدٍ مِّنْهُمْ وَنَحْنُ لَهُ مُسْلِمُونَ

**'அல்லாஹ்;வையும் எங்களுக்கு இறக்கப்பட்டதையும் இப்றாஹீமுக்கும், இஸ்மாயீலுக்கும், இஸ்ஹாக்குக்கும், யஃகூபுக்கும் (அவர்களின்) மக்களுக்கும் இறக்கப்பட்டதையும் மூஸாவுக்கும் ஈஸாவுக்கும் கொடுக்கப்பட்டதையும் நபிமார்களுக்கு அவர்களுடைய ரட்சகனிடமிருந்து கொடுக்கப்பட்டதையும் நாங்கள் விசுவாசி;த்தோம். அவர்களில் ஒருவரையும் நாங்கள் வித்தியாசப்படுத்த மாட்டோம். இன்னும் நாங்கள் அவனுக்கே வழிப்படுகிறவர்கள் என்று கூறுங்கள்.'** – அல்குர்ஆன் சூறா பகரா வசனம் 136.

மேற்கண்ட வசனங்களில் எந்த இடத்திலும் கருத்து மோதலே காணப்படவில்லை. பின்னர் வெளிரங்கத்தில் இந்த வசனங்களுக்கிடையே கருத்து மோதல் இருப்பதாக நாம் ஏன் நினைக்கிறோம்? கொஞ்சம் பொறுங்கள். சில நபிமொழிகளையும் இதுகுறித்து பார்ப்போம். ஏனெனில் சில ஹதீஸ்கள் (நபி மொழிகள்) குர்ஆனில் சில வசனங்களுக்குரிய விளக்கங்களை தருவதில் நமக்குத் துணை புரிகின்றன.

**என்ன? நபி மொழிகளில் கருத்து மோதல் உண்டா?**

**'ஜாபிர் என்னும் நபித்தோழர் அறிவிக்கிறார் (ஒருமுறை) உமர் என்னும் நபித்தோழர் முஹம்மத் நபியவர்களிடம் தவ்ராத் வேதத்தின் சில பகுதிகளை கொண்டு வந்து நபியவர்களே! இவை தௌராத் வேதத்தின் சில பகுதிகளாகும் என்று சொல்ல, நபியவர்கள்**

**மௌனமாக இருந்தனர். பின்னர் உமர் அதை வாசிக்கத் துவங்கினர். அதுகேட்டு நபியவர்களின் முகம் மாறத் துவங்கியது. இதைப் பார்த்த அபூபக்கர் என்னும் தோழர் உமரை நோக்கி, உமரே! நீர் பார்;க்க முடியாதவை உம்மை தொலைந்து போக வைக்கின்றன. நீர் நபியவர்களின் முகத்தைப் பார்க்கவில்லையா? என்று சொல்ல உமரவர்கள் நபியவர்களின் முகத்தைக் கண்டு நான் அல்லாஹ்வின் கோபத்திற்கும் அவனுடைய நபியின் கோபத்திற்கும் இலக்காகுவதை விட்டும் பாதுகாப்புத் தேடுகிறேன். நாங்கள் அல்லாஹ்வை ரட்சகனென்றும், இஸ்லாத்தை மார்க்கமென்றும், முஹம்மதை நபியென்றும் திருப்தி கொண்டிருக்கிறோம் என்று சொல்ல, அது கேட்ட நபியவர்கள், எவனுடைய கைவசம் எனது ஆன்மா இருக்கிறதோ அவன் மீதாணையாக ஒருவேளை மூஸா உங்களுக்கு மத்தியில் வெளிப்பட்டால் நீங்கள் அவரை பின்பற்றி என்னை விட்டு விடுவீர்களாயின், திடனாக நீங்கள் வழிகெட்டுப் போய்விடுவீர்கள். ஒருவேளை ஈஸா உயிரோடிருந்து என்னுடைய காலத்தை அவர் பெற்றுக் கொள்வாராயின் நிச்சயமாக அவர் என்'னைத்தான் பின்பற்றுவார்.'** –நூல்: மிஷ்காத், பாடம் பாபு கிதாபுல் இல்ம்.

அதாவது பனீ இஸ்ரவேலர்களிடம் எந்தக் கல்வியுள்ளதோ அதை அவர்களிடமிருந்து நீங்கள் கேட்டுத் தெரிந்து மற்றவர்களுக்கு அதை அறிவித்து விடுங்கள் என்பதாம். இதன் நடைமுறைக்குரிய ஒரு உதாரணமாகவது, ஸல்மான் பார்ஸி என்னும் நபித்தோழர் முந்தைய சில கிறிஸ்துவர்களிடமிருந்து தான் இஸ்லாத்தை பற்றியும் முஹம்மத் நபியைப் பற்றியும் அவர்களின் வேதத்தில் அறிவிக்கப்பட்டிருந்த அறிவிப்பைக் கேட்டு தனது ரஸூலைத் தேடி அவர் மதீனாவுக்கு வந்து சேர்ந்தார். அவர் நபியவர்கள் முன் வருகை தந்து தௌராத்திலும் இன்ஜீலிலும் உள்ள நபியவர்கள் பற்றிய முன்னறிவிப்புக்;களை கூறியபோது நபியவர்கள் அதைக் கேட்டு அகமகிந்ததோடு எல்லா தோழர்களையும் ஒன்று திரட்டி அவர்களுக்கும் அம்முன்னறிவிப்புக்களை நபியவர்களின் விருப்பத்திற்கிணங்க சொல்லிக் காட்டுமாறு பணிக்கப்பட்டார்.

அடுத்து இன்னோர் நபிமொழியைப் பாருங்கள். இது முந்தைய வேதத்தின் சட்டமொன்றை நடைமுறைப்படுத்தியதை நமக்கு காட்டித் தருகிறது.

**'மதீனாவைச் சேர்ந்த யூதர்கள் ஒருமுறை** (நபியவர்களை களங்கப்படுத்த வேண்டுமென்று **எண்ணி)** நபியவர்களிடம் வந்து, எங்களில **ஒரு ஆணும்,** பெண்ணும் கூடா உறவு கொண்டு **விட்டனர். ஆகையால் அதுபற்றிய உங்களின் மார்க்கச் சட்டமென்ன? என்று கேட்க, அதற்கு நபியவர்கள், உங்களுடைய தௌராத் வேதத்தில் அதற்குரிய சட்டமென்ன? என்று கேட்க, அதற்கவர்கள் நாங்கள் அவர்களை கேவலப்படுத்தி சவுக்கால் அடித்து விட்டுவிடுவோமென்று கூறினர். அது கேட்ட அப்துல்லாஹ் பின் ஸலாம் என்பார், நீங்கள் பொய் சொல்கிறீர்கள். தௌராத் வேதத்தில் அவர்களை வெட்ட வேண்டுமென்று கூறப்பட்டுள்ளது. ஆகையால் நீங்கள் தௌராத் வேதத்தைக் கொண்டு வந்து காட்டுங்கள் என்று கூற, அவர்கள் தௌராத் வேதத்தை திறந்து அக்குறிப்பிட்ட சட்டமுள்ள பகுதியை மட்டும் தங்களின் கைகளால் மறைத்துக் கொண்டு மீதமுள்ள முன்பின் வாக்கியங்களை**

**மட்டும் வாசித்துக் காட்டினர். இதை அப்துல்லாஹ் அவர்கள் தெரிந்து கொண்டு உங்களுடைய கைகளை அகற்றுங்கள் என்று சொல்ல, அங்கே வெட்ட வேண்டும் என்பதற்குரிய வசனமிருந்தது. வேறுவழியின்றி முடிவில் அவர்கள் அதை ஏற்றுக் கொள்ள நபியவர்கள் கட்டளைப்படி விபச்சாரம் செய்தவர்கள் வெட்டப்பட்டனர்.**'- தப்ஸீர் இப்னு கதீர்.

பார்த்தீர்களா! குர்ஆனில் இருப்பதைப் போன்ற ஒரு சட்டம் தான் தௌராத்திலும் இருக்கின்றது. இன்னும் அந்த யூதர்களுடைய வேதத்தில் கூறுப்பட்டுள்ள சட்டத்திற்கு ஒப்பவே நபியவர்களும் தீர்ப்பளிக்கின்றனர். இப்போது நீங்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். மேற்கண்ட மூன்று நபிமொழிகளிலும் என்ன கருத்து வேறுபாடு இருக்கிறது?

**உண்மை நிலையை பாருங்கள்**

முதல் நபிமொழியிலுள்ள உண்மை நிலையை நாம் புரிந்து கொள்ள வேண்டும். அதாவது மதீனத்து வாழ்க்கையின் துவக்க காலகட்டத்தில நபித்தோழர்கள் கல்வியறிவில் அவ்வளவாக முதிர்ச்சி பெற்றிருக்கவில்லை. அதுபோது உமரவர்கள் கல்வியைத் தேடும் ஆர்வத்தில் ஒரு கல்விச் சாலைக்குச் சென்று கல்வியை கேட்டதோடு அதை குறிப்பும் எடுத்து வந்தனர். அங்கிருந்து தான் தௌராத் வேதத்தின் ஒரு பகுதியை நபியவர்களிடம் கொண்டு வந்து வாசித்துக் காட்ட, அதைக் கேட்ட நபியவர்களின் முகம் மாற இப்போது முஹம்மத் நபியவர்களின் மார்க்கத்தை மட்டும்தான் பின்பற்ற வேண்டுமேயன்றி மற்ற வேதக்கல்விகளை கற்பது அதில கற்பனைகள் கலக்கப்பட்டிருந்த காரணத்தால ஆபத்தாக முடியுமென்று விளக்கப்பட்டது.

அதன்பின் மதீனத்து வாழ்க்கையின் இறுதிக் காலகட்டத்தில்தமது தோழர்கள் குர்ஆனுடைய வெளிச்சத்தைக் கொண்டு சரியானதையும் தவறானதையும் பிரித்தறிந்து கொள்ளும் ஆற்றலுடையவர்களாகி விட்டார்களென்;று தெரிய வந்தபோது நபியவர்கள் தௌராத்திலும் இன்ஜீலிலும் உள்ள குர்ஆன் உண்மைப்படுத்தும் வேத வாக்கியங்களை பிரதியெடுக்க அனுமதித்தனர்.

இதேபோல் இரண்டாவது நபிமாழியும் அதே காலக்கட்டத்தை சார்ந்ததுதான். அடுத்து மூன்றாவது நபிமொழி சம்பவத்தில் ஒருவேளை தனது மார்க்கத்தை உண்மைப் படுத்திக் காட்டவேண்டும் என்று எண்ணியிருந்தால் தௌராத் வேதம் குறிப்பிடும் அதே சட்டத்தை தம்முடைய வேதமும் உண்மைப்படுத்துகிறது என்பதை எடுத்துக் காட்டி ஆதாரப்படுத்தி இருக்க வேண்டும். ஆனால் அவ்வாறு செய்யவில்லை. மாறாக புரட்டப்படாத அப்பரிசுத்த வேதக் கருத்துக்களை நடைமுறைப்படுத்த வேண்டுமெனக் குர்ஆன் இறக்கப்பட்ட பின்னர் அந்த யூதர்களுக்கு எச்சரிக்கை விடுக்கபடுகிறது. இனி அவர்கள் அவற்றை எதுவரை நடைமுறை படுத்தவில்லையோ அதுவரை அவர்கள் தமது அஸலின் பக்கமாக திரும்பவே மாட்டார்கள். இன்னும் குர்ஆன் உண்மைப்படுத்துகின்ற அந்தப் பகுதியைத்தான் இஸ்லாமியர்களும் விசுவாசிக்க வேண்டு;ம் என்று குர்ஆனும் கூறுகிறது.

## அத்தியாயம் பதினெட்டு

**அழைப்பு விடுக்கும் முறை**

**என்ன? இந்துக்கள் வேதக்காரர்களா?**

இனி இந்துக்களிடமுள்ள வேதங்களில் விண்ணுல வாக்குகள் உண்டென்பதை தெரிந்து கொண்ட நாம், இந்துக்களுக்கும் அஹ்மத் நபிக்கும் விண்ணுலகிலேயே தொடர்புண்டு என்பதையும் தெரிந்து கொண்ட நாம், அவர்கள் ஆதம் மற்றும் நூஹ் நபியின் சமூகத்தினர் தான் என்பதையும் விளங்கிக் கொண்ட நாம் இந்துக்களை '**வேதக்காரர்கள்**' என்று கூறலாமா? என்னும் கேள்வி தன்னிச்சையாகவே எழுகிறதல்லவா? இப்போது இக்கேள்வியின் மதிப்பு முன்னைவிட இன்னும் பன்மடங்கு அதிகமாகி விட்டது. மேலும் நமுது மார்க்கப் பெரியோர்களில் பலர் இந்துக்களை குறைந்த பட்சக் கண்ணோட்டத்தில் வேதக்காரர்கள் என்னும் தரத்தைத் தான் தந்து வந்துள்ளனர். அதாவது...

**'முஸ்லிம்கள் இவ்விசயத்தில் மிகவும் பின்தங்கியுள்ளனர். இருப்பினும் அரபியர் இந்துக்களை காபிர் மற்றும் முஷ்ரிக்குகளுடைய தரத்தில் சேர்க்காது சந்தேகக் கண்ணோட்;டத்தில் அவர்களுக்கு வேதக்காரர்களின் தரத்தை தந்துள்ளனர். இதுபற்றி, 'அரப் ஹிந்த் கே தஅல்லுகாத்' என்னும் நூலில் அதன் ஆசிரியர் பெரும் விவாதமொன்றையே நடத்தியுள்ளார்.'**

-நூல்: இஸ்லாம் கே தூஸ்ரே மதாஹிப் அவ்ர் அஹ்லெ மதாஹிப் கீ ஹைஸியத், பாகம் 3, பக்கம் 178.

**'சிந்துப் பகுதியின் மிகப்புராதனமான வரலாற்று நூலான 'சச்நாமா' என்னும் பார்ஸி மொழி நூலில் கூறப்பட்டுள்ளதாவது, முஹம்மத் பின் காசிம் என்பார் பிராமணார் வசிக்கும் (சிந்து) பகுதியை சேர்ந்தவர்களின் கோரி;க்கையை ஏற்றுக் கொண்டதோடு சிந்துப் பகுதியிலுள்ள இஸ்லாமிய ஆட்சியில், ஈராக்,மற்றும் ஸாமிலுள்ள யூதர்களுக்கும் கிறிஸ்துவர்களுக்கும் வழங்கப்பட்டிருந்த குடியுரிமையைப் போன்று அவர்களுக்கும் வழங்கினார்.'**

-நூல்: சச்நாமா, பாகம் 1, பக்கம் 186.

**'பிலாதரியில் இந்தியாவிலுள்ள விகரஹ ஆலயங்கள் யூத, கிறிஸ்துவர்களின் தேவாலயம்; மற்றும் மஜூஸிகளின் நெருப்ப கோவிலை போன்றவைகளெனெக் கூறப்பட்டுள்ளது.'** –நூல்: சச்நாமா, மஆரி்ஃப் பக்கம் 186.

இப்போது சொல்லுங்கள்;. இந்துக் கூட்டத்தாரை நாம் காபிர் மற்றும் முஷ்ரிக்குகளின் தரத்தில் இணைக்கலாமா? அல்லது வேதக்காரர்களென்று கூறலாமா? எனில், இது மிகவும் அவசியமானதொரு கேள்வியாகும். ஏனெனில் ஒவ்வொரு கூட்டத்தாரோடும் பழகுவதற்கும் தொடர்பு கொள்வதற்கும் குர்ஆனில் ஒவ்வோர் விதமான கட்டளை பிறப்பிக்கப்பட்டுள்ளது. இனி அதைவிட முக்கியமான விஷயம் என்னவென்றால் ஒரு கூட்டத்தாரை நல்வழிப்படுத்தும் முறை குர்ஆன் மற்றும் நபிமொழியின் ஒளியில் எப்போது சாத்தியமாகும் எனில்

அக்குறிப்பிட்ட கூட்டத்தாரிடம் பயன்படுத்தப்படும் குர்ஆனின் இணக்கத்திற்குரிய கல்வி இருந்தால் மட்டுமே சாத்தியமாகும்.

அடுத்து நாம் கவனிக்க வேண்டிய மற்றோர் முக்கியமான விஷயம் என்னவெனில், முஷ்ரிக்கீன்களெ (இணை வைப்போரெ)ன்று வேதக்காரர்களையும் குறிப்பிடப்படுகிறது. யூதர்கள் உஸைர் நபியையும், கிறிஸ்துவர்கள் ஈஸா நபியையும் இறைவனுடைய குமாரனாக ஆக்கிய பின் முஷ்ரிகீன்களுடைய வரிசையில் இவர்களும் இணைந்து விடுகின்றனர். இதேநிலை தான் காபிர்களைப் பற்றியதுமாகும். இதுபற்றி முஸ்லிம் வேதமான குர்ஆன் கூறுவதைப் பாருங்கள்...

لَّقَدْ كَفَرَ الَّذِينَ قَالُوا إِنَّ اللَّهَ ثَالِثُ ثَلَاثَةٍ

**'திடனாக அல்லாஹ்வை மூன்றில் மூன்றாமானவன் எனக் கூறினார்களே அவர்கள் நிச்சயமாக காபிர்களாகி விட்டார்கள்.'**

-அல்குர்ஆன் சூறா மாயிதா வசனம் 73.

இனி '**குப்ரு**' என்பதன் அர்த்தம் '**நிராகரித்தல்**' என்பதாம். இஸ்லாமிய மார்க்கத்தின் அடிப்படைக் கொள்கை எதை மறுத்தாலும் மறுப்பவர் குப்ருக்கு உரியவராகி விடுவார். ஆக சில குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் முஸ்லிம்களும் குப்ரை சமீபித்து விடுவதுண்டு. இதுபற்றிய ஒன்றை நபிமொழி பாருங்கள்...

**'யார் வேண்டுமென்றே தொழுகையை விட்டாரோ அவர் குப்ரை செய்து விட்டார்.'**

என்று கூறப்படுவதால் ஷிர்க்கைப் போன்று குப்ரும் பல்வேறு நிலைகளை கொண்டதென்று நாம்தெரிந்து கொள்ளலாம். மேலும் எந்தவொரு காரணத்தை மையப்படுத்தி உலகிலுள்ள எல்லா மதவாதிகளும் குப்ரை சமீபிக்காது இருப்பதில்லை. ஆயினும் அதற்க தௌபா (பாவமன்னிப்பு) உண்டு. இனி 'காபிரே முத்லக்' (முழுமையான காபிர்) என்னும்; நிலைக்கு ஒரு கூட்டத்தாரை நாம் இணைக்க முடியுமென்றால் அது 'முல்ஹித்' (நாஸ்திகர்)களின் கூட்டத்தைக் குறிப்பிடலாம். காரணம் இவர்களிடம் இறைவனைப் பற்றிய எந்த வடிவமும் (அறிவும்) இல்லையென்பதே. இதற்கு மாற்றமாக எத்தனைக் கூட்டங்கள், சமூகங்கள் இருக்கின்றதோ அவை ஏதாவது தரத்தில் குப்ரை சமீபிக்கத்தான் செய்கின்றன. இருப்பினும் அவர்களை காபிர்களென்று சொல்ல முடியாது.

அடுத்து இந்துக்களிடம் ஷிர்க்கின் தாக்கம் இருந்தபோதிலும் அவர்களிடம் இறைவனைப் பற்றிய ஒரு வடிவமுண்டு. அத்துடன் வேதத்துடன் மறைவாகவோ அல்லது அவர்களையும் அறியாமலோ ஒரு தொடர்பும் அவர்களுக்கு உண்டு. நபிமார்களை பற்றிய அறிவு சிதைந்துபோன நிலையிலும் ஏதாவது ஒரு வடிவத்தில் அவர்களைப் பற்றிய அறிவு அவர்களிடம் காணப்படுகிறது. இவ்வாறே இறப்புக்குப் பின் ஒன்றுமேயில்லை என நாஸ்திகவாதிகள் கூறுவதைப் போல இவர்கள் கூறுவதில்லை. மாறாக இந்துக்களிடம் அந்த நம்பிக்கை புனர்ஜென்மம் என்னும் பெயரில் சிதைந்து போய் காணப்படுகிறது. அவ்வாறின்றி

இவர்களை முழுமையான காபிரெனக் கூறலாமா? என்றால் அதில் இந்து சமூகத்தை எக்காரணம் கொண்டும் நம்மால் இணைக்கவே முடியாது. இந்நிலையில் அவர்களை நாம் வேதக்காரர்கள் என்று சொல்லலாமா? எனில் அதுவும் முடியாதென்று தான் நாம் சொல்ல வேண்டும்.

காரணம் ஒவ்வொரு தரப்பாருக்கும் இறைவனுடைய சமூகத்திலிருந்து ஒரு நபி அனுப்பப்பட்டுள்ள போது யூத, கிறிஸ்துவர்களை மட்டும் வேதக்காரர்களென்று கூறப்படுவதற்குரிய காரணம், யார் இப்போதும் வேதத்துடன் (அது மாற்றப்பட்டிருந்தாலும் சரியே) தொடர்பு வைத்திருக்கிறார்களோ, அத்துடன் அத் தொடர்பு அநடத வேதத்தின் நபியைக் கொண்டு இறுக்கமாக்கப்பட்டிருந்தால் அந்த நபியையும் வேதத்தோடு சேர்த்து யார் நம்பிக்கை கொண்டிருக்கிறார்களோ அவர்களை வேதக்காரர்களென்று தான் குர்ஆன் கூறுகிறது. இன்னும் இந்த நிலைக்குள் இந்துச் சமுதாயம் முழுமையாக இன்னும் வராததால் அவர்களிடம் வேதமிருந்தும் அதனோடுள்ள தொடர்பு முறிந்து போயிருப்பதால் அத்துடன் அவர்களுடைய நபி அவதாரம் என்னும் சிலை வடிவத்திற்குள் காணாமல் போய்விட்டிருப்பதால் அவர்களை வேதக்காரர்கள் என்று நாம் சொல்ல முடியாது.

**வேதக்காரர்கள் அல்ல. உம்மிய்யீன்கள்**

இந்துக்களை வேதக்காரர்களென்று நம்மால் குறப்பிட இயலாதென்ற போதிலும் அவர்களுக்காக எந்தப் பெயரை குர்ஆனுடைய வழக்கத்திலிருந்து நாம் தேடி எடுப்பது என்னும் கேள்விக்கு விடை காண வேண்டுமாயின் நாம் 1400 ஆண்டுகளுக்கு முன்னால் கொஞ்சம் பின்னோக்கி செல்ல வேண்டும். ஏனெனில் நமக்கொரு சமூகம் கிடைக்கிறது. அது தன்னை ஒரு நபியுடைய (இப்றாஹீம்) உம்மத்தென்றும் சொல்லிக் கொண்டிருந்தது. அதே நேரம் அந்த நபியுடைய எந்தவொரு வேதமும் (இப்றாஹீம் நபியவர்களுக்கு வழங்கப்பட்ட 110 வேதச் சுவடிகள்) அக்கூட்டத்தாரிடம் இல்லை. அதாவது வேதத்தோடு இருந்த தொடர்பு முறிந்து போய் விட்டிருந்தது. அச்சமூகத்தை '**உம்மிகளின்**' சமூகமென்று குர்ஆன் கூறுகிறது.

இனி '**உம்மீ**' என்பதற்கு '**எழுதப்படிக்கத் தெரியாதவர்**' என்பது அர்த்தமல்ல. இந்த அர்த்தத்தில் இப்பதம் பின்னால் பேச்சு வழக்கில் பயன்படுத்தப்பட்டு விட்டது.

**'ஸுஜாஜ்' என்பார் இதற்கு விளக்கமளிக்கும் போது 'உம்மீ' என்பார் அராபியக் கூட்டத்தாரின் குணநலன்களை கொண்டவருக்குச் சொல்லப்படும். எழுதப்படிக்கத் கல்லாதிருத்தல் என்பது அராபியரின் குறிப்பிட்ட ஓர் குணமாகும். வேறு சில அறிஞர்கள் உம்மீ என்பதற்கு 'உம்மு' என்பதாகத் திருப்புகின்றனர். அதவாது எழுதப்படிக்கத் கல்லாதிருத்தல் என்பது எப்போது கொள்ளப்படுகிறது எனில் எந்த நிலையில் அவனுடைய தாய் அவனைப் பெற்றெடுத்தாளோ அந்த நிலையென்று உம்மீ என்பதை தாயோடு ஒப்பு நோக்கப்படுகிறது. இமாம் பாகிர் என்பார் உம்மீ என்பதை 'உம்முல் குரா'(மக்கா)வின் பக்கமாக தொடர்பு படுத்துகின்றனர். ஏனெனில் மக்காவாசிகள் அதாவது குறைஷிகள் எழுதப்படிக்கக்**

**கற்காதவர்களாக இருந்ததால் அவர்கள் உம்மீ என்று அழைக்கப்பட்டனர்.'** –நூல்: லுகாத்துல் குர்ஆன்.

இந்துக்களும் 1400 ஆண்டுகால அப்பழைய சமூகத்தாரைப்போல **'அஹ்லெ கிப்லாக்களாக'** (ஒரே இடத்தை முன்னோக்குபவர்களாக)த்தான் இருக்கின்றனர். அவர்களுடைய மத அனுஷ்டானங்கள் எல்லாவற்றிலும் கிப்லாவோடு தொடர்புடைய ஹஜ்ஜுக்குரிய கடமைகளின் கீற்றுக்கள் காணப்படுகின்றன. இன்னும் அவர்களின் அனைத்து புராதனமான கோவில்களும் கிப்லாவை முன்னோக்கியே கட்டப்பட்டுள்ளன. இன்னும் உம்மியை பற்றிய விளக்கத்தை குர்ஆனில் நாம் தேடுவோமாயின் நமக்கு இந்தப் பதங்கள்தான் கிடைக்கின்றன. அதாவது....

وَمِنۡهُمۡ أُمِّيُّونَ لَا يَعۡلَمُونَ ٱلۡكِتَٰبَ إِلَّآ أَمَانِيَّ وَإِنۡ هُمۡ إِلَّا يَظُنُّونَ

**'இன்னும் அவர்களில் (இன்னொரு சமூகத்தார்) உம்மிகளும் இருக்கின்றனர். அவர்கள் வேதத்தையே அறிய மாட்டார்கள். இன்னும் அவர்கள் (உறுதியற்ற வெறும் யூகங்களை) மட்டும் உண்ணுகிறார்களேயன்றி (வேறொன்றும்) இல்லை.'** –அல்குர்ஆன் சூறா பகரா வசனம் 78.

மேற்கண்ட வசனத்தில் குறித்துக் காட்டப்படும் விஷயங்களனைத்தும் முழுக்க முழுக்க நூறு சதவீதம் இந்துச் சமூகத்திற்குப் பொருத்தமாக அமைகிறதென்பது கவனிக்கப்பட வேண்டிய ஒன்றாகும். இன்னும் உம்மிய்யீன்கள் யார் என்பதை விளக்கிக் காட்டுகின்ற விஷயத்தில் முஸ்லிம் வேதமான குர்ஆன் அவர்கள் வேதக்காரர்கள் இல்லையென்பதையும் மாறாக அவர்கள் ஒரு தனிக் கூட்டத்தார் என்பதையும் தெளிவாகக் காட்டித் தருகிறது. மேலும் குர்ஆனில்...

وَقُلۡ لِّلَّذِينَ أُوتُوا ٱلۡكِتَٰبَ وَٱلۡأُمِّيِّـۧنَ ءَأَسۡلَمۡتُمۡ

**'குர்ஆனில் வேதத்தை கொடுக்கப்பட்டவர்களிடமும் உம்மிகளிடமும் நீங்கள் முஸ்லிமானீர்களா என்று கேளும்'**

.-அல்குர்ஆன் சூறா ஆல இம்றான் வசனம் 19.

என்று கூறுவதால் (Believers) அதாவது இறைவன் மீது ஏதாவதோர் வடிவத்தில் நம்பிக்கை கொள்வோரை குர்ஆன் இரு பிரிவாகப் பிரிக்கிறது. அதிலொன்று, வேதக்காரர்கள் மற்றொன்று உம்மியீன்கள். இன்னும் உம்மியீன்களை பற்றிய சில குறிப்புக்களை குர்ஆனும் அறிஞர்களும் எப்படித் தருகிறார்களென்று பாருங்கள்.

· அவர்கள் வேதங்களைப் பற்றி அறியாதவர்கள். இன்னும் அவர்களுடைய வேதங்களைப் பற்றிய அறிவு என்பது அவர்களிடம் யூகம் மற்றும் வெறும் அனுமானமாகத்தான் இருக்கிறது.

· பழமையான அரபியக் கூட்டத்தாரைப் போலவே இவர்களும் ஒரே கிப்லாவை முன்னோக்குகிறவர்கள். அன்றி உம்முல் குராவுடன் (மக்கா) மிக நெருக்கமாக தொடர்பும் உடையவர்கள். அதாவது அவர்களின் வணக்க வழிபாடுகளில் கஃபாவோடு பூட்டு சாவிக்குள்ள தொடர்பை போன்றதொரு பிணைப்பு அவர்களுக்கு இருக்கின்றது.

இன்னும் நாம் யோசித்துப் பார்க்கதாவரை இன்று இவ்வுலகில் இந்துச் சமூகமொன்றைத் தவிர வேறு எந்தக் கூட்டமும் 'உம்மீ' என்னும் நிலைக்கு உட்படுவதாகத் தெரியவில்லை. மறுபடியும் நாம் குர்ஆனை கவனிப்போமாயின் அதில் உம்மியீன்கள் என இரு கூட்டத்தாரை நமக்கு காட்டித் தரப்படுகிறது. அதிலொன்று முஹம்மத் நபியவர்களின் தூதுத்துவத்தை உலகில் பரப்புவதற்காக தேர்ந்தெடுக்கப்பட்ட 1400 ஆண்டுகளுக்கு முன் அரபு மண்ணில் வாழ்ந்த முதல் கூட்டம். அக் கூட்டத்தாரிடையே தான் முஹம்மத் நபியவர்கள் தோன்றினர். இன்னொன்று, பின்னால் வரவிருக்கும் கடைசிக் கூட்டமாகும். இக் கூட்டத்தாரைப் பற்றி அவர்கள் இஸ்லாத்தின் பால் திரும்புவார்கள் என்பதை குர்ஆனில் பல்வேறு இடங்களில் குறிப்பிடப்பட்டிருப்பதோடு நபிமொழியின் விளக்கங்களும் அக்கூட்டம் இந்திய மண்ணில் வாழ்ந்;து வரும் இந்துச் சமூகம்தான் என்பதையும் நமக்குக் கோடிட்டுக் காட்டுகிறது.

**அழைப்பின் முறை நபிமொழியில்**

நபிமொழிகளில் இக் கூட்டத்தாருக்கு அழைப்பு விடுக்கும் முறையை நமக்கு விளக்கிக் காட்டப்பட்டுள்ளது. கீழ்காணும் நபிமொழியைப் பாருங்கள்...

**'அப்துற் றஹ்மான் பின் அலா ஹழ்ரமி என்பார் கூறுகிறார், எனக்கு ஒரு மனிதர் முஹம்மத் நபியவர்கள் கூறியதாக சொன்னார் திடனாக இந்த சமூகத்தின் இறுதிக்காலத்தில் ஒரு கூட்டம் வரும். அவர்கள் பெறுகின்ற நன்மை முந்தைய காலத்தை சேர்ந்தவர்(நபித் தோழர்)களுக்கு ஒப்பாக இருக்கும். அவர்கள் நன்மையை ஏவி தீமையை தடுப்பார்கள். இன்னும் குழப்பவாதிகளை எதிர்த்து யுத்தமும் புரிவார்கள்.'**-நூல்: பைஹகீ, பாடம்-ஸவாபு ஹாதிஹில் உம்மஹ்.

**'அபூஹுறைறா என்னும் நபித்தோழர் அறிவிக்கிறார், அவர்கள் முஹம்மத் நபியவர்களிடம், நபிகளாரே! எங்களைவிட சிறந்தவர்கள் வேறு யாருமுண்டா? ஏனெனில் தங்களின் கரம் பற்றி தங்களுக்கு வழிப்படுவதாக வாக்குத் தந்தவர்கள் நாங்கள். இன்னும் தங்களோடு இணைந்து ஜிஹாத் (அறப்போர்) செய்தவர்கள் நாங்கள் என்று சொல்ல, அதற்கு நபியவர்கள், ஆம். உங்களுக்குப் பின்னால் ஒரு கூட்டம் வரும். அவர்கள் என்னை விசுவாசிப்பார்கள். இதில் அவர்கள் என்னைப் பார்த்திருக்கக் கூட மாட்டார்கள் என்றார்கள்.'** –நூல்: மிஷ்காத், பாடம் ஸவாபு ஹாதிஹில் உம்மஹ்.

**'அம்ர் பின் ஷுஐப் என்பார் தமது தந்தையை கொண்டும் அவர் தமது தந்தையைக் கொண்டும் அறிவிக்கிறார், ஒருமுறை முஹம்மத் நபியவர்கள் தமது தோழர்களை நோக்கி, விசுவாசத்தின் அடிப்படையில் எந்த சிருஷ்டிகள் உங்களுடைய பார்வையில் மிகவும் அதிசயக்கத்தக்க வண்ணம் உங்களின் நினைவிலுள்ளவர்கள் என்று கேட்க, அதற்கு**

**தோழர்கள், வானவர்கள் என்றனர். அதுகேட்ட நபியவர்கள், அவர்கள் தமது இறைவனை சமீபித்திருக்கும்போது அவர்கள் ஏன் விசுவாசிக்க மாட்டார்கள்? (இதில் அதிசயிக்க என்ன இருக்கிறது) என்று திருப்பிக் கேட்க, அதற்கந்த தோழர்கள், நபிமார்கள் என்றனர். அது கேட்ட நபியவர்கள், அவர்களுக்கு வஹீ (தெய்வ அறிவிப்பு) இறங்கிக் கொண்டிருக்கும் நிலையில் அவர்கள் ஏன் விசுவாசிக்க மாட்டார்கள்? (இதில் அதிசயப்பட என்ன இருக்கிறது) என்று திருப்பி கேட்க, அதற்கு தோழர்கள் நாங்கள் தான் என்றனர். அதுகேட்ட நபியவர்கள், நான் உங்கள் மத்தியில் இருக்கும் போது நீங்கள் ஏன் விசுவாசிக்க மாட்டீர்கள்? என்று கேட்டனர். அறிவிப்பாளர் கூறுகிறார், அதன்பின் முஹம்மத் நபியவர்கள், ஆம் நிச்சயமாக எல்லா சிருஷ்டிகளிலும் விசுவாசத்தின் அடிப்படையில் அதிசயக்கத்தக்க உறுதி வாய்ந்த ஒரு கூட்டம் வரும். அது எனக்குப் பின்னால் வரும். அவர்கள் சில வேதச்சுவடிகளை கிடைக்கப் பெறுவார்கள். அந்த வேதச்சுவடிகளில் கிதாப் (குர்ஆன்) உள்ளது. அதில் என்ன உள்ளதோ அதன் மீது விசுவாசம் கொள்வார்கள்.'** –நூல்: மிஷ்காத், பாடம் ஸவ் பாபு ஹாதிஹில் உம்மஹ்.

மேற்கண்ட நபிமொழியில் **'கிதாப்'** என்பதற்கு குர்ஆன் என்பது கருத்தாகும். அந்த வேதச் சுவடிகளில் அவர்களுக்கு குர்ஆன் தெரியும் என்பதாம். இதை உறுதிப்படுத்துகின்ற குர்ஆனுடைய வசனமொன்றைப் பாருங்கள்...

وَإِنَّهُ لَفِي زُبُرِ الْأَوَّلِينَ

**'இன்னும் திடனாக இது (குர்ஆன்) முந்தைய வேதங்களில் உள்ளதாகும்.'**

-அல்குர்ஆன், சூறா ஷுஅரா, வசனம் 196.

பார்த்தீர்களா! மேற்கண்ட நபிமொழி அக்கூட்டத்தார் நேரடியாக குர்ஆனை விசுவாசிக்க மாட்டார்களென்று கூறுகிறது. முதலில் அவர்கள் தங்களின் வேதச் சுவடிகளை தேடிப் பெறுவர். இப்போது அக்கூட்டம் தனது வேதச்சுவடிகளிலிருந்தும் துண்டிக்கப்பட்டுள்ளது. பின்பு அவர்கள் அதை தேடிப்பெறுவர். அந்த வேதச்சுவடிகளில் அவர்களுக்கு குர்ஆனின் போதனைகளனைத்தும் கிடைக்கும். அதன்பின்னரே அக்கூட்டம் இஸ்லாத்தை ஏற்கும். இவ்வகையில் அக்கூட்டத்தாரின் விசுவாசம் அதிசயமான ஒன்றாக அமைவதுடன், நபித்தோழர்கள் பெற்ற நன்மையைப் போன்றதொரு நன்மைக்கும் அவர்கள் உரியவர்களாவார்கள். இன்னும் உலகிலுள்ள மதக் கூட்டத்தாரில் ஒரேயொரு கூட்டம் மட்டும்தான் அவர்களிடம் விண்ணின் வேதச்சுவடிகள் இருந்தும் அதை விட்டும் அவர்கள் துண்டிக்கப்பட்டுள்ளனர். அவர்கள் யார் என்பதையும் இப்போது நீங்கள் தெரிந்து கொண்டீர்களல்லவா?

**அழைப்பின் முறை குர்ஆனில்...**

அழைப்பிற்குரிய ஆரம்பமாக முஸ்லிம் வேதமான குர்ஆன் பல்வேறு இடங்களில் மூன்று அடிப்படையான விசயங்களை நமக்குத் தருகிறது. அதிலொன்று இறைவிசுவாசம். இரண்டு, மறுமையைக் குறித்த விசுவாசம். மூன்று, நற்கிரியைகள் ஆகியவையாகும். இதைப் பற்றிய குர்ஆனின் வசனமொன்றைப் பாருங்கள்...

إِنَّ الَّذِينَ آمَنُوا وَالَّذِينَ هَادُوا وَالنَّصَارَىٰ وَالصَّابِئِينَ مَنْ آمَنَ بِاللَّهِ وَالْيَوْمِ الْآخِرِ وَعَمِلَ صَالِحًا فَلَهُمْ أَجْرُهُمْ عِندَ رَبِّهِمْ وَلَا خَوْفٌ عَلَيْهِمْ وَلَا هُمْ يَحْزَنُونَ

**'திடனாக (வாயினால் மட்டும்) ஈமான் கொண்டார்களே அவர்களும் யூதர்களாகிவிட்டார்களே அவர்களும் கிறிஸ்துவர்களும், ஸாபியீன்களும்(அவர்களில்) யார் அல்லாஹ்வையும் இறுதிநாளையும் விசுவாசித்து நற்கரியைகளை செய்தார்களோ அவர்களுக்கு அவர்களுடைய கூலி அவர்களுடைய இரட்சகனிடத்தில் உள்ளது. இன்னும் அவர்களுக்கு அச்சமில்லை. அவர்கள் சலிக்கவும் மாட்டார்கள்.'** -அல்குர்ஆன் சூறா பகரா வசனம் 62.

உலகத்திலுள்ள எல்லா மதங்களிலும் மத அடிப்படை நம்பிக்கையில் ஏதாவதொரு குழப்பமோ கோளாறோ தோன்றிற்று எனில் அது இறைநம்பிக்கை என்னும் ஏகத்துவம் மற்றும் மறுமை பற்றிய நம்பிக்கையில்தான் முதன் முதலில் தோன்றிற்று. அத்துடன் ஒவ்வொரு மதவாதியும் அவர்களிடையே வருகை தரும் அந்த ரஸூலின் போதனையை ஏற்று தனது சிதைந்து போன நம்பிக்கையை சீரமைத்துக் கொள்வதற்குப் பதிலாக தனது நம்பிக்கைத்தான் சரியானது என்று எண்ணி வருகை தந்த ரஸூல்மார்களை ஏற்க மறுத்தனர். மேலும் அச்சிதைந்து போன நம்பிக்கையிலிருந்து தோன்றிய தவறான நடைமுறைகளையும் அவர்கள் மாற்றிக் கொள்ள தயாராக இல்லாதிருந்தனர். பாருங்கள் யூதர்கள் ஈஸா நபியையும் முஹம்மத் நபியையும் ஏற்பதற்ஃகுப் பதிலாக நிராகரித்தனர். ஒருவேளை அவர்கள் தங்கள் சிதைந்து போன ஏகத்துவம் மற்றும் மறுமை பற்றிய நம்பிக்கையிலிருந்து மீளுவதற்குத் தயாராகி அந்த நம்பிக்கையிலிருந்து விளைந்த தவறான நடைமுறைகளை மாற்றக் கொண்டிருப்பார்களேயானால் அவர்களுக்கு ஈஸாவை தமது ரஸூலாக ஏற்றுக் கொள்வதில் எவ்வித தயக்கமும் ஏற்பட்டிருக்காது. ஏனெனில் ஈஸா நபியவர்களும்; அதே போதனையைத்தான் கொண்டு வந்திருந்தனர்.

இவ்வாறு அவர்கள் இம்மூன்று அடிப்படை நம்பிக்கையிலும் கருத்து வேறுபாடு கொண்டு விதர்ப்பப்பட்டு போனதால்தான் அந்த யூதர்கள் முஹம்மத் நபியவர்களின் தூதுத்துவத்தையும் நிராகரித்தனர். அதே நேரம் அவர்கள் முஹம்மத் நபியவர்கள் ரஸூல்தான் என்பதையும் நிதர்சனமாக தெரிந்து வைத்திருந்தனர். அதனால்தான் குர்ஆன் இந்த மூன்று அடிப்படை நம்பிக்கைக்குரிய விஷயங்களை மட்டும் குறித்துக் காட்டி எல்லா மதவாதிகளுக்கம் அழைப்பு விடுக்கின்றது. அதாவது உங்களுடைய சிதைந்து போன அந்த நம்பிக்கையை நீங்கள் திருத்திக்

கொள்வீர்களாயின் அதன்பின் உங்களுக்கு எந்தக் கவலையும் இல்லை. அச்சமுமில்லை என்பதாகக் கூறி அழைப்பு விடுக்கின்றது.

மேலும் குர்ஆன் மேற்கண்ட அம்மூன்று நம்பிக்கையை மட்டும் கூறி மற்றவைகளை விபரிக்காததன் காரணமென்ன? வேதங்கள், வானவர்கள், நபிமார்கள் போன்ற நம்பிக்கைக்குரிய விஷயங்களை ஏன் விபரிக்காமல் விட்டு விட்டது எனில் முந்தைய மூன்றை நம்புவதாயின் பிந்தைய மூன்றைக் கொண்டுதான் நம்ப முடியும் என்பதை இறைவனின் சமயோஜிதம் தெரிந்து கொண்டிருந்ததால் முந்தைய மூன்றும் திருத்தப்படும் போது பிந்தைய மூன்றும் திருத்தப்பட்டுவிடும் என்பதால் பிந்தைய மூன்றை குறிப்பிடவில்லை என்பதை நாம் தெரிந்து கொள்ளலாம். இன்னும் இம்மூன்று அடிப்படை நம்பிக்கைக்குரிய விஷயங்களான ஏகத்துவம், மறுமை, நற்கிரியை போன்றவைகளை நாம் இந்த சமூக மக்களுக்கு அவர்களின் மதக்கிரந்தங்களான வேதங்களிலிருந்தே அதன் தூய்மை கெடாதவாறு நம்மால் எடுத்துக் காட்டமுடியும். அழைப்பின் முறை குறித்து குர்ஆன் நமக்கு இன்னொரு பாதையையும் காட்டித் தருவதைப் பாருங்கள்...

ٱدْعُ إِلَىٰ سَبِيلِ رَبِّكَ بِٱلْحِكْمَةِ وَٱلْمَوْعِظَةِ ٱلْحَسَنَةِ

**'உமது ரட்சகனுடைய பாதையில் நீர் ஹிக்மத்தைக் (உள்ளங்களை இளக வைக்கும் முறையை) கொண்டும் அழகான உபதேசத்தைக் (அவர்கள் விரும்பும் வழியில் வாதிப்பதை) கொண்டும் அழைப்பீராக!'**

-அல் குர்ஆன் சூறா நஹ்ல், வசனம் 125.

மேற்கண்ட வசனத்தில் ஹிக்மத்தைக் கொண்டு அழைத்தல் என்பதன் கருத்து பணிந்தோ அல்லது வளைந்து கொடுத்தோ போக வேண்டும் என்பதல்ல. அதபோல உண்மையை உண்மையென்றோ, பொய்யை பொய்யென்றோ தெளிவு படுத்துதம் விஷயத்தில் பின்வாங்குவதல்ல. இன்னும் ஹிக்மத் என்னும் ஹுகூமத் என்னும் ஆட்சியாளர்களுக்கு தாளம் போடுவதோ அல்லது அக்பருடைய தீனே இலாஹி என்னும் மார்க்கத்தை ஒப்புக் கொள்வதோ அல்ல. மாறாக நேருக்கு நேர் நின்று பதிலுக்கு பதில் தருவதாகும். ஆம். இஸ்லாம் அதற்கும் அனுமதி வழங்கியுள்ளது. எனினும் சிலபோது சூழ்நிலைகளின் உண்மையான தரத்தை புரிந்து கொள்வதுதான் ஹிக்மத்தாகும்.

பாருங்கள்! ஒரு சூழ்நிலையின் போது முஹம்மத் நபியவர்களின் தோழர்களான பிலாலும், கப்பாபும், நெருப்பாய் கனன்று கொண்டுள்ள சுடுமணலில் வைத்து வேதனை செய்யப்படுவதைக் கண்டும் நபியவர்கள் தனது மனதை கல்லாக்கிக் கொண்டு பொறுமை காக்கின்றனர். அதேபோல வேறொரு சூழ்நிலையில் குழப்பங்களை வேரோடு களைந்து எறிவதற்காக இஸ்லாமியப் படைகளுக்கு ஆணையும் பிறப்பிக்கின்றனர். இதில் ஒன்று இஸ்லாத்தின் பலவீனமாக துவக்கக் காலம். இன்னொன்று இஸ்லாம் பலம் பெற்று முன்னேறிக்கொண்டிருந்த காலம். எனவே அழைப்புக் கொடுக்கும் விஷயத்தில் காலத்தின் சூழ்நிலைக்குத் தக்கவாறு

ஒவ்வொரு காலக்கட்டத்திலும் ஒவ்வோர் வகையான முறைகள் கையாளப்பட்டுள்ளன. இஸ்லாத்தின் துவக்க காலத்தில் மூன்றாண்டுகள் வரை ஹிக்மத்தைக் கொண்டு மறைவான அழைப்புக்களே விடுக்கப்படுகிறது. ஆனால் அப்போதும் உண்மை உண்மையாகத்தான் இருந்தது. அதன்பின் மக்காவில் இருந்தவரை கட்டவிழ்த்து விடப்பட்ட அநியாயங்களுக்கும் அராஜகங்களுக்கும் மத்தியில் சொல்லொண்ணாத் துன்பங்களையும் துயரங்களையும் இறைவனுக்காக சகித்துக் கொண்டு மார்க்கப் பிரச்சாரத்தை நடத்தி வந்தனர். அதன்பின் அச்சகிப்புத் தன்மையின் காலம் முடிந்து மக்கள் முழுமையாக இஸ்லாத்தை விளங்கிக் கொள்ளும் காலம் வந்தபின் அநியாயம் தலைதூக்கியபோது அராஜகம் தலையெடுத்தபோது அந்த இடத்திலேயே அதனுடைய தலைகள் கிள்ளி எறியப்பட்டன. அழைப்புக்குரிய ஹிக்மத்தை நாம் அந்த ஹஸ்த்தியி(முஹம்மத் நபியி)டமிருந்து பெறாமல் போவோமாயின் (இந்த ஹிக்மத்தை தான் இறைவன் முஹம்மத் நபியவர்களுக்கு வெகுமதியாகத் தந்திருக்கிறான்) நம்மால் எங்கேயும் வெற்றி பெறவே முடியாது. அதற்கு மாறாக தோல்வியைத்தான் ஆடையாகத் தரிப்போம். இன்னும் ஹிக்மத்தின் போதனை என்பது முஹம்மத் நபியவர்களின் ஒரு தனித்தன்மையாகும். இது பற்றி முஸ்லிம் வேதமான குர்ஆன் என்னக் கூறுகிறது என்பதைப் பாருங்கள்…

وَيُعَلِّمُكُمُ الْكِتَابَ وَالْحِكْمَةَ

**'இன்னும் அவர் (ரஸூல்) உங்களுக்கு குர்ஆனையும் ஹிக்மத் (சமயோஜிதத்)தின் போதனையையும் அளிக்கிறார்.'**

-அல்குர்ஆன் சூறா பகரா வசனம் 151.

என்று கூறுவதால் குர்ஆனுடைய போதனையோடு ஹிக்மத்துக்கு எத்தனை முக்கியத்துவம் தரப்பட்டுள்ளது என்பதை அடுத்து வரும் வசனத்தைக் கொண்டாவது நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

**'அவன் நாடியோருக்கு ஹிக்ம(சமயோஜித)த்தை கொடுப்பான். இன்னும் யார் ஹிக்மத் கொடுக்கப்பட்டார்களோ அவர் அநேக நன்மைகளை கொடுக்கப்பட்டு விட்டார். இன்னும் புத்தியுள்ளவர்களைத் தவிர (மற்றவர்கள் இதனை புரிந்து கொள்ள மாட்டார்கள்.'** – அல்குர்ஆன் சூறா பகரா வசனம் 269.

**இந்துவுக்கு அவர்கள் தொலைத்ததைக் கொடுங்கள்**

இந்துவை நாம் முஸ்லிமாக்கிப் பார்த்து விட்டோம். மார்க்க ரீதியான மாற்றத்தை அவர் பெற்ற பின் தமது சமூக நிலையிலிருந்து துண்டிக்கப்பட்டு விடுகிறார். அத்துடன் இந்துச் சமூகத்தாரிடையே ஒரு வெறுப்பும் அவர் காரணமாக தலைதூக்கி விடுகிறது. அத்துடன் அப்புதிய முஸ்லிமை நாம் அனுசரித்தும் போவதில்லை. அவருடைய திருமணம், வாழ்க்கை, பிழைப்பு போன்றவையனைத்தும் சிதறிப் போய்விடுகிறது. எவ்வாறு மதீனாவின் அன்சாரித்

தோழர்கள் மக்காவின் முஹாஜிர்களை தங்களின் சகோதரர்களாக ஏற்றுக் கொண்டார்களோ அச்சிறிய உதாரணத்தின் பலலைக் கூட அப்புதிய முஸ்லிமுக்கு நம்மால் கொடுக்க முடியவில்லை. அவ்வப்போது கோழையாகி அப்புதிய முஸ்லிம் தனது பழைய மார்க்கத்தின் பக்கம் திரும்பிப் போகும் நிகழ்ச்சிகளையும் நாம் பார்க்கத்தான் செய்கிறோம். இது இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளும் துணிச்சலைப் பெற்ற சிலருடைய உதாரணங்கள்தான். அடுத்து இஸ்லாமியர்களின் தவறான நடவடிக்கைகளை கண்டு பலர் இன்று இஸ்லாத்தின் உயர்நிலையுடைய தாக்கத்தையே பெறாமலும் இருக்கின்றனர். இப்படிப்பட்ட சூழ்நிலையில் அழைப்புக் கொடுப்பதற்கு ஒரேயொரு சாத்தியத்திற்குரிய வழிதான் இருக்கிறது. அது இந்துவை முஸ்லிமாக்குவதற்குப் பதிலாக அவர்கள் தொலைத்துவிட்ட அவர்களுடைய ஹகீகத்தை (எதார்த்தத்தை) அவர்கள் முன் கொண்டு வந்து அவர்களுக்கு காட்டித் தருவதுதான். இது சிலருக்கல்ல. ஒரு பெரும் சமூகத்தையே மாற்றியமைப்பதற்குரிய பாதையாகும்.

இன்றைய சூழ்நிலையில் இஸ்லாமியப் பிரச்சார முறை குர்ஆன் மற்றும் நபி வழியின் அடிப்படையாகக் கொண்டு எல்லா மதவாதிகளிடமும் அழைப்பதற்குரிய முறையாக கையாளப்பட்டு வருகிறது. ஆனால் அதற்கு மாறாக இந்துக்களுக்கு அவர்களின் பழைய மார்க்கத்தையும் அவர்கள் தொலைத்து விட்ட இஸ்லாத்தையும் அவர்களுடைய வேதத்திலிருந்தே தேடியெடுத்து நாம் கொடுக்க வேண்டும். இதில் எக்காரணம் கொண்டும் மதமாற்றம் என்பதை நாம் கையில் எடுக்கக் கூடாது. அவ்வாறின்றி எடுப்போமாயின் அது மோசமான பல விளைவுகளுக்கு காரணமாகிவிடும். அத்துடன் இது நம்முடைய வழியுமல்ல. மாறாக கிறிஸ்துவர்களின் நூதனமாக வழிகெட்ட முறையாகும். எனவே அந்தப் பாதையை நாம் பின்பற்றுவது முந்தைய நபிமார்களான ஆதம் நபி மற்றும் நூஹ் நபி போன்றோரின் போதனா முறைகளை அவர்களுக்குக் காட்டித் தந்து அவர்களை உண்மையான இஸ்லாத்தின் பக்கமாக நாம் அழைக்க வேண்டும். அதாவது முஹம்மத் நபியவர்கள் இப்றாஹீம் நபியவர்களின் போதனா முறையைக் கொண்டு அன்றைய மக்காவின் முஷ்ரிக்குகளை அழைத்ததைப் போல ஆதம் மற்றும் நூஹ் நபியின் போதனா முறையைக் கொண்டு நாம் அவர்களை அழைக்க வேண்டும்.

**இரு பெரும் சம்பவங்கள்**

அழைப்புக்குரிய முறையில் குர்ஆன் சமயோஜிதமான ஹிக்மத்துக்கு ஏன் இத்தனை முக்கியத்துவம் கொடுக்கிறது என்பதற்குரிய காரணங்கள் நமக்கு வரலாற்றின் ஆதாரங்களிலிருந்துதான் கிடைக்கின்றன. இந்த இருபதாம் நூற்றாண்டிலேயே இருபெரும் சம்பவங்கள் நிகழ்ந்து முஸ்லிம்கள் ஹிக்மத்தை கைவிட்டதால் முஸ்லிம் அல்லாதோரின் ஹிக்மத் வெற்றியடைந்தது. இவ்விரு சம்பவங்களிலும் கோடிக்கணக்கானோர் இஸ்லாத்தின் பக்கமாக நெருங்கி வந்தும் கூட இறுதியில் பின்வாங்கிவிட்டனர். அவ்விரு சம்பவங்களில் ஒன்று ரஷ்யாவிலும் மற்றொன்று இந்தியாவிலும் நிகழவிருந்தவைகளாகும்.

ரஷ்ய கம்யூனிஸ புரட்சிக்குரியவராக கருதப்படும் '**காமரேட் லெனின்**' என்பார் உலகிலுள்ள எல்லா மதங்களைப் பற்றியும் ஆராய்ச்சி செய்தபோது அவர் இஸ்லத்தைக் கண்டு உணர்ச்சி

வசப்பட்டார். இன்னும் ரஷய் மக்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றும் அவர் விரும்பினார். மேலும் லெனின் இஸ்லாத்தின் பக்கமாக ஈர்க்கப்படுவதற்கு '**பக்ராகான்**' என்றொரு இஸ்லாமியப் பெரியார்தான் காரணம் என்று கூறப்படுகிறது. அவர்தான் லெனினுக்கு இஸ்லாத்தைப் பற்றியும், அதன் விழுமிய பொதுப்பார்வை பற்றியும் விளக்கிக் காட்டியவர். அதைக்கொண்டு தான் லெனினும் அதற்குரிய முயற்சியை மேற்கொண்டார். ஆனால் எகிப்திலுள்ள மிஸ்ரைச் சார்ந்த இஸ்லாமிய அறிஞர்களின் அறியாமை மற்றும் கவனக்குறைவின் காரணத்தாலும் பிரிட்டிஷாரின் சமயோஜிதமான நடவடிக்கையாலும் இவ்வரிய வாய்ப்பு இறுதியில் வீணாகிப் போய்விட்டது.

இந்த விபரங்களை விளக்கமாக இந்திய தேசத்தை சேர்ந்த ஒரு கம்யூனிஸ தலைவர்-லெனினுடன் மிகவும் நெருக்கமாகத்தொடர்பு கொண்டிருந்தவர் கூறுகிறார், முஹம்மத் அப்துல்லாஹ் என்னும் முன்னாள் ஐ.ஏ.எஸ். அதிகாரியான அவர் கூறுவதைப் பாருங்கள்...

எம்.என்.ராய் (M.N.Roy) இவர் இந்தியாவின் மிகவும் பிரபலமான தலைவர்களில் ஒருவர். இவர் 1921 லிருந்து 1928 வரையுள்ள காலக்கட்டங்களில் அகில உலக கம்யூனிஸ அமைப்பின் செயலாளராக இருந்தார். அப்போது ஜெர்மன், பிரான்ஸ் மற்றும் சீனா போன்ற தேசத் தொழிலாளர் பிரச்சனையில் ஒரு முக்கியமான பங்கும் வகித்துள்ளார். அத்துடன் அவருக்கு லெனினுடன் மகிக நெருக்கமான தொடர்பும் இருந்தது. அவரது இந்திய நண்பர்களில் ஒருவர் அரசியல் காரணங்'களுக்காக இந்தியாவை விட்டு வெளியேறி ரஷ்யாவில் குடியேறினார். அவருக்கும் லெனினோடு நெருக்கமான தொடர்பிருந்தது. அவர் தனது சுயசரிதையில் லெனினுக்கு இஸ்லாத்தின் பால் இருந்த பிடிப்பை பற்றியும், நம்பிக்கை பற்றியும் விளக்கமாக எழுதியுள்ளார். அதை உங்களின் பார்வைக்குத் தருகிறோம்.

ரஷ்யா சுதந்திரமடைந்த காலத்தின் இறுதி நாட்களில் லெனின் தலைமை பதவியை ஏற்றபோது அவர் கம்னிஸ ஆட்சியை நிறுவினார். அதன்பின் தனக்கு நெருக்கமான நண்பர்களின் கூட்டமொன்றை கூட்டி அவர்களிடம் சொன்னார். நாம் நமது ஆட்சியை அமைப்பதில் இப்போது முழுமையாக வெற்றியடைந்துவிட்டோம்.இருப்பினும் நமது இந்த ஆட்சியை நிரந்தரப்படுத்தவும், செம்மையாக நடத்தவும் ஒரு நிரந்தரமான தீர்வொன்றைக் கண்டாக வேண்டும். அதேநேரம் அது மனித வாழ்வின் இயற்கை அமைப்புக்கு ஒவ்வக் கூடியதாகவும் இருக்க வேண்டும். ஏனெனில் மனிதன் அமைதியான வாழ்க்கை நடத்துவதற்கு அவனுக்கு வெறும் உணவு மட்டும் போதாது. மாறாக அவனுடைய ஆன்மா அமைதி பெற அவனுக்கு ஒரு மதமும் தேவைப்படுகிறது. இதில் நான் எல்லா மகங்களையும் ஆய்வு செய்தேன. அவைகளில் ஒரேயொரு மதத்தை தவிர வேறு எந்த மதமும் நமது கம்யூனிஸக் கொள்கைக்கு துணைபுரிவதாக இல்லை. ஆதலால் இப்போது நான் அந்த மதத்தின் பெயரை மட்டும் சொல்கிறேன். அதைப்பற்றிய கருத்துக்களை நீங்கள் உடனே அவசரப் பட்டு சொல்ல வேண்டாம். ஏனெனில் இது கம்யூனிஸத்தின் ஜீவ மரணம் பற்றிய விஷயமாகும். எனவே நீங்கள் நிறைய சந்தர்ப்பம் எடுத்துக் கொள்ளுங்கள். நன்றாக யோசியுங்கள். ஒருவேளை நானே தவறாக யோசித்திருக்கலாம். இருப்பினும் நமது தெளிவைக் குறித்து நாம் நிதானமாக ஆர

அமர யோசிக் வேண்டும். ஆதலான் நான் நினைக்கிறேன், இஸ்லாமிய மார்க்கம் ஒன்றுதான் தனது தோற்றத்தின் எதிர்பார்ப்பில் முழுக்க முழுக்க கம்யூனிஸத்தோடு ஒத்துப் போகக் கூடியது என்பது எனது தாழ்மையான கருத்தாகும் என்று சொன்னதுதான் தாமதம்...

கூட்டத்தில் ஒரே சலசலப்பு. இருந்தும் லெனின் அமைதியாக யோசித்துப் பார்க்குமாறு வேண்டினார். மேலும் கூட்டத்தினரை நோக்கி, இன்றிலிருந்து திரும்பவும் ஒருவருடம் கழித்து நாம் மறுபடியும் சந்திப்போம்.; அப்போது கம்யூனிஸம் எந்த மதத்தை ஏற்றுக் கொள்வது என்பதை குறித்தும் அது எது என்பதை குறித்தும் முடிவு எடுப்போம் என்று கூறி விடைபெற்றார்.

இச்செய்தி பிரிட்டிஷாரின் வெளியுறவுத்துறை அமைச்சகத்திற்குக் கிடைத்தபோது அவர்கள் குலைநடுங்கிப் போயினர். இது தங்களின் சாமராஜ்யத்திற்குரிய மாபெரும் பேரழிவு என்றும் நினைத்தனர். இதில் கம்யூனிஸமும் இஸ்லாமும் இணைந்து விட்டால் அது பிரிட்டிஷாருக்கு எதிரான மாபெரும் சக்தியாக உருவெடுத்துவிடுமென்று அஞ்சியதால் கொஞ்சமும் தாமதிக்காமல் இஸ்லாத்திற்கு பதிலாக **'மார்க்சிஸம்'** போன்ற இறைவனை மறுக்கும் நாஸ்திகக் கொள்கை கம்யூனிஸத்திற்கு பலம் சேர்க்கும் என்ற ஒரு வார்த்தையை கொண்டு வந்து நிறுத்த எகிப்திலுள்ள அல் அஸ்கர் பல்கலைக்கழகத்தை சேர்ந்த இஸ்லாமிய அறிஞர்கள் பிரிட்டிஷார் வெளியிட்டுள்ள நச்சுக் கருத்தை புரிந்து கொள்ளாமல் எப்படிப்பட்ட ஒரு பத்வாவை (மார்க்கத் தீர்ப்பை) வெளியிட்டார்கள் எனில், எதை பிரிட்டிஷ் அரசாங்கம் எதிர்பார்த்ததோ அதே கருத்தைக் கொண்ட பத்வாவாக அது அமைந்த போது, அதை அச்சிட்டு உலகின் மூலை முடுக்கெல்லாம் பிரிட்டிஷ் அரசு விநியோகம் செய்தது. எதுவரை எனில் ரஷ்யாவில் முஸ்லிம்கள் வசிக்கும் பகுதியில் இருப்போரிடம் இன்றும் கூட அந்தப் பிரதிகள் பத்திரமாக இருக்கின்றன.

**'இந்த விபரங்கள் அனைத்தும் லெனினுக்கு தெரியவந்தபோது அவர் தமமுது அதிர்ச்சியை வெளியிட்டதோடு, நான் முஸ்லிம்களை அறிவாளிகள் என்று எண்ணியிருந்தேன். ஆனால் அவர்களும் இத மதவாதிகளைப்போல கடுமையானவர்களாகவும், தக்யானூஸ் என்னும் அரசனைப் போன்றுதான் காணப்படுகின்றனரென்றும் கூறினார். முடிவில் இத்திட்டம் அப்படியே உறைந்து போயிற்று. இதனால் இஸ்லாமிய எதிரிகளும் நிம்மதிப் பெருமூச்சு விட்டனர்.'** –நூல்: சோவியத் யூனியன் இதழ், பாகம் 28, ஜூன் 1982.

அடுத்து முஸ்லிமல்லாதோரின் சமயோஜிதமான இரண்டாவது வெற்றியைப் பாருங்கள். இது இந்தியாவுடன் சம்பந்தப்பட்டது ஆகும்.

அதாவது அம்பேத்கார். இவர் ஹரிஜனம் மற்றும் தாழ்த்தப்பட்டோரின் மிகப்பெரும் வழிகாட்டியாவார். அந்த அளவுக்கு அம்மக்களால் அவர் நம்பப்பட்டார். இந்திய தேசத்திலுள்ள எல்லா ஹரிஜன மக்களோடும் அவர் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ள விரும்பினார். காந்திஜிக்கு இவ்விஷயம் தெரியவந்த போது, அவர் அம்பேத்கரை பார்த்து, நீங்கள் எந்த இஸ்லாத்தை ஏற்க விரும்புகிறீர்கள்? ஷியாக்களுடைய இஸ்லாத்தையா? அல்லது

ஸன்னிகளுடைய இஸ்லாத்தையா? ஒருவேளை ஷியாக்களுடைய இஸ்லாத்தில் நீங்கள் சேர விரும்பினால் அவர்களிலும் பல்வேறு பிரிவுகள் இருக்கின்றன. அதில் எந்தப் பிரிவுக்குரிய இஸ்லாத்தை ஏற்க விரும்புகிறீர்கள்? அவ்வாறின்றி ஸன்னிகளின் இஸ்லாத்தை நீங்கள் ஏற்க விரும்பினால்,அவர்களிலும் நிறைய பிரிவினை வாத கூட்டங்கள் இருக்கின்றன. அதில் எந்தப் பிரிவினைக்குரிய இஸ்லாத்தை ஏற்க விரும்புகிறீர்கள்? இதில் அவர்களுக்கிடையே காணப்படும் பிரிவுகளில் ஒரு பிரிவு இன்னொரு பிரிவை முஸ்லிம் என்றே ஏற்றுக் கொள்ள மறுக்கிறது என்று சொல்ல,நான் இஸ்லாத்தில் மட்டும்தான் ஏற்ற இறக்கம் என்னும் வித்தியாசம் இல்லை என்று நினைத்துக் கொண்டிருந்தேன். அதற்காகத்தான் நான் அந்த மதத்தையும் விரும்பினேன் எனக் கூறியவராக முடிவில் ஒதுங்கிவிட்டார். இது எத்தனை படிப்பிற்குரிய விஷயம் எனில், இச்சம்பவங்கள் எழுதப்பட்ட மையின் ஈரம் கூட இன்னும் காயவில்லை.

**ஒருக்கால் இப்படி நினைத்தால்...**

முஹம்மத் நபியவர்களின் வாழ்க்கை முழுவதுமே ஹிக்மத் என்னும் சமயோஜிதத்தை மையமாகக் கொண்டிருந்த காலமாகத்தான் அமைந்திருந்தது. மேலும் இஸ்லாம் பலவீனப்பட்டிருந்த அந்தக் காலத்தில் கூட முஹம்மத் நபியவர்கள் அம்மக்களை நோக்கி, நான் புதிதாக எந்தவொரு மார்க்கத்தையும் உங்களிடம் கொண்டு வரவில்லை. மாறாக தீனெ ஹனீப் என்னும் இப்றாஹீம் நபியவர்களின் மார்க்கத்தை தான் உங்களிடம் எடுத்துக் காட்டுகிறேன் எனக் கூறியதைப் போன்று இன்று இஸ்லாம் நலிந்துள்ள நிலையில் நாம் இந்தக் கூட்டத்தாரிடம் நமது மார்க்கத்தை விளக்கிக்க காட்டும் வகையில், எங்களின் மார்க்கமொன்றும் புதிதானதல்ல. அத்துடன் நாங்கள் நூஹ் (மனூவை) நபியையும் திருத்தூதராகத்தான் நம்புகிறோம். இன்னும் அவர்களுடைய தூதுத்துவம் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக உங்களிடம் புழுதியேறி தூசி படிந்து போயுள்ளதால் அதை நாங்கள் இறைவனுடைய உண்மையான இறுதி வேதத்தின் வெளிச்சத்தைக் கொண்டு தூய்மையாக்க முடியும் என்று ஏன் சொல்லக் கூடாது?

தயவு செய்து நம்புங்கள். இக்கூட்;டம் தேடிக் கொண்டிருக்கிறது. காலங்காலமாக அவர்களுக்கு அவர்களுடைய மார்க்கம் காட்டித் தரப்பட்டும் கூட அதை அவர்கள் புரிந்து கொள்ளவில்லை. அதேநேரம் அவர்கள் அம்மார்க்கத்தை விட்டும் துண்டிக்கப்படாமல் இன்றும் கூட அம்மார்க்கத்தோடு பின்னிக் கொண்டுதானிருக்கின்றனர்.

ஆதலால் நாம் அவர்களுக்கு இதுதான் மார்க்கமென்று இஸ்லாத்தை எடுத்துக்காட்ட முடியாதா? இன்னும் குர்ஆனுடைய ஒளியில் அவர்களுடைய மார்க்கத்தில் ஏற்பட்டுள்ள கோளாறுகளை தடுமாற்றங்களை தவறான கொள்கைகளை தடம் மாறிவிட்ட நம்பிக்கைகளை செயல்பாடுகளை எல்லாம் திருத்தி அமைத்து, அல்லது எடுத்துக் காட்டி இதுதான் உண்மையான மார்க்கம். இதைத்தான் மனூ(நூஹ் நபி) உங்களுக்குத் தந்தாரென்று விளக்கிக் காட்ட முடியாதா?

எங்கே பரிசுத்தமான நிலை வகிக்கும் தூய்மையான இஸ்லாம்! எங்கே உலகம் முழுவதிலுமுள்ள இச்சைகளையும், ஆசாபாசங்களையும் உள்ளடக்கிக் கொண்டிருக்கும் இந்து தர்மம். ஒருங்கிணைப்புக்கு கொஞ்சம் கூட வாய்ப்பே இல்லை. அத்துடன் அது ஒரு மார்க்கமே இல்லையென ஒரேடியாக நிராகரித்து ஒதுக்கிவிடாதீர்கள். உங்களின் நபி கூறுவதைப் பாருங்கள்...

**'மிகவிரைவில் இஸ்லாத்தில் தோன்றிய ஒரு மனிதர், இன்னும் அறியாமை என்னவென்றே அறியாத ஒருவர், இஸ்லாத்தில் உள்ள ஒவ்வொரு கசப்பையும் அகற்றி விடுவார்.'** –நூல்: அர்கானே அர்பஆ பக்கம் 15.

ஆதலால் பதினான்கு நூற்றாண்டுகளின் வரலாற்றில் மிகப் பெரிய அளவில் நமது மார்க்க அறிஞர்கள் தௌராத், ஜபூர், இன்ஜீல் என்னும் வேதங்களை சரிகண்டு செம்மைபடுத்தியுள்ளார்களா? இன்னும் எத்தனை அறிஞர்கள் இந்து மார்க்கத்தை பார்வையிட்டுள்ளனர்? சில முயற்சிகள் சிலபோது அதற்குரிய வாய்ப்பை தந்தாலும் கூட இந்து வேதங்களிலுள்ள தவறான அர்த்தங்களில் காணப்படும் இந்துச் சமயத்தின் குறைபாடுகளை தேடிப்பிடித்து இஸ்லாத்தின் நிறைகளோடு ஒப்பு நோக்கியுள்ளனர்? விஷயம் உண்மைதானென்ற போதிலும் அம்மாதிரியான நூல்களை நாம் இந்துக்கள் முன் எடுத்து வைப்போமாயின் அதை அவர்கள் ஒப்புக் கொள்வதற்குப் பதிலாக நம்மை விட்டும் தூரதமாகி விடுவார்கள். ஆதலால் அமைதியான முறையில் அவர்களுடைய எல்லா மதக் கிரந்தங்களையும் அருள்கூர்ந்து பார்வையிடுங்கள். அதன்பின் இஸ்லாத்தை அவர்களின் மத ரீதியிலேயே போதனா முறையைக் கொண்டு அவர்களுக்கு புரிய வைக்க முடியும் என்பதை நீங்களே உணருவீர்கள். இன்னும் அதை அங்கீகரிப்பதில் அவர்களிடம் எந்தத் தயக்கத்தையும் நீங்கள் காண மாட்டீர்கள்.

**குறைந்த பட்சம் இதையேனும் செய்க**

எதார்த்தத்தையும் உண்மையையும் உணர்த்திக் காட்டுதல் என்பது எல்லோராலும் சாத்தியமாகும் காரியமல்ல. வெறுமனே தமிழ் மொழியை மட்டும் கற்றுக் கொள்வதால் இது நடைபெற முடியாது. ஏனெனில் உண்மையான வழிகேடு என்பதே வேதங்கள், புராணங்கள் மற்றும் உபநிஷத்துக்களின் மொழிபெயர்ப்புகள் மூலம்தான் பரவியுள்ளது. ஆதலால் நமது சமூகத்திலுள்ள சிலர் சமஸ்கிருத மொழியை கற்க முன்வர வேண்டும். அத்துடன் அவர்களுக்கு இஸ்லாத்தைப் பற்றிய ஞானமும் இருப்பது அவசியமாகும். இது மிக்க கடினமான வேலைதான். இருப்பினும் முஹம்மத் நபியவர்களின் எழுத்தராக இருந்த ஸைத் என்னும் தோழர் சில நாட்களுக்குள்ளேயே சுர்யானி மொழியை கற்றுக் கொள்ளவில்லையா? இவ்வாறே அல்பெய்ரூனியைப் போன்றவர்கள் சமஸ்கிருதத்தைக் கற்றுக் கொள்ள முடியுமெனில், நம்மிடையேயுள்ள குர்ஆன் மற்றும் நபிமொழியின் ஞானமுள்ள இளைஞர்களால் சமஸ்கிருதத்தை ஏன் கற்றுக் கொள்ள முடியாது? இந்த ஏற்பாடுகளை நாம் சில ஆண்டுகளுக்குள் செய்து முடித்து விடலாம். ஆனால் அந்த இடைவெளிக்குரிய காலத்தில் ஒரு முக்கியமான வேலையை நாம் செய்து முடித்தாக வேண்டும். அது வெறுப்புக்களால்

ஏற்பட்டுள்ள விரிசலை இல்லாமலாக்குவதாகும். இதை அமெரிக்க முஸ்லிம்கள் இப்போது துவக்கியுள்ளனர். இதுபற்றிய ஒரு பகுதியை மட்டும் நாம் உங்களின் பார்வைக்குத் தருகிறோம்.

**அமெரிக்கர்களின் உதாரணம்**

பதிமூன்று வருடங்களுக்கு முன்னால் அமெரிக்காவிலுள்ள கிறிஸ்துவர்கள் மற்றும் யூதர்கள் மில்லத்தே இப்றாஹீம் (இப்றாஹீம் நபியின் சமூகம்) என்றொரு அமைப்பை உருவாக்கியுள்ளனர். இந்த அமைப்பின் நோக்கம் ஒருவர் மற்றவரை புரிந்து கொள்ள முயல்வதோடு மதக் கருத்து போன்ற கருத்து வேறுபாடுகளை களைவதுமாகும். இப்போது அமெரிக்காவில் முஸ்லிம்களுடைய எண்ணிக்கையும் கணிசமான அளவில் உயர்ந்து விட்டதால் குறைந்த எண்ணிக்கையுடையோர் என்னும் அடிப்படையில் அவர்களுக்கும் ஓர் அங்கீகாரம் வழங்கப்பட்டுள்ளது. இதில் முஸ்லிம் அறிஞர்கள் கூறுகின்றனர். இப்றாஹீம் நபியவர்களும் எங்களால் விசுவாசம் கொள்ளப்பட்ட நபிமார்களின் ஒருவராக இருப்பதால் எங்களை உங்களுடைய அமைப்பிலிருந்து ஏன் தனிமைப்படுத்துகிறீர்கள் என்று வினவியதன் விளைவு! அவ்வமைப்பு திருத்தியமைக்கப்பட்டு இப்போது அதனுடைய பெயர் '**முஸ்லிம் கிறிஸ்துவ யூதத் தலைவர்களின் அமைப்பு**' (Muslim, Christian, Jews Leadership Forum) எனப் பெயரிடப்பட்டுள்ளது.

இம்மூவரும் இணைந்து பேசும்போது, நாம் அனைவருமே இப்ராஹீம் நபியை பின்பற்றுகிறவர்கள் தான். மதக்கருத்து வேறுபாடுகளில் தத்தம் அவரவர் கொள்கையில் நாம் ஒவ்வொருவரும் இருந்தபோதிலும் நமக்கிடையே ஒற்றுமையும் இருக்கிறது. அந்த ஒற்றுமைக்குரிய விஷயங்களை ஒருவர் மற்றவருக்கு விளக்கிக்காட்ட வேண்டும்.

இந்த அடிப்படையில் முதலில் எட்டு எட்டு அறிஞர்கள் மூன்று மதங்களிலிருந்தும் ஒன்று கூடி இரண்டிரண்டு மணிநேரம் என்று பேசினர். மொத்தம் ஆறு மணி நேரத்தில் தங்களுக்கிடையேயுள்ள கருத்து வேறுபாடுகளை களைவதைக் குறித்து பேச்சுவார்த்தை நடத்தினர். இதில் ஒவ்வொருவரும் தமது மார்க்கத்தின் கொள்கைகள் மற்றும் சிந்தனைகள் போன்றவைகளை விரிவாக விளக்கிக் கூறினர். அதன்பின் அமைப்பின் செயல்திட்டங்களை குறித்'து தமக்குள் விவாதித்து ஒரு முறையை உருவாக்கினர். அதன்பின் கீழ்மட்டத்தை சேர்ந்த மக்களின் கூட்டமொன்று கூட்டப்பட்டு அக்கூட்டத்தில், ஒவ்வொருவரும் தத்தம் தமது மார்;க்கத்தின் வாழ்வியல் முறைகள், ஒழுக்கம், விழாக்கள் மற்றும் மார்க்க சடங்குகளை குறித்து விளக்கம் தந்தனர். அதன் பின் 1986 டிசம்பர் மாதம் 17ம் தேதியன்று அமெரிக்காவிலுள்ள டெட்ராய்ட்(னுநவசழவை)என்னுமிடத்தில் ஒரு பொதுமாநாடு ஒன்று நடத்தப்பட்டது. அதில் 29 முஸ்லிம், 36 யூதர், 91 கிறிஸ்துவ அறிஞர்கள் இன்னும் மற்ற மதங்களைச் சேர்ந்த அறிஞர்களும் பங்கு பெற்றனர். அம்மாநாட்டில் மூன்று மதத்தைச் சேர்ந்த

அறிஞர்களும் உரையாற்றினர். அதில் இஸ்லாமியர்களது தரப்பிலிருந்து கலந்து கொண்டவர்களில் குறிப்பிடத் தக்க ஒருவர் இந்திய நாட்டில் தோன்றிய மௌலானா டாக்டர் **முஸ்ஸம்மில் ஹுஸைன் சித்தீகி** என்பாராகும். இவ்வமைப்பு இன்றும் மிகச்சிறப்பாக பணியாற்றி வருகிறது.

மேலும் டாக்டர் முஸ்ஸம்மில் ஹுஸைன் சித்தீகி அவர்கள் உரை நிகழ்த்தும்போது, இவைகளன்றி இன்னும் பல்வேறு கருத்து வேறுபாடுகள் இஸ்லாத்திற்கும் யூத, கிறிஸ்துவத்திற்குமிடையே உண்டு. இருப்பினும் கணக்கில்லாத இணைப்புக்குரிய சாத்தியங்களும் இருக்கத்தான் செய்கின்றன. இவ்வாறே ஒருவரையொருவர் கண்ணியப்படுத்துதல், இணக்கமாக செயலாற்றுதல், என்பதன் கருத்து என்னவெனில், கருத்து மோதல் வரும்போது அதை மென்மையாக கையாளுவதோடு கண்ணியம் தவறாதிருத்தல் என்பதாம். பேசும்போது தகுந்த ஆதாரங்களைக் கொண்டு நாகரீகமான முறையில் உரையாட வேண்டும். நாம் முஸ்லிம்களாக இருப்பதால் குர்ஆனுக்குக் கட்டுப்பட்டு அதனுடைய போதனைகளை ஏற்று அதன்படி செயலாற்ற வேண்டும். **'இன்னும் மார்க்கத்தின் வழிகளில் வேதக்காரர்களிடம் நீங்கள் தர்க்கம் செய்யாதீர்கள்'** (அல்குர்ஆன், சூறா அன்கபூத். வசனம் 46) என்னும் போதனைக்கொப்ப நாம் நடந்து கொள்ள வேண்டும்.

இன்னும் நமது வரலாற்றுச் சம்பவங்கள் மிக உறுதியான முன்னுதாரணத்தை ஏற்படுத்துபவைகள். அவர்களுடன் இணைவதன் மூலம் நாம் எவ்வளவு இணக்கத்தை விரும்புகிறோம் என்பதையும் நமது மார்க்கத்தில் இணக்கத்திற்குரிய வழிகள் எத்தனை இருக்கின்றன என்பதையும் அவர்களுக்கு நாம் உணர்த்திக் காட்ட முடியும். இதன் மூலம் நமக்கிடையேயுள்ள இடைவெளிகள் அனைத்தும் அகற்றப்படுவதற்குரிய வழியும் பிறக்கும். நெருங்கி வருவதால் ஒருவர் மற்றவரின் சட்டங்களை நன்கு புரிந்து கொள்ளயும் முடியும். அத்தோடு ஒரு உன்னதமான சமுதாயத்தையும் நம்மால் உருவாக்கிக் காட்ட முடியும். -நூல்: ஹீலன், பாகம் 7, பக்கம் 36.

இவ்வாறே யூத அறிஞர் பேசும்போது, நமது அடிப்படை சட்டமே ஒருவர் மற்றவரை பற்றிய அறியாமையின் குற்றம்தான். இங்கே ஒரு பொதுக் கண்ணோட்டம் என்னவெனில் முஸ்லிம்களனைவரும் உலகை ஆள நினைப்பவர்கள், ஒரு பயங்கரவாதிகள் என்பதுதான். இதோ மதவாதத்தின் பொய் என்னும் அடிப்படையில் உருவாக்கப்பட்டு வருகிறது. நாம் இந்த மதவாதப் பொய்கள் அனைத்தையும் முதலில் வேரோடு கிள்ளியெறிய வேண்டும். அதற்கு முன் அரசியல் அமைப்புக்கள் இப்பிரச்சனையை மையப்படுத்தி உலகை அழிக்க நாம் விட்டுவிடக் கூடாது என்று பேசினார்.

-நூல்: ஹீலன் பாகம் 7, பக்கம் 29 முதல் 39.

ஒரு பிரபலமான ஆன்மீகச் சிந்தனையாளர் **'ப்ராம்'** என்பார் கூறுகிறார், இந்திய நாட்டில் காணப்படும் ஒரு பொதுவான நோய் என்னவெனில், ஒவ்வொரு மதவாதியும் தன்னை மட்டும் உயர்ந்தவராகவும் மற்றவர்களை தாழ்ந்தவர்களாகவும் கருதுவதுதான். முஸ்லிம்கள் என்ன

நினைக்கிறார்கள் எனில் எல்லா உண்மையான ஈடேற்றத்திற்குரிய பாதைகளும் தன்னிடம் மட்டும்தான் இருக்கிறதென்று நினைக்கின்றனர். இப்படித்தான் சீக்கியர்களும், இந்துக்களும் நினைக்கின்றனர். இதுதான் உலகிலுள்ள ஒவ்வொரு பாகத்திலும் ஏற்பட்டுள்ள விரிசலுக்குரிய அடிப்படையாகும்.

-நூல்: ஹீலன் பாகம் 7, பக்கம் 33.

இதுதான் அமெரிக்க முஸ்லிம்களின் முயற்சிக்குரிய முதல்படியாகும். ஒருவர் மற்றவரை வெறுக்கக் கூடிய மூன்று மதவாதிகளிடையே ஒருங்கிணைப்புக்குரிய ஒரு பாதையை தேடிப் பிடித்துள்ளனர். இதன்மூலம் தத்தம் தங்களின் மதக் கோட்பாடுகளுக்கொப்ப வாழ்ந்து கொண்டே ஒரு இணக்கமான நிலையை தோற்றுவித்தலாகும். இன்னும் இதில் வெற்றி என்பது எந்த மதம் உண்மையின் பக்கமுள்ளதோ அதற்குத்தான் இறுதியில் கிடைக்குமென்பதில் சந்தேகமில்லை.

**இணக்கம் என்பது சமயோஜிதமாகும்**

என்ன? நாம் இந்திய தேசத்தில் நூஹ் நபியையும் நம்முடைய நபியென்று ஏறு;கும் அடிப்படையில் இங்குள்ள இரு பெரும் கூட்டத்தாரை ஒருங்கிணைக்க முடியாதா? இதில் அமெரிக்க முஸ்லிம்கள் மேற்கொண்டுள்ள முயற்சியைப் போல் இங்கேயும் இரு பிரிவாருக்கிடையேயுள்ள துவேஷத்தை களைந்து இணக்கமான ஒரு சூழலை உ ருவாக்க முடியாதா? இம்முயற்சி நம்மைக் கொண்டு செயல்படுத்தப்பட்டால் இது உலக அளவில் ஒரு பெரும் மாற்றத்தை ஏற்படுத்தக் காரணமாக அமைந்திடாதா? ஏனெனில் நூஹ் நபியை யூதர்களும், கிறிஸ்துவர்களும் கூட தங்களின் நபியாக ஏற்றுக் கொள்ளத்தானே செய்கின்றனர்? அவர்கள் இப்போது ஸாமுடைய கூட்டத்தாரிடையே மட்டும்தான் இணக்கத்தை ஏற்படுத்த முயன்றுள்ளனர். ஆனால் நாம் உலகளாவிய நிலையிலுள்ள ஸாம் மற்றும் ஸாமல்லாத இருபெரும் கூட்டத்தாரது இணைப்புக்குரிய பாதையை அல்லவா திறக்கப் பார்க்கிறோம். இதில் இந்து, முஸ்லிம், கிறிஸ்துவர், யூதர் என எல்லோருமல்லவா இணைகிறோம்.

இது மிக முக்கியமாக கவனிக்கப்பட வேண்டிய ஓர் பிரச்சனையாகும். இதைப்பற்றி பாமர முஸ்லிம்களும் அரசியல் அமைப்பைச் சார்ந்தவர்களும், மார்க்க அறிஞர்களும் சிந்தித்துப் பார்க்க வேண்டும். என்ன? இது முஸ்லிம்களை இந்துக்களாக மாற்றும் சமயோஜித யுக்தியா? அல்லது உலகம் முழுவதையும் இஸ்லாத்தின் பக்கமாக திருப்புகின்ற ஹிக்மத்தா? என்பதையும் எண்ணிப் பார்க்க வேண்டும்.

**ஒரு குறிப்பு**

நடைமுறைப் படுத்தப்போகும் இத்திட்டத்தில் குர்ஆன் மற்றும் நபிவழி அத்துடன் உதாரணங்களின் வெளிச்சத்தில் என்னென்ன விளக்கப்பட்டுள்ளதோ அதனுடைய சுருக்கம் இதுதான்.

1. நூஹ் நபியின் கூட்;டமென்னும் அடிப்படையில் உலகளாவிய ஒருங்கிணைப்புக்குரிய ஒரு அடித்தளம் அமைக்கப்பட வேண்டும். இதன் மூலம் தவறான கருத்துக்கள் மறைந்து விவேகத்திற்குரிய பாதை திறக்கும்.

2. இந்துச் சமூக மக்களின் இந்து மத வேத்ங்களில் காணப்படும் கருத்துக்களை அறிவாளர்கள் குர்ஆனுடைய வெளிச்சத்தைக் கொண்டு உறுதிப்படுத்த வேண்டும். இதன் மூலம் அவர்களை அவர்களுடைய உண்மையான மார்க்கத்தின் பக்கமாக அவர்களின் வேதக்கருத்துக்களை முன்வைத்து அழைக்க முடியும்.

அத்துடன் நீங்கள் இதையும் புரிந்து கொள்ள வேண்டும். அதாவது அவகாசம் என்பது அதிகமாக இல்லை. இஸ்லாமிய ஆண்டின் பதினைந்தாவது நூற்றாண்டு துவங்கி விட்டது. பதினைந்து நூற்றாண்டுகளுக்குப் பின் ஒருபெரும் மாற்றமொன்று நிகழப் போகிறது என்பதை குர்ஆனும் நபிமொழியும் நமக்குக் கூறியுள்ளதை நாம் முன்னால் பார்த்தும் விட்டிருக்கிறோம். கஃபாவில்; நிகழ்ந்த குழப்பத்திற்குப் பின் நபிமொழியின் எச்சரிக்கை '**அரபுகள் எப்போது அழிந்து போவார்கள் என்று கேட்காதீர்கள்**' என்னும் வாக்கியத்தையும் நாம் பார்த்து விட்டதால் இப்போதுள்ள காலம் எதிர்பார்க்கக் கூடிய காலமல்ல. மாறாக செயலாற்றக் கூடிய காலமாகும். ஆதலால் நாம் வரலாறு குறிப்பிடும் காலத்தின் இறுதிகட்டத்தில் வந்து நின்று கொண்டிருக்கிறோம். காலங்காலமாக நம்மீது சுமத்தப்பட்டுள்ள அச்சமூகத்தாரின் கடன் சுமையை இப்போதாவது நாம் கீழே இறக்கி வைக்க முன் வரவேண்டும்.

**இந்து அறிஞர்கள் புரிந்துள்ளனர்.**

மாற்றத்திற்குரிய நேரம் சமீபித்து விட்டது. இதை இந்து அறிஞர்களும் தெரிந்துள்ளனர். அதற்குரிய ஆதாரத்தைப் பாருங்கள்...

**'எப்படிப்பட்ட ஆதாரங்கள் உள்ளன எனில், யுகம் மாறப்போகும் நேரம் நெருங்கி விட்டது. கலியுகம் இப்போது முடியப்போகிறது. இன்னும் அந்த இடத்திற்கு சத்யுகம் வரப்போகிறது. மனுஸ்மிருதி, லிங்க புராணம் மற்றும் பகவத் புராணத்தில் கொடுக்கப்பட்டுள்ள கணக்கைப் பார்க்கும் போது இந்தக் காலம் பஹ்ரானுடைய காலமாகும். அக்கணக்கை வைத்துப் பார்க்கும்போது யுகம் மாறுவதற்குரிய சரியமான நேரமானது 1980 லிருந்து 2000 வரையுள்ள இருபது ஆண்டுகளாகும்.'**

-நூல்: அகண்ட் ஜோதி பக்கம் 38, 39, 40.

அவர்களுடைய கணக்கு எத்தனை தூரம் சரியானது என்பதை நம்மால் தீர்மானமாகச் சொல்ல முடியாது. இருப்பினும் ஹிஜ்ரி பதவினைந்தாவது நூற்றாண்டில் இந்த மாற்றம் நிகழ்ந்தே தீரும் என்பதை நாம் நம்பித்தானாக வேண்டும்.

**யுகம் மாறப் போகிறது**

குர்ஆனும் நபிமொழியும் எந்த விசுவாசத்திற்குரிய மழை பொழியப் போகிறதென முன்னறிவிப்புத் தந்துள்ளதோ அவைகளின் அடையாளங்கள் இப்போது வெளியாகத் துவங்கி விட்டன. கண்களை அகலவிரித்து தலையை உயர்த்திப் பாருங்கள். ஆழ்ந்த உறக்கத்திலிருந்து உடனே விழித்தெழ வேண்டிய தருணம் நெருங்கி விட்டது.

**இறைவனுடைய ஆதாரங்கள்**

உலகிலுள்ள அந்த மொழிகள் எந்த மொழியில் விண்ணுலக வேதங்கள் இறங்கி மனித அறிவில உறைந்திருந்ததோ அவைகளில் அரபி மொழியைத் தவிரவுள்ள மற்ற மொழிகளனைத்தும் இபபோது கிட்டத்தட்ட செத்துப் போய் விட்டன. எது இறைவனுடைய இறுதி வேதத்தின் மொழியோ அது மட்டும் இறுதிநாள் வரை இப்பூமியில் நிலைத்திருக்கும். சமஸ்கிருதம், சுர்யானி, கல்தானி, ஆராமீ மற்றும் அப்ரானி போன்ற மொழிகள் செத்துப் போவதென்பதும் இறையாற்றலுக்குரிய ஓர் அடையாளமே. காரணம் குர்ஆனை தவிர மற்ற மொழிகளிலுள்ள வேதங்களெல்லாம் மனித வாழ்க்கைக்கு பயன்படாது என்பதற்காகவே அவையனைத்தும் ஏறத்தாழ செத்திறந்து விட்டன.

ஆனால் இதுவென்ன? ஒரு புதிய யுகம் பிறக்கபபோகுமுன் எந்தப் பழமையான மதக்கூட்டம் தனது வேதங்களின் வழியாக இஸ்லாத்தை தழுவ வேண்டியுள்ளதோ உலகிலுள்ள செத்துப் போன அப்பழமையான மொழிகளிலிருந்து விடுபட்டு சமஸ்கிருத மொழி மட்டும் மீண்டும் மறுபிறப்பை எடுக்கத் துவங்கியுள்ளதோடு அதற்குரிய அடையாளங்களும் இபபோது வெளிப்படத் துவங்கியுள்ளன. இறைவனுடைய மாற்றத்திற்குரிய நிலைகளை மனித அறிவால் புரிந்து கொள்ளவே முடியாது. இந்திய நாட்டின் பிரதமர் சமஸ்கிருதத்திற்கு மீண்டும் ஒரு புத்துயிரை தந்திருக்கிறார். இதன் மூலம் நமது அடுத்த தலைமுறையாளர்களில் வரவிருக்கும் இந்து முஸ்லிம் போன்ற அனைவரும் சமஸ்கிருதம் தெரிந்தவர்களாக இருக்கப் போகின்றனர். அப்போது இருக்கும் பண்டிதர்கள் என்னதான் மதம், சடங்கு, சம்பிராதயம், ஐதீகம் என்று சொன்னாலும் வேதத்தில் அவைகளையெல்லாம் ஆதாரப்படுத்திக் காட்டாதவரை அவர்கள் அதனை ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். இதுதான் துவக்கம். இதனுடைய முடிவைத்தான் சத்யுகம் வரப்போகிறதென்று அவர்களுடைய வேதமே கூறுகிறது.

## அத்தியாயம் பத்தொன்பது

**தீர்வு குர்ஆன் மட்டுமே**

இதுவரை நாம் கூறி வந்ததைக் கொண்டு சில இடங்களில் வாசகர்களுக்கு தற்போதுள்ள வேதங்களின் மொழிப் பெயர்ப்பாளர்களைப் பற்றி தவறானதொரு அபிப்பிராயம் ஏற்பட்டிருக்க கூடும். ஆனால் அவைகளை வாசகர்கள் அருள் கூர்ந்து தங்களின் எண்ணத்திலிருந்து

அகற்றிவிட வேண்டும். அத்துடன் கல்வியை மறைப்பவர்களின் கூட்டம் ஒவ்வொரு மார்க்கத்திலும் இருக்கின்றது. இருந்தும் வந்துள்ளது. முஸ்லிம்களில் கூட அப்படிப்பட்டவர்கள் இருக்கத்தான் செய்கின்றார்கள். ஆயினும் எந்தெந்த இந்து அறிஞர்கள் வேதங்களை மொழி பெயர்த்துள்ளார்களோ அவர்களது பணி என்பது மகத்தானதாகும். காரணம் அவர்கள் அக்கல்வியை ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக மறைத்து வைத்துக் கொண்டிருந்ததை இன்று பாமர மக்களின் பார்வைக்குக் கொண்டு வர முயற்சி செய்துள்ளனர்.

இதில் குறிப்பாக பண்டித் ஸ்ரீராம் சர்மா ஆச்சார்யா அவர்கள் மிகவும் போற்றுதலுக்குரியவர்கள். அவர் எல்லா மதங்களையுப் பற்றிய ஆய்வுக்காக என ஒரு ஆய்வுக் கூடத்தையே உருவாக்கியுள்ளார். நம்முடைய பார்வையில் அவர்கள் செய்து வரும் ஒரு மிகப் பெரியதவறு என்னவென்றால் தம்முடைய வேதங்களை மூலாதாராமாக் கொண்டு உலகிலுள்ள மதங்களின் கருத்துக்களை எல்லாம் ஆய்வு செய்வதுதான். இதை அவர்கள் யோசித்துப் பார்க்க வேண்டும். எந்தக் கல்வி ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக மறைந்து போயிருந்ததோ அதைத்தான் முதலில் சரிகாண வேண்டும். அத்துடன் தாங்களும் அதை புரிந்து கொள்ள முயற்சித்திருக்க வேண்டும். ஆனால் அதற்கு மாறாக அவர்கள் தங்களின் பழைய கொள்கைகளை மனதில் வைத்துக் கொண்டு மனித அறிவைக் கொண்டு வேதங்களை புரிந்து கொள்ள முயல்வது சாத்தியப்படாது. மேலும் எந்த ஒன்றை புரிந்து கொள்ள வேண்டியுள்ளதோ அந்த ஒன்றை ஆதாரமாக வைத்துக் கொண்டு மற்றவைகளை எவ்வாறு சரிகாண முடியும்? கடவுளின் வார்த்தைகளை விளக்குடைய வெளிச்சத்தில் அல்ல. அறிவுடைய பார்வையைக் கொண்டு அல்ல. இன்னொரு இறை வேதத்தின் வெளிச்சத்தைக் கொண்டுதான் புரிந்து கொள்ள முடியும். இதில் இறைவனுடைய இறுதி வேதம் என்பது குர்ஆன் மட்டுமே. அத்துடன் இன்று அதனுடைய ஒவ்வொரு அட்சரமும் அதனுடைய அஸல் நிலையிலிருந்து மாறாமல் அப்படியே பாதுகாக்கப்பட்டு வருகிறது என்பதை இவ்வுலகிலுள்ள அனைவரும் ஒட்டு மொத்தமாக ஏற்றுக் கொண்டுள்ளனர்.

ஆதலால் குர்ஆனுடைய வெளிச்சத்தில் வேதங்கள் சரி காணப்படுமாயின் அதில் மறைந்துள்ள உண்மைகள் அனைத்தும் தெளிவாக்கப்பட்டு அவைகளிலுள்ள குளறுபடிகளும் கோளாறுகளும் திருத்தி அமைக்கப்பட்டு அஸல மூலமான அப்பரிசுத்த வேதம் உலகுக்கு முன்னால் வந்து விடும். இதுபற்றி மேக்ஸ் முல்லர் கூறும்போது...

**'இக்காரியம் ஒரு ஒரு திடஞானியான அறிவாளரைக் கொண்டு மட்டும் சாத்தியமாகாது. இனி திடஞானிகளான அறிவாளர்களில் ஒரு பெரும் கூட்டமே இதை செய்யுமாயின் அப்போது இக்காரியம் சாத்தியமான ஒன்றெனக் கூறலாம். இன்னும் இதன் மூலம் ரிக் வேதத்தின் கருத்துக்களை மிக எளிதாகச் சரிபடுத்த முடியும்.'**

மேலும் வேதங்களில் காணப்படும் தவறுகளை திடஞானிகளான இந்து அறிஞர்கள் ஒப்புக் கொள்வதில்லை. இதில் தவறுகளுக்குhதிய அடிப்படைக் காரணம் அவர்களுடைய தவறான கற்பனைகளும் கொள்கைகளும்தானாகையால் முதலில் அதனை அவர்கள் அதனை தங்கள் எண்ணத்திலிருந்து அகற்றுவது மிக மிக அவசியமாகும். இன்னும் இந்த நுணுக்கம் மொழி

பெயர்ப்பாளர்களுக்கு புரிந்து விடுமாயின் அத்துடன் குர்ஆ ன் வெளிச்சத்தில் அவைகள் சரிகாணப்படுமாயின் வேதங்களின் உண்மையான அர்த்தமனைத்தும் வெளிவருவதோடு வேதத்திற்கும் கீதை மற்றும் உபநிஷத்துக்களுக்குமிடையே காணப்படும் கருத்து வேறுபாடுகளும் முழுமையாக அகன்று குர்ஆனும் வேதமும் வாக்களிக்கின்ற இந்த அகிலத்தின் ராஜரீகத்திற்குரியவர்களாக பரிணாமம் பெற்று இந்துக்களும் தலைதூக்குவார்கள் என்பதில் ஒரு சிறிதும் ஐயமில்லை.

**இறுதி எச்சரிக்கை**

**ஒன்று:**

இறுதித் தூதரான முஹம்மத் நபியவர்களின் நேசர்களாகிய அத்தோழர்களை ஒரே கருத்துடையவர்களா இணைத்து பிடித்துக் கொண்டிருந்த பொருள் எது? சில அடிப்படை நம்பிக்கைக்குரிய கொள்கைகளும் நபியவர்களின் மீது கொள்ளப்பட்டிருந்த நேசத்தையும் தவிர வேறு எது அவர்களை இணைக்கும் பாலமாக இருந்தது? அவரவருக்குரிய வழியும், பழக்கவழக்'கங்களும், குணாதிசியங்களும் வெள;வேறாகத்தானே இருந்தன?

உஸ்மான் என்னும் தோழர் ஒரு பெரும் செல்வந்தர். உயர்தரமான ஆடைகளை உடுத்துபவர். அதே நேரம் இன்னொரு பக்கம் அபூதர் கி:ஃபாரி, பரா:ஃ இப்னு மாலிக் போன்றவர்கள் உடுத்துவதற்குக் கூட ஒரு நல்ல ஆடையின்றி தர்வேஷ்களாக தலைவிரி கோலத்தில் காட்சியளிக்கின்றனர்.

அப்துர்ரஹ்மான் பின் அவ்:ஃப்; என்பார் வெறுங்கையாக மதீனாவுக்கு வருகிறார். வந்தவர் சில காலத்திற்குள் ஒரு பெரும் செல்வந்தராகவே மாறிப் போகிறார். ஆனால் அதே வரிசையில் அணிவகுத்து நின்று கொண்டிருந்த மிஸ்அப் பின் உமைர் என்பார் ஒருகாலத்தில் வாழ்க்கையின் ஒவ்வொரு ஓரத்தையும் சுவைத்துச் சுவைத்து அனுபவித்தவர். ஆனால் இன்று அவருடைய மேனியில் ஒரு முரட்டுக் கம்பளி ஆடை அதிலும் கணக்கில்லாத ஒட்டுக்கள். ஒரு போது நபியவர்கள் அவருடைய நிலையைக் கண்டு கண்ணீர் விடுகி;ன்றனர்.

இன்னும் அந்தக் கல்விசாலையில் தான் உமர், அலீ, இப்னு அப்பாஸ், இப்னு மஸ்வூத், உபை இப்னு க:ஃப் போன்ற பெரும் பெரும் அறிஞர்களும் தத்துவவாதிகளும் உருவாக்கப்படுகின்றனர். ஆம். அக்கல்விச் சாலையிலிருந்துதான் பிலால் போன்ற ஒரு மனிதரும் பயிற்சி பெற்று வெளிவருகிறார். ஆனால் அவருடைய வாழ்க்கை முழுவதுமே ஒரேயொரு மந்திரம்தான். அது '**அஹத்**' என்பதைத் தவிர வேறொன்றுமில்லை.

ஒருபக்கம் உமரின் கடுமையான நடவடிக்கைகளை பார்க்கும் நாம் இன்னொரு பக்கம் உஸ்மானின் இளகிய கசிந்துருகும் இரக்கத்தையும் பார்க்கிறோம்.

இதுபோன்றே ஒருபக்கம் கஃப்பின் மாலிக் போன்றவர் பல ஆண்டுகளாக வணக்க வழிபாடுகளை நிகழ்த்திய போதிலும் இறுதிவரை அறப்போரில் பங்குபெற முடியாமேலேயே போய்விடுகிறார். இன்னோர் பக்கம் உஸைரம் என்பார் ஒருவேளை கூட தொழாமல் இஸ்லாத்தை ஏற்றவுடனேயே போரில் பங்கு பெற்று வீர மரணத்தை எய்துகிறார்.

காலித் பின் வலீதை போன்ற போருக்குரிய நுணுக்கங்கள் பலவற்றையும் கற்ற படை வீரரும் படைகளின் அணியில் நிற்கிறார். ழராரைப் போன்ற கையில் ஆயுதமேதும் இல்லாத வெற்று மேனியாளரும் அதே அணியில் நின்று போருக்குத் தயாராகிறார்.

மிக்தாத் போன்ற எளிமையாளர் ஒருபக்கம் உஸாமாவை போன்ற வீரத்தில் வெகுண்டெழுபவர் இன்னொரு பக்கம் வெட்கத்தால் தனது உடலை கூனிக் குறுக்கிக் கொள்ளக் கூடிய உஸ்மான் வேறொரு பக்கம்.

பாத்திமாவைப் போன்ற ஈகையாளர் கூட இழுத்துப் போர்த்திக் கொண்டு தன்னை பிறருக்குக் காட்டாதிருப்பவர் ஒரு பக்கமென்றால் இன்னொரு பக்கம் கல்வியின் கலாச்சாலைகளை நடத்திக் கொண்டிருக்கும் ஆயிஷத போன்றேதார் வேறொரு பக்கம்.

இவர்கள் அனைவருமே போற்றுதலுக்குரியவர்கள். இறைவனுக்கு மிக மிக நெருக்கமான நல்லடியார்கள். இறைத்தூதரின் கண்களுக்குரிய நட்சத்திரங்கள். அண்ணலாரின்; அற்புதக் கரங்களால் வடிவமைக்கப்பட்ட நேர்வழியின் நடத்துனர்கள். இருந்தும் இவர்களுடைய பழக்க வழக்கங்கள், குணாதிசயங்கள், நடைமுறைகள், விருப்பு வெறுப்பு போன்றவைகள் ஒவ்வொன்றும் வெள;வேறானவை. வித்தியாசமானவை. இருந்தும் அவர்களை எந்தச்சக்தி ஒருங்கிணைத்தது என்பதை இன்று நாம் நமக்கு மத்தியில் சதாசர்வ நேரமும் உணரத் தலைப்பட்டு விட்டாலே போதும். நம்மிடையே ஒற்றுமை என்பது தானாக வந்துவிடாதா என்ன?

**இரண்டு:**

இறைவனுடைய இறுதித்தூதரான முஹம்மத் நபியளவர்களின் சமஸ்தானத்தில் இல்லாதவை என்று என்ன இருந்தன? அறிவைத் தேடுவோரது அறிஞர்களின் பல்கலைக்கழகமாக, செயல் முறையாளர்களின் கூட்டத்தைக் கொண்ட சர்வகலாசாலையாக, ஏற்பாட்டாளர்களின் ஏற்புடைய ஏகச்சாலையாக, பிரச்சாரகர்களின் பாசறையாக, வணக்க வழிபாட்டுக்காரர்களின் வணக்கப் பீடமாக, படைவீரர்களை வடிவமைக்கும் வல்லரசாக, இணக்கம் அமைதி மற்றும் ஆன்மீகவாதிகளை உருவாக்கும் ஆன்மீகத்தின் தலைமை பீடமாக, இப்படி நீதித்துறை, தவச்சாலை, மற்றும் அடிப்படைக் கல்வியைக் கொடுக்கும் பாலர் பள்ளிகளை உருவாக்கும் பல்கலைகழகங்களுக்கெல்லாம் பல்சுவைகளை கொண்ட பாசறையாக அது அமைந்திருந்தது என்று சொன்னால் மிகையாகாது.

முஹம்மத் நபியை நாம் மேற்காணும் துறைகளில் எந்தத்துறைக்கு உரியவர்களாக நம்மால் கணிக்கவோ அல்லது குறிப்பு காட்டவோ முடியும்? இவைகளில் நபியவர்களிடம் இல்லாதது

என்ன? எல்லாமே இருந்தன. இன்னும் இவைகளின்றி நமக்குத் தெரியாத எவ்வளவோ இருந்தன.

அங்கே ஆட்சியும் இருந்தது. அதிகாரமும் இருந்தது. எளிமையும் இருந்தது. ஈகையும் இருந்தது. ஆன்மீகமும் இருந்தது. அரசி;யலும் இருந்தது. ஏன் தினமும் தியானமும் இருந்தது. கோஷாவும் இருந்தது. பர்தாவும் இருந்தது. அறப்போரில் உயிரைத் தாரை வார்க்கும் பிரேமையும் இருந்தது. குழப்பங்களிலிருந்து விடுதலை பெறுவதற்குரிய வழியும் இருந்தது. வாழ்க்கைக்குரிய நடைமுறை போதனையும் இருந்தது. படைகளை வழிநடத்தும் பாதையும் இருந்தது. நேசப்பித்தர்களின் நீதிக்கூடமும் இருந்தது. வெளியில் பயணம் செய்தும் போதனை நடந்தது. எங்குமே வெளியில் செல்லாமல் அமர்ந்து கொண்டிருந்த நிலையிலும் போதனை நடந்தது. அதே நேரம் போதனைக்குரிய வழிமுறையும் அங்கே கற்பிக்கப்பட்டது. கல்வி நினைவுடையோரின் எண்ணத்தில் செலுத்தப்பட்டு பாதுகாக்கப்படுகிறது. அதே நேரம் ஏடுகளிலும் எழுத்து வடிவிலும் பாதுகாக்கப்படுகிறது. இஸ்லாமியரின் நலனில் அக்கறை கொள்ளப்படுவதைப் போல இஸ்லாமியல்லாதோரின் வாழ்வும் அக்கறைக்குரியதாக கொள்ளப்பட்டு அதற்குரிய திட்டங்களும் வகுக்கப்படுகின்றன. என்னதான் அங்கே இல்லை! கண்ணீரும் இருந்தது. அதேநேரம் கண்களில சந்தோஷமும் கரை புரண்டோடியது.

ஆம். எல்லாமே இருந்தன. அங்கே ஒரே நேரத்தில் சமூகம், பொருளாதாரம் கல்வி, கலாச்சாரம், பண்பாடு, அரசியல், ஆன்மீகம், சமூகவியல், வாழ்வியல், அறிவியல் என எல்லவற்றுக்கும் உரிய பணிகள் நடைபெற்று வந்தன. இன்று உலகில் எத்தனை கூட்டங்கள் பணயாற்றுகின்றன? இவையனைத்திலும் ஏதாவது ஒன்றையோ அல்லது சிலதையோ மட்டும்தான் தனது பணிக்குரியவைகளாக எடுத்துக் கொண்டுள்ளன. இதில் நமக்குள்ள வருத்தம் என்னவெனில், இவ்வாறு பணியாற்றும் ஒவ்வொரு கூட்டமும் தன்னை மட்டுமே நபியுடைய வழியில் இருப்பதாகவும் மற்றவைகளெல்லாம் வழிகேட்டில் இருப்பதாகவும் வாதிப்பதுதான்.

ஒருபக்கம் முஹம்மத் நபியவர்களின் விவரிக்க இயலாத கணக்கற்ற இணக்கத்திற்குரிய வாழ்வியல் போதனா முறைகள். ஆனால் அதை நடைமுறைபடுத்துவோர் உலகிலுள்ள ஒரு சிறு கூட்டம். இன்னொரு பக்கம் அந்த நபயவர்களுடைய அடிமைகளின் கால் தூசுக்குக் கூட சமமாக முடியாத மிக மிகப் பலவீனமான குறைந்த எண்ணிக்கையை கொண்டுள்ள மற்றொரு நடைமுறை கூட்டம். இதில் எந்தக் கூட்டமாவது நபியவர்களுடைய வாழ்வியல் துறைகளின் எல்லா பகுதிகளிலும் தாங்கள் பணியாற்றுகிறோம் என வாதிக்க முடியுமா?

ஆனால் குர்ஆன் இப்போது உலகில் இரண்டே இரண்டு கூட்டம் மட்டும்தான் இருப்பதாகக் கூறுகிறது. அதிலொன்று, '**ஹிஸ்புல்லாஹ்**' (அல்லாஹ்வின் கூட்டம்) மற்றொன்று '**ஹிஸ்புஷ் ஷைத்தான்**'(சாத்தானுடைய கூட்டம்.) இதில் உலகின் எந்தெந்தப் பகுதிகளில் என்னென்ன கூட்டங்கள் பணியாற்றிக் கொண்டுள்ளதோ அவைகள் அல்லாஹ்வுடைய கூட்டத்தின் பிரிவுகளில் ஒவ்வொரு பிரிவுமாகும். அவை நபிகளாரின் வழி முறைகளிலுள்ள ஒரு குறிப்பிட்ட பகுதியை அல்லது சில பகுதிகளை முன் வைத்து செயல்படுத்திக் கொண்டுள்ளன. இவ்வாறே உலகின் எந்தெந்தப் பகுதியில் மனோ இச்சைக்குரிய கூட்டங்கள் செயல்பட்டுக்

கொண்டுள்ளதோ அவையனைத்தும் சாத்தானின் கூட்டத்தின் பிரிவுகளில் காணப்படும் ஒவ்வொரு பிரிவுமாகும்.

என்னவொரு கைசேதம்! இன்று சாத்தானுடைய கூட்டத்தின் எல்லாப் பிரிவுகளும், அசத்தியத்தின் அத்தனை சக்திகளும் கைகோர்த்துக் கொண்டு ஒற்றுமையாக நிற்கின்றன. ஆனால் அல்லாஹ்வின் கூட்டமாகிய எல்லாப் பிரிவுகளும் தங்களுக்குள் கருத்து வேறுபாடு கொண்டு விரோதம் பாராட்டியவைகளாக சிதறிப் போய் ஒவ்வொரு பிரிவும் தனித்தனியாக தாங்கள் மட்டும் தான் அல்லாஹ்வின் கூட்டமென்று வாதிப்பதோடு மற்ற பிரிவுகளையெல்லாம் தவறானவர்களென்று குற்றம் சாட்டிக் கொண்டிருக்கிறது.

ஒவ்வொரு மனிதனுக்கும் தனித்தனியான எண்ணங்கள் இருப்பதைப் போன்று வெள;வேறான சிந்தனைளை கொண்டுள்ள ஒவ்வொரு பிரிவையும் இணைக்கின்ற பாலம், சக்தி இன்று இப்பூமியில் ஒன்றே ஒன்று மட்டும்தான். அதை எதுவரை நமக்கு மத்தியில் நாம் உணரவில்லயோ அதுவரை இந்த இடைவெளியும் விரிசலும் ஒருபோதும் நீங்காது என்பதைப் புரிநது செயலாற்ற முன்வர வேண்டும். அந்தப் பாலம் அல்லது சக்தி என்பது **'முஹம்மத்'** நபியவர்கள் மட்டுமே. ஸல்லல்லாஹு அலைஹி வஆலிஹி வஸஹ்பிஹி வஸல்லம்.

*முடிந்தது.*